# மங்கையர் மலர்

செப்டம்பர் '87 ரூ. 3.



# உங்கள் கேசத்திற்கு முழுப் பராமரிப்பு இப்பொழுது அளிக்கலாம்.

உங்கள் கேசத்தைப் பட்டு இழைபோல் ஆக்குங்கள்.

அதற்கு மினுமினுப்பு, மற்றும் பளபளப்பு ஊட்டுங்கள்.

மென்மையான கோகுல் ஹெர்பல் ஷாம்புவின் விசேட பராமரிப்புடன் அதனைக் கொஞ்ச விடுங்கள்.
இந்த ஷாம்புவில் உங்கள் கேசத்தைப் பதப்படுத்த அடங்கியுள்ளன, மருதாணியின் இயற்கை சாறு; கேசம் அடர்ந்து வளர, மற்றும் கேசத்திற்கு ஊட்டமளிக்க புரத சத்து. எனவே கேசம் ஆரோக்கியமாகத் தோற்றமளிக்க, வைட்டமின் சிகிச்சை பெறுகிறது.

இந்த ஷாம்பு, பெரும்பாலானவற்றைவிடசிறப்பாக உழைக்கிறது; சிறந்த விளைவுகளைத் தருகிறது. இன்றே உபயோகித்துப் பாருங்கள்; நாங்கள் கூறுவது நிச்சயமாக நிரூபணமாகும்.




**கோகுல்**

ஹெர்பல் ஷாம்பூ

Dattaram TSR 1C/87 TAM

உங்கள் கேசத்திற்குப் பரிசுத்தம், பதம் மற்றும் பராமரிப்பு அளித்திட.

# ஒரு 'ஆடைப் புரட்சி' வருகிறது!





வேகமான வாழ்க்கைக்கு......



பக்தியோடும் வழிபடலாம்....

கடந்த இரண்டு ஆண்டுகளில் கடைத் தெருக்களில் ஒரு திடீர் மாற்றம்! எங்கே பார்த்தாலும் வண்ண சுடிதார்கள், ஸ்கர்ட், லூஸ் ஷர்ட்ஸ். இளம் பெண்கள் பலரும் இந்த உடையை அணிய ஆரம்பித்திருக்கிறார்கள். மாடர்ன் உடைகள் பொருளாதாரத்தில் மேல்நிலையில் இருப்பவர்களுக்குத்தான் என்பதெல்லாம் இப்போது மாறி எல்லோரும் அணிய ஆரம்பித்திருக்கிறார்கள்.

இந்த 'உடை மாற்றத்'தின் பின்னணி என்ன? சமீபத்தில். சென்னை 'ஆழ்வார்ப்பேட்டையில் 'ஸ்டூடியோ — 5' என்ற பெயரில் நவீன உடைகள் விற்கும் கடை ஆரம்பித்



இருக்கும் திருமதி உஷா தியாகராஜன் விளக்குகிறார் —

''ஓரளவு திரைப்படங்களும் காரணம். நதியா வண்ண உடைகளை அணிந்த போது ஒரு பித்தே பிடித்து விட்டது என்று கூட சொல்லலாம். 'ஷில்பா' இந்த ரெடிமேட் துணிகளை முதன் முதலில் தொடக்கி வைத்தார்கள். இப்போது எங்கே பார்த்தாலும் இந்த ஆடைகள் இருக்கின்றன. ஒரு மிகப் பிரபலமான பட்டுப் புடைவைக் கடை முழுக்க, முழுக்க ரெடிமேட் உடைகளை மாட்டி வைத்திருக்கிறது!''

''ரெடிமேட் உடைகளில் பெண்களுக்குத் திடீரென்று இத்தனை மோகம் ஏற்பட்டதற்கு வேறு ஏதாவது காரணம் இருக்குமா?''

''இந்த ரெடிமேட் உடைகள் தரும் சௌகர்யம்தான் காரணம். புடைவைகளை ஒரு முறை வாங்கினால் வாங்கினதுதான். அதை மீண்டும் மீண்டும் கட்ட முடியாது. அதுவே ஒரு கறுப்பு ஸ்கர்ட் இருந்தால், அதை மஞ்சள், சிவப்பு, வெள்ளை எனப் பல மேல் ஷர்ட்ஸுக்குப் பயன்படுத்தலாம். நான்கு உடைகளை வைத்துக் கொண்டே 'காம்பினேஷனை' மாற்றி மாற்றி நாற்பது உடைகள் இருப்பது போலப் பிரமையேற்படுத்தலாம்.

இன்னும் எத்தனையோ சௌகர்யங்கள் இதில் இருக்கின்றன. ஒரு காட்டன் புடைவையானாலும் அதைக் கஞ்சி போட்டு 'அயர்ன்' செய்து ஒருமுறைதான் கட்ட முடியும். இந்த வேலைகளெல்லாம் 'மிக பிஸி'யான இன்றைய பெண்களுக்குச் சரிப்பட்டு வருவதில்லை.

ரெயிலில் போகிறோம்; சுடிதார் போட்டுக் கொண்டு தூங்கலாம். உடம்பு முழுக்க மூடி இருக்கும். ஆனால் புடைவையானால் இழுத்து இழுத்து விட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

காலையில் அவசரம் அவசரமாக வேலையை முடித்துக் கொண்டு கல்லூரிக்கோ, வேலைக்கோ ஓடுபவர்களுக்கு சுடிதார், பைஜாமா, இவைதான் எளிதானது. இந்தக் காலத்தில் 'இட்ட அடி நோக, எடுத்த அடி கொப்பளிக்க' அன்ன நடை நடக்க முடியுமா?''

''அது சரி, ஆனால் இந்த உடைகள் மிகவும் விலை ஜாஸ்தி போலிருக்கே...?''

''இல்லை, கணக்குப் போட்டால் புடைவைகளை விட குறைவுதான். ஒரு காட்டன் புடைவை வாங்கினால் கூட நூறு ரூபாய்க்குக் குறைந்து நல்ல புடைவை வராது. அதற்கப்புறம் மேட்சிங்காக ப்ளவுஸ், தைக்கக் கூலி, பாவாடை, புடைவைக்கு ஃபால்ஸ், அதற்கப்புறம் சலவைக்கு எனச் செலவுகள் எத்தனை இல்லை? இதையெல்லாம் கணக்குப் போடும்



• உஷா தியாகராஜன்

போது 'ரெடிமேட்' துணிகளை நூற்றைம்பது ரூபாய் செலவில் வாங்கிவிடலாம்!''

''அதெல்லாம் இருக்கட்டும். இப்படி 'மாடர்ன் ட்ரெஸ்'ஸாகத் தயாரிக்கிறீர்களே.. என்னதான் இருந்தாலும் நம்முடைய புடைவையின் அழகு வருமா? அதே சமயம் நமக்கென்று ஒரு கலாசாரம் இருக்கே, அது அழிந்து போயிடும்னு உங்களுக்கு வருத்தமாயில்லையா...?''

''இதெல்லாம் மாற்ற முடியாத கால ஓட்டத்தோட பாதிப்புகள்னுதான் சொல்லணும். அந்தக் காலத்தில் குமுட்டியில் சமைத்தார்கள். ஒன்பது கெஜம் மடிசார் புடைவை கட்டிண்டிருந்தாங்க. கையிலே எப்பவும் விசிறி. ஆனா இப்போ காலத்துக்கு ஏத்தா மாதிரி ஒவ்வொண்ணும் மாறலையா? அறு கெஜத்தையும் மிக்ஸியையும், குக்கரையும் ஏத்துக்கற மனப்பக்குவம் வந்தாச்சில்லையா? அதே போல இதுவும் கொஞ்ச நாட்களில் பழகிடும். புடைவைங்கறது கல்யாணம்ங்கிற விசேஷத்துக்கு மட்டுமே கட்டிக்கிற ஒரு வஸ்துவாயிடலாம்...'' என்று சிரிக்கிறார் உஷா தியாகராஜன்.

''இதனால கலாசார பாதிப்பு...''

''இதோ பாருங்க, நீங்க சொல்ற புடைவையையே அழகாகவும் கட்டிக்கலாம். அசிங்கமாகவும் கட்டிக்கலாம். இதைப் போன்ற நவீன உடைகளையும் கௌரவமாகவும் உடுத்தலாம். உடைங்கறது அணிபவர்களுடைய மனோபாவத்தைக் காட்டுகிற ஒரு அடையாளம்னு கூட சொல்லலாம். மனத்தில் கண்ணியம் இருந்தால் எந்த உடையையும் கண்ணியமா உடுத்த முடியும்.''

## ஃபாரெக்ஸ்®
## முதலான விருப்பம்!

# பாப்பா வளர்ச்சிக்கான திட உணவுகளில்
# பாசத்தாய் அளிக்கும் முதலிடம் ஃபாரெக்ஸ்®

தாய், தன் குழந்தைக்கு தேர்ந்தெடுக்கும் முதலான திட உணவு புதிய செழுமையான ஃபாரெக்ஸ். காரணம்:

பாப்பாவின் உடல் நலத்திற்கான புரதமும், ஜீரணத்திற்கு உகந்த கொழுப்புச் சத்தும் சரியான அளவில் கொண்டது.

பாப்பாவுக்கு ஆரோக்கியமான ரத்தத்தை தரவல்ல இரும்புச் சத்துள்ளது.

எலும்பும் பற்களும் வலுவோடு வளர்ந்திட கால்சியமும் ஃபாஸ்ஃபரஸும் 2:1 என்ற அளவில் சேர்க்கப்பட்டது.

தின்னத் தெவிட்டாதது; கலப்பதும் கொடுப்பதும் எளிது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தாலே போதும்.

**தாயன்பைக் கூறிடும்**
**தரமிக்க திட உணவு ஃபாரெக்ஸ்®**

CLARION/B/GX/15/203



இன்றைய மாடர்ன் டிரஸ் போடற எத்தனை குழந்தைகள் பக்தியோடு கோவில்ல வழிபடறதை பார்க்கிறோம்? வீட்டிலே அடக்கவொடுக்கமா வேலைசெய்ய றதைப் பார்க்கிறோம்?, மனிதாபிமானத் தோட ஊருக்கும் சேவை செய்யறாங்க. இதனால கலாசாரம் ஒண்ணும் போயிடாது. குழந்தைகளை நல்ல மனோபாவத்தோட வளர்க்கிறதில்தான் நம்ம கலாசாரம் இருக்கே தவிர, உடை உடுத்தறதில் இல்லை...!''

''இந்தக் கடையை பர்சனலா நீங்களே பார்த்துக்கிறீங்களே, உங்களுடைய அனுபவம் எப்படி இருக்கு...?''

ஒரு ரகசியம் சொல்லட்டுமா? 'மாடர்ன் டிரஸ்'ஸெல்லாம் இளம் பெண்கள்தானே போடறாங்கன்னு நினைக்கிறீங்க. இல்லை. நடுத்தர வயதுப் பெண்கள் நிறையப் பேர் சுடிதாரும், நைட்டியும் வாங்க ஆரம்பிச்சிருக்காங்க. என்னுடையதைப் போன்ற ரெடிமேட் கடைகளுக்கு நல்ல வியாபாரம். அதனால புதுப்புது கலர்கள், டிசைன்கள்னு நாங்க ரொம்ப முயற்சி எடுத்து அழகழகா ரெடிமேட் உடைகளைத் தயாரிக்கிறோம். நமக்கே தெரியாம ஒரு 'ஆடைப் புரட்சி'யே நடந்துக்கிட்டிருக்கு. இந்த விஞ்ஞான யுகத்திலே இதைத் தவிர்க்க முடியாது. ஆனா ஒரு கண்ணியமான கலாசாரத்தை நம்ப குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுத்துட்டோம்னா, நிச்சயமா இதில் அருவருப்பான திசை திருப்பம் எதுவும் இருக்காது. வண்ண மயமான எதிர் காலம் நிச்சயமா இருக்கு......''

என்கிறார் உஷா தியாகராஜன்.

— மஞ்சுளா ரமேஷ்

படங்கள்: யோகா, பி. ஈ. ரமணன்

அட்டை வண்ணப்படங்கள்:
அழ. காசி. விஸ்வநாதன்.

அட்டையில்: குமாரி ஸ்வேதா

இலவச இணைப்பு அட்டையில்:
குமாரி லக்ஷ்மி



# ஆவக்காய் ஊறுகாய்

ஆவக்காய் ஊறுகாய் செய்ய அடிபடாத மாங்காய்களாகப் பார்த்து வாங்க வேண்டும். அவை களில் அதிகமாக நார் இருக்கக் கூடாது. இனிப்பான மாங்காய் களாக இல்லாமல் சிறிது புளிப்புச் சுவையும் இருக்க வேண்டும். மாங்காய்களை சுத்தமாகக் கழுவி சுத்தமாகக் காய்ந்தபின் ஊறுகாய் போட வேண்டும். அதற்கு கடுகு, மஞ்சள் வெந்தயத்தை நன்றாக இடித்து இரண்டு முறை சலித்த பின் பயன்படுத்த வேண்டும். ஆவக்காய் ஊறுகாய்க்கு ஊற்றும் நல்லெண்ணெய் சுத்தமானதா யிருக்க வேண்டும். ஊறுகாயைப் போட்டு வைக்கும் ஜாடியோ பாத்திரமோ சுத்தமாகக் கழுவப் பட்டு ஈரமில்லாமல் துடைக்கப் பட்டிருக்க வேண்டும். ஊறுகாயை உபயோகிக்கும் போது தனியாக ஒரு பாட்டிலில் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். ஈர ஸ்பூன் அல்லது கரண்டியால் ஊறுகாயை எடுக்கக் கூடாது.

கொட்டையுடன் நறுக்கிய மாங் காய்த் துண்டுகள் — 5 டம்ளர்,
மிளகாய்ப் பொடி — 1 டம்ளர்,
உப்பு பொடி — 1 டம்ளர்,
கடுகு பொடி — முக்கால் டம்ளர்
வெந்தயப் பொடி — கால் டம்ளர்
நல்லெண்ணெய் — 1 டம்ளர்,
என்ற விகிதத்தில் ஆவக்காய் ஊறு காய் போட வேண்டும்.

— விசாலாட்சி



"என்ன அநியாயம்? குடிக்கறதுக்கே தண்ணி காணோம். இவங்க இப்படி 'வேஸ்ட்' பண்றாங்களே?"





"இப்படித்தான், ஏழு மலை தாண்டி, ஏழு கடல் தாண்டி..."

"ஒரு குடம் தண்ணி இழுத்ததாம் பூதம்..."







"சீக்கிரம் போடி, நம்ப வீட்டுக் குழாய்லேயும் தண்ணி வருதோ என்னவோ? போன வாரம் குளிச்சது!"



"ம்... மழை வராத வரைக்கும் நமக்கு நல்ல வியாபாரம்..."

"யார் ஃபர்ஸ்ட் வர்றாங்களோ, அவங்களுக்கு ஒரு ஸ்பூன் தண்ணி பரிசு கொடுப்பாங்களாம்...!"



புகைப்படங்கள்: எம். நடராஜன்
(அர்ச்சனா படம் தவிர)

''ஸிஸ்டர்''

சுசிலா நிமிர்ந்தாள்.

அவன் முகம் இறுக்கமாய் வியர்வை ஈரமாய் இருந்தது.

''எஸ்'' என்றாள் புன்னகையுடன்.

அவன் எச்சில் விழுங்கினான். ''ஸிஸ்டர்''

''சொல்லுங்க'' என்றாள்.

''ஸிஸ்டர், ஐ லவ் யூ..''

பாண்டேஜை கட்டிக்கொண்டிருந்த அவள் கை நின்றது ''வாட்?''

அவன் பதறி போனான் ''ஐயம் ஸாரி''

''ஜாக்ரதையா பேசாட்டி ஐ வில் கம்ப்ளெயின் வித் த டாக்டர்.''

''இல்லே ஸிஸ்டர் நான் வந்து..''

''ஜாக்ரதை. நான் நர்ஸ் நீங்க பேஷன்ட் அதுக்கு மேலே நீங்க சுதந்திரம் எடுத்துக்க கூடாது.''

''ஸிஸ்டர் நான் நெஜம்மாவே உங்களே.''

''ஷட் அப்..''

பாண்டேஜை கட்டிவிட்டு அவள் திரும்பி நடந்தாள். தூய. வெள்ளுடை குதி உயர் காலணி. தலையில் சிறு இறகு போல அந்த தொப்பி. ஒரு வெண்புறா போல.

அவன் உதட்டை கடித்துக் கொண்டான்.

டாக்டரிடம் கூறிவிடுவாளோ?'

மாட்டாள் என்று தோன்றியது.

படபடப்பும் வலியுமாய் கட்டிலில் புரண்டான்.

''சுசி, நான் விளையாட்டுக்கு சொல்லலே.''

அவள் இமைகள் படபடத்தன. அவள் கையில் பாண்டேஜை நிதானமாய்ச் சுற்றிக் கொண்டிருந்தாள்.

''நான் சொல்ல வேண்டியதை முழுக்க சொல்லிடறேன். அதுக்கப்புறம் உன் இஷ்டம், கம்ப்ளெயின்ட் பண்ணணும்னு பண்ணு''

அவனுக்குபேசபேசகுரல்தெளிவாகிவந்தது.

''பிளீஸ்'' என்றாள் அவள். குரல் விநோதமாய் உடைந்திருந்தது. உதடுகளும், இமைகளும் துடித்தன.

''ஐலவ் யூ சுசிலா எனக்கு விளக்க தெரியாது. உன்னை நான் விரும்பறேன். கலியாணம் பண்ணிக்க ஆசைப்படறேன். நீ சம்மதிச்சா.. பிளீஸ் உனக்கு என்னை பிடிச்சிருக்கான்னு சொல்லேன்...''

அவள், அவன் பாண்டேஜை முடித்து விட்டு உதட்டை கடித்தபடி கூஜாவை தூக்கி பார்த்தாள். தண்ணீர் இருந்தது கீழே பேசினை சரி செய்து வைத்தாள்.

''என்ன, பேசாம இருந்தா என்ன அர்த்தம்?''

''பிளீஸ் என்னை குழப்பாதீங்க''

''என்ன குழப்பம்? நான் ரொம்ப தெளிவா இருக்கேன், சுசி, இதோ பார்...''

அவள், அவனை சட்டையே செய்யவில்லே.

அவன் அவளையே பார்த்தபடி படுத்திருந்தான். அவளது அசைவுகளே அவனை பித்துக் கொள்ளச் செய்தன.

அவள் நடந்தாள்.

''ப்ளீஸ் மாத்திரையை சாப்பிடுங்க. மத்த பேஷன்ட்ஸ் எழும்பிட்டாங்கனா...''

''எழும்பட்டும் எல்லாரும் கேட்கட்டும்

# மோகம் நா



# எத்தனை
# ள்?

எனக்கு ரகசியம் இல்லை. நான் கேட்டதுக்கு என்ன பதில்?''

குரல் தாழ ''என்ன பதில்'' என்றான்.

''டூ யூ லவ் மீ?''

''பிளீஸ்.''

''என்ன பிளீஸ்?''

''நான் நர்ஸ். நீங்க பேஷண்ட். இதுக்கு மேல எதுவும் வேண்டாம்.''

''ஏன் வேண்டாம்?''

''வேண்டாம், சரியாகாது''

''ஏன்? அதைச் சொல்லு''

**ஜெயமோகன்**



''பிளீஸ்...''

''ஏன் எனக்கு என்ன குறை? இரண்டு பேருக்கும் வேலை இருக்கு. சுதந்திரமா வாழ என்ன பிராப்ளம்?''

''இல்லை மிஸ்டர் கல்யாண், இந்த ப்ரச்னைய உங்களால புரிஞ்சுக்க முடியாது.''

''ஏன். முடியாது, சுசி? இத பார் மூணு மாசமா எலும்பு ஒடிஞ்சு போய் இங்க படுத்திருக்கேன். நான் ரொம்ப வலி அனுபவிச்சாச்சு. நர்ஸுன்னு எத்தனை புனிதமான பதவின்னு எனக்குப் புரியாம வேறு யாருக்குப் புரியும்?''

''உங்களுக்குப் புரியலை. புரிஞ்சிருந்தா இப்படி கூற மாட்டீங்க.''

''ஏன் உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு அதில என்ன தப்பு?''

''உங்களை ஒரு பேஷண்டா நான் ட்ரீட் பண்றதை நீங்க வேற அர்த்தத்தில் எடுத்துக்கிட்டீங்கன்னுதானே இதுக்கு அர்த்தம்?''

''எந்த அர்த்தத்தில் எடுத்துகிட்டா என்ன? உன் லவ் எனக்கு வேணும், அதான்.''

''ப்ளீஸ், உங்க சொஸைடில எனக்கு மதிப்பு இருக்காது. நர்ஸுன்னு இளப்பமா பேசுவாங்க.''

''பேசட்டும். எனக்கு உன்னைப் பத்தி தெரியும், அது போதாதா?''

''அது இப்ப, வலியோட ஆஸ்பிடல்ல படுத்திருக்கப்ப நர்ஸ் தேவதை மாதிரி தான் இருப்பா வெளியே போயிட்டீங்கன்னு மனசு மாறிடும். பிளீஸ் என்னை வற்புறுத்தாதீங்க.''

''இதுக்கு மட்டும் பதில் சொல்லிட்டுப் போ. டூ யூ லவ் மீ?''

தயங்கினாள்.

மெலிந்த குரலில் ''ஐ ஜஸ்ட் டோண்ட் நோ'' என்றாள்.

''நான் நேத்து நைட் பூரா தூங்கலை'' 'ம்' என்றாள் மருந்தை கிளாஸில் ஊற்றியபடி.

''என்னால மறக்க முடியலை ஒரு நியாயமும் எனக்கு ஏற மாட்டேங்குது சுசி.''

''சாப்பிடுங்க'' என்றபடி மருந்தை விழுங்க வைத்தாள்.

உதடுகளை துடைத்தபடி ''மோகம் புட்டிக்குள்ள இருக்கிற பூதம் மாதிரிம்பாங்க, என்ன ஏதுன்னு தெரியாம தெறந்துட்டா அப்புறம்

திறந்தவுடனேயே கூட முடியாதாம். அந்த நிலைமையில நான் இருக்கேன்'' என்றான்.

''அனுவசியமா எதையாவது போட்டு குழப்பிக்காதீங்க.''

''உண்மையை சொல்லு. உன் மனசை நான் தொடலியா இதுவரை. நெஞ்சைத் தொட்டு சொல்லு. இல்லேன்னு மறுபடி பேச மாட்டேன்.''

அவள் கண்கள் தழைந்தன. ''நான் தான் என் ஃபேமிலில ஒரே ஏர்னிங் மெம்பர்.''

''நான் கேட்டதுக்கு பதிலா இது?''

''நான் என் குடும்பத்தை மறந்து ஒண்ணும் நினைக்க கூட முடியாது.''

''—அப்ப குடும்பம்தான் பி ர ச் ச னை இல்லியா? உனக்கு என்னை இஷ்டம் தானே?''

''எனக்கு ஒரே குழப்பமா இருக்கு!''

''எல்லாத்தயும் பேசி தீர்த்து வைக்கலாம்.. ஐ நீட் யூ..''

''நாளன்னிக்கு நீங்க டிஸ்சார்ஜ் ஆகறிங்க''

''டாக்டர் சொல்லிட்டாரா?''

''ம்''

''நான் உன்னைப் பார்க்க வருவேன்.''

''ம்? நிஜமா?''

''சத்தியமா! சுசி ஐ லவ் யூ''

''எனக்குப் பயமா இருக்கு நேத்து ராத்திரி முழுக்க நான் தூங்கலே''

''நைட் டியூட்டியா?''

''விளையாடாதீங்க. எனக்கு பயம்மா இருக்கு''

''என்ன பயம்? பைத்தியம் நான் இருக்கேன்ல?''

''என்னை மறந்திடமாட்டிங்களே. இதெல்லாம் ஞாபகம் இருக்குமா?''

''அசடு. அசடு. எதுக்குத்தான் கவலைப் படறதுன்னு வரம்பே இல்லியா என்ன?''

''எனக்குப் பயமா இருக்கு''

''விடு இதோ பார். வந்து மூணு மாசம் ஆகுது. நீ மசிஞ்சு வாவே முக்கால் நாள் ஆயிட்டது. போறதுக்கு முந்தி 'ப்ச்' குடுக்கணும் என்ன?''

என்னைப் பத்தி சிப்பா நினைக்கறிங்க''

''சீ எதுக்கெடுத்தாலும் இதே நினைப்பு தானா? சுசி! நான் உன்னை எவ்வளவு லவ் பண்றேன் தெரியுமா? ஒரு கவிதை சொல்லட்டுமா? சுகுமாரன் எழுதினது. 'உனக்கு தெரியும். உன் பெயர் வெறும் பெயரல்ல எனக்கு.''

''எனக்குப் பயமா இருக்கு.''

''ஏன் ஒரு மாதிரி இருக்கீங்க.''

''நான் வந்து அரை மணி நேரமாச்சு.''

''ஸாரி. லேட்டாயிட்டது. வாங்க போகலாம். வீட்ல என்ன சொன்னாங்க?''

''ப்ச''

''ஏன் டல்லா இருக்கீங்க?''

''ஏன் லேட்?''

''டாக்டர் இன்னம் போகலே''

''இத்தனை நாழி அந்த டாக்டர் பின்னாடி தானே சுத்திட்டு இருந்தே?''

''அது என் வேலை இல்லையா?''

''என்ன வேலை? ஈன்னு இளிக்கிறது?''

அவள் முகம் சிறுத்தது.

''நீ கொஞ்சம் டீஸண்டா பிஹேவ் பண்ணக் கத்துக்கணும். இப்படி கண்டவன் கிட்டயெல்லாம் இளிச்சா எவனாவது டாக்ஸின்னு நெனச்சுக்க போறான்.''

''கல்யாண்''

அவள் அடக்கிக் கொண்டாள்.

அவள் கண்களில் கண்ணீர்.

''ஏன் இப்டி பேசறீங்க?''

''நீ ஏன் இப்படி இருக்கே?''

''எப்படி?''

அவன் நெற்றியில் அடித்தான்.

''இதெல்லாம் பாத்துதானே இஷ்டம்னு சொன்னிங்க''

''இப்டின்னு யார் கண்டா?''

அவள் அதிர்ச்சியுடன் அவனைப் பார்த்தாள். அவன் முகத்தில் வெறுப்பு தெரிந்தது.

''கல்யாண், இது நான். சுசி''

''ம்''

''என்ன ஒரு வாரமா ஆளையே காணும்?''

''வீட்ல என்ன சொல்றாங்க, கல்யாண்?''

''எதைப்பத்தி''

''அதான்'' அவளுக்குத் திணறல் ஏற்பட்டது.

''நாம அதைப் பத்தி யோசிக்கணும் சுசி''

அவள் வயிறு பகீரிட்டது.

''என்ன சொல்றீங்க?''

''அப்பா வந்து ஒரு மாதிரி பேசறார்.''

''ஒரு மாதிரின்னா?''

''நர்ஸ்தானே, கண்டவனைத் தொடற வேலை அது. இதுன்னு வந்து அவர் ஒரு மாதிரி.''

அவள் சிறிதுநேரம் மவுனமானாள்.

அவன், அவளது மூச்சை மட்டும் கேட்டான்.

''சுசி''

''சுசி வந்து ஒரு விஷயம்''

''சொல்லுங்க.''

''நேர்ல பேசலாமே.''

''போன்லயே பேசலாம்.'' அவள் குரல் மாறியிருந்தது.

உபயோகப்படுத்திய குக்கர் கேஸ்கட்டை சிறிய சிறிய வட்டங்களாகக் கயிறில்கட்டி அதைக்கடப்பைக்கல்மேடைகளில் வைத்துக் கொண்டால் அதன் மீது சூடான பாத்திரங்களை வைத்தால் சீக்கிரத்தில் மேடை நிறம் மாறுவதைத் தவிர்க்கலாம்.

— பானு சுரேஷ்

“



வியாபாரியான நானறிவேன். அனைத்து பிரெஷர் குக்கர்களிலும் அதிகப் பாதுகாப்பானது புதிய பிரெஸ்டீஜ் தானென்று; அன்பு மனைவிக்கு நீங்கள் வாங்கும் புதிய பிரெஸ்டீஜ்— அவளின் பாதுகாப்பை நாடும் உங்கள் அக்கறைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

பாருங்களேன்!
அதன் பாதுகாப்பை!!
புதிய பிரெஸ்டீஜ் மட்டுமே 100% பாதுகாப்புள்ள சிறந்த காஸ் கெட் ரிலீஸ் சிஸ்டத்தைக் (ஜி.ஆர்.எஸ்.) கொண்டுள்ளது. சமையலின்போது வெயிட் துவாரம் அடைத்துக் கொண்டு விட்டால் குக்கரினுள் தங்கும் அதிகப்படியான நீராவியின் அழுத்தம் அருகிலிருப்போருக்கு அபாயத்தை விளைவித்துவிடும்.

100% SAFE




ஆனால் புதிய பிரெஸ்டீஜிலுள்ள ஜி.ஆர்.எஸ். அமைப்பு உபரியான நீராவியை உடனடியாய், பாதுகாப்பாய் கீழ்ப்புறமாய் வெளியேற்றி விடும்.



காஸ்கெட்டை ஒரு ஸ்பூனால் உள்ளே தள்ளிவிட்டு குக்கரை மீண்டும் உபயோகிக்கலாம். புதிய பிரெஸ்டீஜினுல் கடுகளவு கூட அபாயமில்லை. எக்காலத்திலும் எவ்வேளையிலும் உங்கள் பாதுகாப்புக்கு உறுதி கூறுகிறது — புதிய பிரெஸ்டீஜ். ”

# பிரியமுள்ள மனைவிக்கு பாதுகாப்பளிக்க என்றும் பிரெஸ்டீஜை வாங்குவீர்




## பிரெஸ்டீஜ்

TTK தயாரிப்பு

**புதிய பிரெஸ்டீஜ் மட்டுமே 100% பாதுகாப்பானது**
**புதிய பிரெஸ்டீஜில் மட்டுமே ஜி.ஆர்.எஸ். உள்ளது**

MAA(S)TTP 3F TAM 85



# அன்பார்ந்த வாசகர்களுக்கு,

ஒரு பத்திரிகை நடத்துவதற்கு முக்கிய மூலப் பொருள் நியூஸ் பிரிண்ட் எனப்படும் பத்திரிகைக் காகிதம். இதன் விலை சர்வ தேச மார்க்கெட்டில் சமீபத்தில் மிகவும் உயர்ந்து விட்டது. இந்தியாவிலும் இப்போது நியூஸ்பிரிண்ட் உற்பத்தி செய்யப் படுகிறது. ஆனால் அயல்நாட்டு நியூஸ் பிரிண்டுடன் ஒப்பிடுகையில் அதன் தரம் குறைவாகவும் விலை அதிகமாகவும் உள்ளது. அது மட்டுமல்ல. அயல் நாட்டு நியூஸ் பிரிண்டின் விலையும் இந்திய நியூஸ் பிரிண்டின் விலையும் சில மாதங்களில் மறுபடியும் மேலும் கணிசமாக உயரப் போவதற்கான அறி குறிகளும் உள்ளன. இந்தச் சூழ்நிலையில் **மங்கையர் மலரின்** விலையை அக்டோபர் மாதம் முதல் நான்கு ரூபாயாக உயர்த்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. தவிர்க்க முடியாத காரணங்களினால் செய்யப்படும் இந்த விலை உயர்வை வாசக அன்பர்கள் பொருட்படுத்தாமல் எப்போதும் போல் தொடர்ந்து உங்கள் மங்கையர் மலருக்கு ஆதரவு அளித்து வருமாறு வேண்டுகிறோம்.

நிர்வாகி,
மங்கையர் மலர்
கிண்டி, சென்னை.

''வந்து உன் ஜாப் வீட்ல யாருக்கும் பிடிக்கலை''

''வீட்லயா?''

''வந்து...''

''உங்களுக்குப் பிடிக்குதா?''

''சுசி''

''உங்களுக்கு என் ஜாப் பிடிக்குதா?''

''இல்லை''

''என்னை மட்டும் பிடிச்சிருக்காக்கும்?''

''சுசி, நான் நேர்ல வரேன்.''

''வேணும்.''

''ஏன்.''

''கல்யாண் இதோ பாருங்க என் ப்ரபஷன் வேற நான் வேற இல்லை. என் தொழில்தான் எனக்குத் தெய்வம். நர்ஸ் தொழிலை விட உயர்ந்த ஒரு தொழில் இருக்கிறதா எனக்குத் தெரியலை. வலியாலும், வேதனையாலும் துடிப்பவர்களுக்கு மருந்து கொடுத்து, ஆறுதல் சொல்லி... தெய்வத்திற்குச் சமமான ஒரு தொழில் ஓ... உங்களுக்கு அதெல்லாம் புரியாது...''

''ஆனா ஊர்ல...''

''ஊர் என்ன ஊர்? எனக்குத் தெரியும். உங்களுக்கெல்லாம் ஒரு சிரங்கு வந்துட்டா போதும் அய்யோ, அம்மான்னு எங்ககிட்டத் தான் வருவீங்க. பெத்தவங்களோ, பெத்த குழந்தைங்களோ கூட தொடமாட்டாங்க. நாங்க கழுவி கட்டுப் போட்டு சிசுருஷை பண்ணணும். அப்ப எங்களை கையெடுத்து கும்பிடுவீங்க...'' அவளுக்கு மூச்சிரைத்தது!

''சுசி, நாம அப்பறமா பேசலாம்.''

''—இப்பவே பேசி முடிச்சிரலாம். நோய் குணமாயிடுச்சின்னா, உங்களுக்கு நர்ஸுன்னா இளக்காரம், அலட்சியம்! என்னை அலட்சியப் படுத்தறவங்களை எனக்கும் அலட்சியம்தான்! கெட் லாஸ்ட் இனிமே எங்கிட்ட பேசாதீங்க. என்னைப் பாக்க வராதீங்க''

சுசி போனை வைத்தாள்.




## சமையல் கூப்பன்

**பொருள் : வடை**

**கடைசித் தேதி: 15.9.87**

................. என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்..

கையொப்பம்



# எல்லோரது எண்ணத்திலும் இனிப்பவராக..

சில பெண்கள் எத்தகைய விழாக்களுக்குச் சென்றாலும், கூட்டங்களில் பங்கு பெற்றாலும் அலுவலகத்திலும் எல்லோராலும்விரும்பப்படுபவராக விளங்குகிறார்கள். ஆனால் வேறு சிலரோ, எல்லோரது வெறுப்பிற்கும் ஆளாவதுடன், ஏகமனதாகப் பலராலும் ஒதுக்கப்படுகிறார்கள். இதற்குக்காரணம் அவரது பழக்கவழக்கங்களே. முயன்றால் எவரும் நல்ல பழக்கங்களை வழக்கப்படுத்திக் கொள்ளலாம்.

**தூய்மை**

கூடிய வரையில் சுத்தமான உடை உடுத்தி, தலையை நன்றாக வாரி, சுத்தமான முகத்துடன், கனிவாகப் பழக முற்படுங்கள் — சாதாரண காட்டன் சாரியைக் கூடக் கஞ்சி போட்டு உடுத்தும் போது ஒரு கௌரவமான தோற்றம் வருகிறது. தூய்மை எவரையும் எளிதில் ஈர்க்கும் என்பதில் ஐயமில்லை.

**சிநேகித மனப்பான்மை**

நாம் சந்திக்கின்ற ஒவ்வொருவரிடமும் நாம் கற்க வேண்டிய மேன்மையான பழக்கம் ஏதேனும் இருக்கக் கூடும் என்ற எண்ணத்துடன் பிறரை அணுக வேண்டும். பார்க்கும்போதே இவளிடம் என்ன குறை கண்டுபிடிக்க முடியும் எனப் பார்த்தால், பேசினால், மற்றவர்கள் கிட்டே வர அஞ்சுவார்கள்.

**உதவுகின்ற தன்மை**

மனித வாழ்க்கை மிகவும் அற்புதமானது. ஒவ்வொரு நாளும் பிறருக்கு நம்மாலான ஒரு சிறிய உதவியை, பலன் கருதாது செய்ய முற்பட்டால் வாழ்க்கை எவ்வளவு அர்த்தமுள்ளதென விளங்கும். இக்கட்டான சந்தர்ப்பங்களில், எதிர்பாராத உதவி செய்ய முற்பட்டோமேயானால், உதவி பெறுபவர்களின் எண்ணத்தில் எத்தகைய உயர்ந்த இடம் பெறுகிறோம் என்பதை அனுபவத்தில்தான் உணர முடியும்.

**இனிமை**

கனிவான, இதமான வார்த்தைகளை விட இனிமையானது எதுவும் இல்லை., கூடியவரை கடும்சொற்களை அறவே தவிர்க்கும் பழக்கத்தை வழக்கமாக்கிக் கொண்டால் சகிப்புத்தன்மை தானாகவே வளர்ந்து விடும் என்பது மறுக்க முடியாத உண்மை.

பேசா மடந்தையாகவோ, அம்முக்குள்ளியாகவோ இருப்பவர்களை எவரும் நெருங்க மாட்டார்கள்.

**மனிதத் தன்மை**

வாழ்க்கையில் ஒவ்வொருவருக்கும் ஒரு விதப் பிரச்னை. பிறரது பிரச்னைகளை வெளிப்படையாகப் பலர் முன் கேட்பது மிகவும் அருவருக்கத் தக்க விஷயம். (உ—ம்) குழந்தைஇல்லாதஒருவரை, 'டாக்டரிடம் செக் அப் செய்துக்கலையா?' என்று கேட்பது. கல்யாண வயதிலுள்ள பெண்ணை 'வயசு ஏறிண்டே போறதே. எப்போ கல்யாண சாப்பாடு போடுவதாய் உத்தேசம்' என வினவுவது போன்றவை.) அத்தகைய குறைகள் நம்மிடம் இருக்குமானால் நம்மை மற்றவர்கள் எப்படி நடத்த வேண்டுமென ஒரு கணம் எண்ணிப் பாருங்கள்.

கூடிய வரையில் பிறர் மனத்தைப் புண்படுத்தக் கூடிய பிரச்னைகளைப் பொதுவில் அலச வேண்டாம். மனத்தை உறுத்தும் கமெண்ட்ஸ்களையும் தவிர்க்க முற்படுங்கள்.

**புன்னகை மாறாமை**

எவ்வளவு களைப்போ, அலுப்போ இருந்தாலும் சந்திப்பவர்களை மனந்திறந்த சிரிப்புடன் அணுகுவது வரவேற்கத்தக்க பழக்கம். 'சிரித்த முகம் ஸ்ரீ தேவிகளை' என்பது நூற்றுக்கு நூறு உண்மையான வாசகம். பொன் நகையை விடப் புன்னகை

முகத்திற்குப் பொலிவூட்டும். உடலிற்கும் வலுவூட்டும்.

**பணிவுடைமை**

நம்மை விட உயர்ந்தவர்களாயினும் செல்வத்தில் தாழ்ந்தவர்களாயினும், பெரியவர்களைப் பணிவுடன் அணுகுவது அவசியம். இங்கு நான் குறிப்பிடுவது காக்காய் பிடிப்பதோ, நடிப்போ அல்ல. உளமாற நினைந்து பணிதல் — இதனால் நமக்கு எந்தவித நஷ்டமும் இல்லை. இப் பண்பு நம்மைவிட செல்வாக்கில் நலிந்தவர்களிடையே நம்மை உயர்த்திக் காட்டும். செல்வத்தில் உயர்ந்தவர்களிடம் நன்மதிப்பை நிலைநாட்டும்.

**நெருங்குகின்ற தன்மை**

ஒரு சிலரது குறைகளுக்கு நாம் நிவர்த்தி செய்யக் கூடிய நிலையிலோ, ஆலோசனை சொல்லக் கூடிய திறம் படைத்தவர்களாகவோ இருப்போம். அத்தகைய சூழ்நிலையில், அவர்களைத் தனிமையில் அழைத்து, 'என்னால் உனக்கு சந்தோஷம் ஏற்படுத்த முடியும் என்ற நம்பிக்கையில்தான் இதை உனக்குக் கூறுகிறேன் என்பதைத் தெளிவாக கனிவாக, பொறுமையாக எடுத்துரைத்து, உதவ முற்படுங்கள். இது நெருக்கமான நட்புறவை உறுதிப் படுத்தும்.

**நம்பிக்கைக்குப் பாத்திரமாதல்**

நம்மிடம் மன ஆறுதலுக்காகவோ அறிவுரை பெறுவதற்காகவோ தங்கள் சொந்த வாழ்க்கையின், அந்தரங்கங்களை எவரேனும் எடுத்துரைத்தால் அவை நம்மிடமே ரகசியமாக இருக்க வேண்டுமேயன்றி நம்மால் வெளிவரக் கூடாது. இத்தகைய பண்பை வளர்த்துக் கொள்வது சிறிது கடினமானது என்றாலும் அசையாத நம்பிக்கைக்குப் பாத்திரமாகின்றவர்கள் பலருக்கு அந்தரங்க நண்பர்களாக ஆயுள் முழுவதும் நிலைத்து விடுகிறார்கள்.

இதுபோன்று இன்னும் வரவேற்கத் தக்க பண்புகள் எத்தனையோ உள்ளன. மற்றவர்களிடம் அத்தகைய உயர்ந்த பண்புகளைக் காணும் போது மனதார வரவேற்பதுடன், திட்டவட்டமான முடிவுடன், முயற்சி செய்து அப்பழக்கங்களை வழக்கமாக்கிக் கொண்டோமேயானால் எல்லோருக்கும் இனியவராக என்றென்றும் விளங்குவோம் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

— டாக்டர் கலா கமலாகர் ராவ்

# தைக்குப் பின் மாசி?

இது தைக்குப் பின் வரும் மாசியல்ல. பார்வைக்குச் சிறிய விறகுக் கட்டைபோல் தோன்றும் ஒரு மீன் கருவாடு ஆகும். மாசி என்று அழைக்கப்படும் இக்கருவாடு அசைவ உணவுப் பிரியர்களை நிச்சயம் கவரும். இலங்கை வாழ் தமிழ் மக்களால் விரும்பி உண்ணப்பட்ட மாசி, இப்பொழுது மெட்ரூஸ், திருச்சி, மதுரை போன்ற பெரிய ஊர்களில் கிடைக்கிறது.

இதை நீரில் நன்றாகக் கழுவி வெயிலில் காய வைத்து ஈரம் காய்ந்ததும் உரலில் போட்டு இடித்துச் சிறுசிறு துண்டுகளானதும் எடுத்து பாட்டிலில் போட்டு வைத்துக் கொள்ளலாம்.

பருப்பு,வெங்காயம்சேரும்உணவைத் தவிர எல்லாவகைக் கூட்டுகளிலும் இதை ருசிக்குத் தக்கவாறு சேர்க்கலாம். இதைச் சகோதரிகள் அனுபவத்தில் கண்டறியலாம். விசேஷமாக முட்டை ஆம்லெட்டுக்கு வெங்காயத்துடன் மாசியும் சேர்த்தால் சுவை அபாரமாயிருக்கும்.

வரமிளகாய், மாசி, சிறிது புளி, சின்ன வெங்காயம் சேர்த்துத் திடீர்த் துவையல் தயார் செய்யலாம். பொதுவாய் மாசியுடன் சின்ன வெங்காயம் அதிகம் இணைவது நல்ல ருசியைத் தரும்.

— கே. ஜோதிராணி.

# நவராத்திரி நாயகிகள் — சுபயோகம் விவேகா

படம்:
















ஐயனே! மன்னிக்க வேண்டும். என்னால் இப்போது கொடுக்க முடிந்தது இந்த நெல்லிக் காய் ஒன்றுதான்! மனமுவந்து ஏற்றுக் கொள்ளுங்கள்!
மகிழ்ந்தேன் தாயே! இந்த நெல்லிக் காய் என் வயிற்றுப் பசியை மட்டுமல்ல; உங்களுடைய வறுமைப் பிணியையும் தீர்க்கும்!


ஆதி சங்கரர் மகாலட்சுமியைத் துதித்துக் 'கனக தாரா ஸ்தோத்திரத்தைப் பாட...
அங்கம் ஹரேர்: புளக பூஷணம்...
அலை மகளான அன்னை அங்கு பொன் மழையாகப் பொழிந்தாள்...


வீரம்
மகிஷாசுரனின் கொடுமையால் தேவகுலத்தினர் அவதிப் பட்ட போது...


துஷ்ட நிக்ரகம் செய்யும் துர்க்கா தேவி அசுர வர்க்கத்தை அழித்தாள்...
விண்ணுலகுக்கும் மண்ணுலகுக்கும் காவல் தெய்வமாய் விளங்குகிறாள், மலைமகளான பார்வதி...


ஐக்கியம்
கல்வியா? செல்வமா? வீரமா? எது முக்கியம்?
மூன்றுமே நமக்கு அவசியம்தான்!..

அதனால்தான் கல்விக்கு அதிபதியான சரஸ்வதியையும், செல்வத்துக்கு அதிபதியான லட்சுமியையும், வீரத்துக்கு அதிபதியான பார்வதியையும் ஒன்றாகச் சேர்த்து நவராத்திரி பூஜையின் போது வழிபடுகிறோம்!

சரி... நாளைக்கு நவராத்திரி பூஜை ஆரம்பம். ஞாபகம் இருக்கிறதா? கொலு வைத்திருக்கிறேன். அவசியம் நாளைக்கு வீட்டுக்கு வந்துவிடுங்கள்!

ஓ! நிச்சயமாக!

நவராத்திரி பூஜைக்கு முன்-

கொலு வைப்பதால் என்ன பிரயோஜனம் மாமி?

முதல் கட்டமாய் வீடு சுத்தமாகிறது; அழகாகிறது; மங்களகரமாக இருக்கிறது!

அது மட்டுமா? அழகுப் பொருள்களைச் சேகரிக்கிறோம். குழந்தைகளை ஆட வைக்கிறோம்; பாட வைக்கிறோம். நாமும் நமக்குத் தெரிந்த கலை நுட்பத் திறமைகளைக் காட்டுகிறோம்.

இதோ பாருங்கள்! வீட்டுக்கு வீடு சந்தோஷமாக எத்தனை பேர் சேர்ந்திருக்கிறோம்!... நட்பு, ஒற்றுமை, பெருந்தன்மை, விருந்தோம்பல் இவ்வளவும் வளர்வதற்கு இது சந்தர்ப்பமாகிறதே!

பக்தியும் கலாச்சாரமும் பண்பாடும் வீட்டுக்கு வீடு வெளிப்படுவது நவராத்திரி விழாவில் தான்!

## வழிபாடு

நவராத்திரி பூஜையைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்!

ஒவ்வொரு வருடமும் புரட்டாசி மாதம் அமாவாசைக்குப் பிறகு வருகிற வளர்பிறை பிரதமை தினத்தில் நவராத்திரி பூஜையை ஆரம்பித்துக் கொள்ள வேண்டும்.

அன்றிலிருந்து ஒன்பது நாட்களுக்கு நவமி திதி வரையிலும் பூஜை. முதல் மூன்று நாட்கள் துர்க்கைக்கு, அடுத்த மூன்று நாட்கள் லட்சுமிக்கு, கடைசி மூன்று நாட்கள் சரஸ்வதிக்கு என்று வழிபட வேண்டும்.

இதனால் நல்ல பலன் உண்டு என்கிறீர்கள்?

அதிலே என்ன சந்தேகம்?

திருமாலின் அவதாரமான ஸ்ரீ ராமபிரானே, நவராத்திரி பூஜை செய்து பெற்ற சக்தியால் ராவணனை வதம் செய்து தருமத்தை நிலை நாட்டினார்...



மகாபாரத யுத்தத்தில் ஜெயம் பெற, தரும புத்திரனும் நவராத்திரி பூஜையை நடத்தியிருக்கிறான்...



மாங்கல்ய பாக்கியம் வேண்டி, பதிவிரதையான சாவித்திரி கடைப்பிடித்ததும் இந்த நவராத்திரி விரதமே!



நவராத்திரி நாயகிகளை நாமும் வழிபட்டு நலம் பெறலாம்!..



# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் முதற் சுவையிலிருந்தே.

நான்கு மாதங்கள் ஆகும்பொழுது உங்கள் குழந்தைக்கு பாலுடன் கூட திட உணவும் தேவை. அவனுக்கு ஸெரிலாக்கின் அனுகூலங்களைப் புகட்ட இதுவே உகந்த வேளை.

**போஷாக்கு அனுகூலம்:**
ஒவ்வொரு தடவை ஸெரிலாக ஊட்டும்பொழுதும் உங்கள் குழந்தைக்குத் தேவையான புரத சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின் மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்கு சத்துக்களும் அவனுக்கு கிடைக்கின்றன. அத்துடன் குழந்தையின் விசேஷ தேவைக்கு ஏற்றபடி சரியான விகிதத்தில் தயாரிக்கப்பட்டுள்ளன.

**சுவையில் அனுகூலம்:**
ஸெரிலாக் நலம் தரும் போஷாக்குடன் நல்ல சுவையும் கொண்டது. ஸெரிலாக சுவை என்றாலே குழந்தைகளுக்கு கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:**
ஸெரிலாக் குழந்தை உண்பதற்கேற்ப முன்கூட்டியே பதமாக்கப்பட்டுள்ளது. கொதிக்க வைத்து ஆறிய வெதுவெதுப்பான நீரில் கலந்தால் போதும். நொடியில் தயார் ஸெரிலாக் உணவு.

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:**
உங்கள் குழந்தை உணவை இன்னும் விரும்பி உண்ண இப்பொழுது ஸெரிலாக இரு விதங்களில் வருகிறது. நான்கு மாதங்களிலிருந்து ஸெரிலாக் வீட், ஆறு மாதங்களிலிருந்து ஸெரிலாக் ஆப்பிள்.

சுகாதாரமான முறையில் உணவு தயாரிக்கவும், உங்கள் குழந்தைக்கு சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.

> இலவசம்:
> குழந்தையின் 'ஹெல்த் கார்ட் புத்தகம்'
> பெற எழுதவும்: ஸெரிலாக், தபால் பெட்டி எண்-3, புது தில்லி-110 008.










**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RKSWAMY/FSL/4757 TM




பிறந்த தேதி 1, 10, 19, 28 மற்றும் பெயர் எண் 1:

இந்த மாதம் உங்களுக்குக் குருவின் அருட்பார்வை அபரிமிதமாக இருக்கிறது. அதனால் உங்களுக்கு நன்மைகள் ஏற்பட வாய்ப்பு உண்டு. உங்கள் செயல்கள் வெற்றியைத் தரும். ரோஜா நிறத்தில் உள்ள ஒரு நபரால் உங்களுக்கு உதவி கிடைக்கும். மேலதிகாரிகளைப் பார்த்துப் பயனடைய இம்மாதம் ஏற்றது. குடும்பத்தில் குதூகலமும், லட்சுமி கடாட்சமும் குறைவின்றி இருக்கும். ஆயினும் ஒரு சிலருக்குக் குறிப்பாகப் பெயர் எண் 8, 9 ஆக இருப்பவர்களுக்கு வாகன கண்டம் ஏற்பட்டு, குருவின் அருளால் ஆபத்து அதிகமின்றித் தப்பலாம். தட்சிணாமூர்த்தியையும், காயத்ரியையும் ஆராதியுங்கள். 4, 3, 22, 5, 14, 1, 10 ஆகிய தேதிகள் ஏற்றவை. 8, 9, 17, 18 ஆகிய தேதிகள் ஆகாது.

பிறந்த தேதி 2, 11, 20, 29 மற்றும் பெயர் எண் 2:

உங்களுக்கு நன்மையும் தீமையும் கலந்து நடக்கும் மாதம். ஒரு சிலருக்குக் கடற்கரையோர நகரங்களிலிருந்து நல்ல செய்திகள் வரும். சிலருக்கு வயிற்றுக் கோளாறு ஏற்படக் காரணம் உண்டு. மாதத்தின் பிற்பகுதியில் செலவினம் அதிகமாகும். முன்கோபத்திற்கும் உணர்ச்சிக்கும் ஆளாக வேண்டியிருக்கலாம். அதற்கு இடம்தர வேண்டாம். கணவன் மனைவி உறவில் சிறு விரிசல் ஏற்பட்டுப் பிறகு சரியாகும். 20 ஆம் தேதிக்குப் பின் நிலைமை சீர்ப்படும். விழாக்களுக்கும் வரவேற்புகளுக்கும் செல்லும் போது அதிகம் பேசாதிருத்தல் நலம். வீண் வம்புகளுக்கு வாய்ப்பு உள்ளது. அதைத் தவிர்க்கலாம். 2, 7, 11 தேதிகள் ஏற்றவை. மற்ற தேதிகள் சுமாரானவை.

பிறந்த தேதி 3, 12, 21, 30 மற்றும் பெயர் எண் 3:

உங்கள் எண்ணின் நாயகன் வக்கிர கதியில் மேஷத்தில் இருக்கிறார். இந்த மாதம் உங்களுக்கு நன்மைகள் கூடுதலாக இருக்கும். 10 ஆம் தேதிக்கு மேல் குடும்பத்தில் சிறு சலனம் ஒன்று ஏற்பட்டு, அதனால் இரண்டொரு நாட்களில் சஞ்சலம் ஏற்பட வேண்டியிருக்கும். சிலருக்குப் புது வஸ்திரங்களும், பிரயாணங்களும் கேளிக்கைகளில் பங்கேற்க வேண்டிய நிலையும் ஏற்படும். சிலருக்கு உல்லாசப் பிரயாணத்திற்கு வாய்ப்பு உண்டு. வைணவத் தலங்களுக்குச் சென்று திருமாலை வேண்டுவதும் சிவன் கோவிலுக்குச் சென்று வழிபடுவதும் நன்று. 3, 12, 30 ஆகிய தேதிகள் பயன் தரும். 5, 7, 9 தேதிகள் ஒதுக்கப்பட வேண்டியவை.

பிறந்த தேதி 4, 13, 22 மற்றும் பெயர் எண் 4:

பெரும்பாலும் நல்லவையே நடக்கும். ஒரு சிலர் இராமேஸ்வரம், காளஹஸ்தி மற்றும் தேவிப்பட்டினத்திற்கு அருகில் உள்ள நவபாஷனம் கோவிலுக்குச் செல்லும் வாய்ப்பு ஏற்படலாம். சிலருக்கு மனத்தில் சஞ்சலம் இருக்கும். உங்களில் சிலர் உத்தியோகத்தில் இருந்தால் பதவி உயர்வு பெறுவார்கள். ஒரு சிலருக்கு இட மாற்றம் ஏற்படும். அப்படி ஏற்படும் மாற்றங்கள் நன்மையைத் தரும். வெளிநாட்டுப் பிரயாணம் சிலருக்கு ஏற்படும். கலைஞர்களும், விஞ்ஞானிகளும் பாராட்டுப் பெறுவார்கள். ஏற்ற தேதிகள் 4 ம், அதன் தொடர் எண்களும் பயன்தரக் கூடியவை. 1, 10, 22 ஆகிய தேதிகள் நன்மை தரும். 7, 8 தேதிகள் உதவாதவை.

பிறந்த தேதி 5, 14, 23 மற்றும் பெயர் எண் 5:

உங்கள் எண்ணின் நாயகன் யோக ராசியில் இருக்கிறார். எனவே ராஜயோகத்தைப் பெறுவீர்கள். எடுத்த காரியங்களில் வெற்றி

ஏற்படும். கவிஞர்களாக இருந்தால் சிறந்த கவிதைகளுக்குரிய பரிசைப் பெறுவார்கள். எழுத்தாளர்கள் புதியதொரு நவீனத்தைக் கற்பனைத் திறனுடன் படைப்பதற்கு ஏற்ற காலம். விளையாட்டு வீரர்களும் இம்மாதத்திலும், அடுத்த மாதத்திலும் நல்ல வெற்றியை அடைவார்கள். 5, 6, 14, 24 ஆகிய தேதிகள் ஏற்றவை. 9 ஆம் தேதி எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

*பிறந்த தேதி 6, 15, 24 மற்றும் பெயர் எண் 6:*

இம்மாதம் பூராவும் நன்மையைத் தரும். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் கைகூடி வரும். பல விழாக்களில் கலந்து கொள்வதும், புது நண்பர்களை அறிமுகப் படுத்திக் கொள்வதும் போன்ற வாய்ப்பு சிலருக்கு ஏற்படும். புதிதாகத் தொழில்கள் ஆரம்பிக்கலாம். படக்காட்சித் துறையில் உள்ளவர்களுக்கும், புதிய திரையரங்கங்களைத் திறக்க உள்ளவர்களுக்கும், உணவு விடுதி ஆரம்பிப்பதற்கும் ஏற்ற தருணம் இது. இந்த வாய்ப்பினை நழுவ விடாதீர்கள். புதுமனை புகுவிழா சிலர் நடத்துவீர்கள். சிலருக்குக் குடியிருப்பு மாற்றமும், பதவியேற்றமும் ஏற்படலாம். எதையும் திட்டமிட்டுச் செயல்படுங்கள். எல்லாத் தேதிகளும் ஏற்றவையே.

*பிறந்த தேதி 7, 16, 25 மற்றும் பெயர் எண் 7:*

இந்தமாதத்தில்எதிர்காலத்திற்குரியதிட்டமிடுதல் நன்மையைத் தரும். அத்துடன் ஆக்கப் பூர்வமானதாக அந்தத் திட்டங்கள் அமைவதுடன் அவற்றை நிறைவேற்றுவதற்கான வாய்ப்பு உங்களை வந்தடையும். உடல், உள்ளம், ஆகிய இரண்டும் சுறுசுறுப்புடன் இயங்க வேண்டிய காலம். நீங்கள் எதையும் முன்னின்று நீங்களே தலையிட்டு செயல்களைச் செய்தீர்களேயானால் வெற்றித் தேவதை உங்களை நாடி வரும். கறுப்பு நிறமுள்ள ஒருவரின் உதவி உங்களைப் பெரிதும் முன்னேற்றப் பாதையில் செலுத்தும். குறிப்பாக இந்த மாதம் உங்களுக்கு மன அலைச்சலும், உடல் உழைப்பும் அதிகம் ஏற்படும் கால கட்டமாக இருக்கும். கடற்பிரயாணம் சிலருக்கு அமையும். 2, 11, 7, 16, 25 ஆகிய தேதிகள் உகந்தவை. 3, 6 ஏற்றவையல்ல.

*பிறந்த தேதி 8, 17, 26 மற்றும் பெயர் எண் 8:*

இந்த மாதம் உங்களுக்குக் கூடுதலாக நன்மை ஏற்படும். பொறுப்பும் அதிகமாக இருக்கும். எதிர்பாராத தன லாபம் உண்டு. பழைய கடன்கள் கட்டுக்குள் அடங்கி இருக்கும். புதிய கடன் வாங்க வேண்டி இருக்காது. இரும்பு, இரசாயனம் மற்றும் கார, அமிலத் தொழில்கள் முன்னேற்றத்தைக் காணலாம். வெளியூர்ப் பிரயாணங்கள் அடிக்கடி ஏற்படும். சிலருக்கு எதிர்பாராத செலவினங்கள் ஏற்பட்டு சமாளிக்க வேண்டியிருக்கும் 5, 6, 8 தேதிகள் உகந்தவை. மற்றவை அல்ல.

*பிறந்த தேதி 9, 18, 27 மற்றும் பெயர் எண் 9:*

தெய்வீகப் பணிகளில் ஈடுபாடு அதிகம் இருக்கும். தெய்வங்களை வணங்குவதால் பலன் கைமேல் கிடைக்கும். ஒரு சிலர் இயானம், இறைவழிபாடு ஆன்மீகத்துறை இவற்றில் மிகுந்த ஈடுபாடு கொள்ள வேண்டியிருக்கும். சமயத்துறையில் சொற்பொழிவாற்றுபவர்கள் நன்கு பயன் பெறுவார்கள். தல யாத்திரைகள், இன்பச் சுற்றுலாக்கள் சிலருக்கு ஏற்படும். பழனி முருகனை ஆராதிப்பது பலனை அளிக்கும். 9, 18, 27, 6, 15 ஆகிய தேதிகள் வெற்றியும், மிகவும் ஏற்றமுடையவையாகும். மற்ற தேதிகளில் வெற்றியும், தோல்வியும் ஏற்படக் காரணம் உண்டு.

— **ஜெயலட்சுமி கிருஷ்ணன்**

# கலைமகள் கடாட்சம் உண்டா?

மேடுகளின் மேன்மையையும், ரேகைகளின் இயற்பெயரையும் அறிந்து கொண்டோம். குறிப்பாகக் கிரக மேடுகளில் மிகச் சிறந்தது குரு மேடாகும். தட்சிணாமூர்த்திக்குரிய அந்த மேட்டிலே தான் பிரம்மாவும் இருக்கிறார் என்பதைக் கண்டோம். நான்முகனின் நாக்கில் உறைகின்ற தெய்வமே கலைவாணி எனும் சரஸ்வதி. நமது



வாக்கிலே ஒளியை ஊட்டுபவள் நாமகள். ஆகவே உள்ளங்கையில் எவரையும் சுட்டிக் காட்டுகின்ற சுட்டு சுரலுக்கு அடியில் நான்முகனின் நாவில் அமர்ந்துள்ள நாமகள் நமக்குக் கல்வியினை, நமது வாக்கிலே இருக்க வேண்டிய ஒளியினை தந்து நம்மை ஆளாக்குகிறாள். எனவேதான் குருமேட்டின் நாயகனை குருவை ஞான கர்ரகன் எனப் போற்றுகின்றார்கள். அத்தகைய ஞான ஒளியை கலைமகள் மூலமாக நாம் பெற குருமேடு நன்கு அமைய வேண்டும்.

அம்மேட்டில் ஒரு செங்குத்துக் கோடு (c — d) இருந்தால், அதே போன்றதொரு ரேகை சூரியமேட்டில் (a — b) அமையும். இவ்வாறு இரண்டு கோடுகளையுமுடைய பெண்கள் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்குவார்கள். இசையிலும், ஓவியத்திலும், நாட்டியக் கலையிலும் புகழ் பெறுவார்கள். அவர்கள் வாக்கில், நடையிலே, ஓர் தனி இனம் இருக்கும். வீணை இசைப்பதில் அவர்கள் வல்லவர்களாக இருப்பார்கள். அந்த சுட்டு விரலின் அடியில் உள்ள நாமகள் தான் அந்த விரலுக்குரிய ஆற்றலைத் தந்து வீணை வாசிப்பவர்களுக்குப் பெருமை தேடித் தருகிறாள். சுட்டு விரலையும், மற்ற விரல்களையும் நன்கு வேகமாக, லாவகமாக அசைத்தால்தான் சரிகமபதநி என்னும் ஏழு ஸ்ருதிகளும் வீணை நாதத்தில் ஒன்றி வெளிவரும். எனவே கலைமகளின் கடாட்சத்தை நாம் பெற வேண்டுமானால் நமது குருமேடும், சுட்டு விரலும் நன்கு அமைய வேண்டும்.

உங்கள் இடது கையில் மேற்குறித்த இரு ரேகைகள் அமைந்திருந்தால் நீங்கள் நிச்சயம் கலைத்துறையில் வெற்றி அடைய முடியும். பிரபல வீணை வித்தகர்கள், நாட்டிய கலாமணிகள், இசை விற்பன்னர்கள், ஓவியக் கலைஞர்கள், ஆகிய அனைத்துத் துறை வல்லுனர்களுக்கும் குருமேடு பெரிதாக அகன்று செங்குத்து ரேகையுடன் காட்சி அளிக்கும். அவர்களது விரல்கள் அனைத்தும் நீண்டு நன்கு வளையும் தன்மையைக் கொண்டிருக்கும். ஓவியம் வரையவும், வீணை, வயலின் ஆகியவற்றை வாசிக்கவும் ஏற்ற முறையில் வேகமாக இயக்கும் தன்மை பெற்றிருக்கும்.

தசரா என்னும் நவராத்திரி விழாவின் போது மும்மூர்த்திகளின் மனைவிமார்களை வண்ணக் கோலங்களில் பார்த்தோர் மயங்கும் அளவிற்கு வரைந்துகாட்டும் ஆற்றல் படைத்துள்ள பெண்மணிகளின் கைகளில் சூரிய மேட்டில் ஒரு நக்ஷத்திரமும், குருமேட்டில் நல்லதொரு கிரக சந்தியும் (J) இருப்பதைக் காணலாம். மேடுகளில் காணப்படும் வரிகளின் இணைப்பையே கிரக சந்தி என்கிறோம். இந்தக் கிரகசந்தி யாருக்கு நன்கு அமைந்துள்ளதோ, அவர்களுக்கு அந்தந்த மேடுகளுக்குரிய அதிகமான சக்தி அபரிமிதமாக வந்தடையும். பிரபல பாடகிகளின் இடது கையில் உள்ள சூரிய ரேகையும், குருமேடும், சுக்கிர மேடும் விசாலமாகவும் அழகாகவும் அமைந்திருக்கும். அத்தகைய மேடமைந்த சகோதரிகள் கலைத்துறையில் முயன்றால் கட்டாயம் வெற்றியைக் காண்பார்கள். அவ்வெற்றிக்கு உத்திரவாதம் அளிப்பவர்கள் சூரிய மேட்டில் உறையும் ஸ்ரீ காயத்ரிதேவியும், குருமேட்டில் நான்முகனின் நாவில் குடிகொண்டுள்ள வெண்தாமரைத் தேவியுமே ஆவார்கள்.

எனவே இவ்விரு தெய்வ அணங்குகளை முறைப்படி ஆராதனை செய்பவர்கள் கலைத்துறையில் கணக்கற்ற புகழினைச் சேர்ப்பவர்கள். அத்துடன் சிறிதளவு பாடத் தெரிந்தவர்கள்கூட பொம்மை கொலு உள்ள இடத்தில் கூச்சமின்றி, லஜ்ஜையின்றி ஆத்மார்த்தமாகப் பாடினால் மேற்படி தேவ அணங்குகள் தேவையான ஆற்றலை அளித்து, அவர்களை மேன்மேலும் உயர்த்துவதற்கான வழிமுறைகளைக் காட்டுவார்கள்.

'வீட்டுக் குறிப்புகள்'

வீட்டைப் பெருக்கி மெழுகிய பின்னர், ஒரு கிண்ணத்தில் சிறிது நீரை எடுத்துக் கொண்டு, அதில் சிறிது வாசனை 'சென்ட்' டை ஊற்றி, பஞ்சால் முக்கி, அறையின் ஓரங்களில் தடவிவிட்டால் அறை 'கும்'மென்று மணம் வீசும். மாலை நேரங்களில் செய்தால் நல்லது. எளிமையான வீட்டிலும் இனிய சூழ்நிலையைக் கொண்டு வரலாம்.

— உமா

அழுகிய தேங்காயுடன் கசகசாவைச் சேர்த்து அரைத்துத் தேய்த்துக் குளிப்பதால் தலைமுடி மிருதுவாக இருக்கும் என்று கூறியிருந்தார் வாசகி ஒருவர். ஆனால் இவை இரண்டுடனும் சிறிது அரைத்த வெந்தயத்தையும், கடலைமாவையும் சேர்த்துத் தேய்த்துக் கொண்டால், உடலுக்குக் குளிர்ச்சியையும் முடிகளுக்கு மினுமினுப்பையும் மிருதுத்தன்மையையும், தருவதோடு முடி கொட்டுவதையும் தடுக்கிறது. இது என் அனுபவத்தில் கண்ட உண்மையாகும்.

— ஜே. பி. சந்திரா

# நவராத்திரியை தேசீய விழாவாக ஆக்குவோம்!





மற்ற எந்தப் பண்டிகைக்கும் இல்லாத ஒரு சிறப்பு நவராத்திரிப் பண்டிகைக்கு உண்டு--இரண்டு அல்லது மூன்று நாட்கள் என்றில்லாமல் முழுமையாக ஒன்பது நாட்கள் கொண்டாடப்படும் ஒரே பண்டிகை நவராத்திரி. மகிஷாசுரனை ஒன்பது நாட்கள் போரிட்டு, விஜயதசமியன்று அம்பாள் வெற்றி கொண்டதாகப் புராண வரலாறு. அப்படியானால் விஜயதசமியை மட்டும் கொண்டாடினால் போதாதா? எதற்காக முன்னோர்கள் ஒன்பது நாட்கள் விழாவாக இதனை வைத்தனர்?

அது போகட்டும். படிகட்டி பொம்மை வைக்கும் வழக்கம் எப்படி வந்தது? அது என்ன, சுண்டல், பிட்டு என்று விதவிதமாக நைவேத்தியம்? ஆழ்ந்து சிந்தித்தால் வெறும் கடவுளை வழிபடுவது மட்டுமல்ல நவராத்திரி என்பது புரிகிறது. மனித வாழ்க்கைக்குத் தேவையான அத்தனைச் செய்திகளையும் உள்ளடக்கிய ஓர் ஒப்பற்ற பண்டிகை நவராத்திரி. இங்கு குடும்ப ஒற்றுமை முதல் மத ஒற்றுமை வரை வெளிப்படும். எப்படி?

## குடும்ப ஒற்றுமை

புரட்டாசி மாதம் பிறந்த உடனேயே நவராத்திரிக்கான ஆரம்ப வேலைகள் துவங்கி விடும். அமாவாசை வரும் முன்னரே குடும்பத்தலைவரின் பட்ஜெட்டில் ஒருபகுதி இருட்டடிப்புச் செய்யப்படும். அவரும் மகிழ்வோடு வண்ணக் காகிதங்கள், கோந்து, புதிய பொம்மைகள், அலங்காரச் சரவிளக்குகள் என்று கேட்டதையெல்லாம் வாங்கித் தருவார். ஆண் பிள்ளைகள் பலகைகளையும், டப்பாக்களையும் மிக சாமர்த்தியமாகப் படிக்கட்டுகளாக மாற்ற, பெண் குழந்தைகள் தோரணம் வெட்டி ஒட்ட, அப்பா அலங்கார விளக்குகளையும், தோரணங்களையும் கட்டிக் கொடுக்க, அம்மா மாலையில் தயாராக வேண்டிய சுண்டலுக்கான ஆயத்தங்களைச் செய்ய, பொம்மைகளின் வரிசையைப் பாட்டி கூற, வைக்க வேண்டிய இடத்தைத் தாத்தா காட்ட, குடும்பத்தின் அத்தனை விரிசல்களும் இந்த ஒன்பது நாட்களும் படிக்கட்டுகளுக்குப் பின்னால் ஒளிக்கப்பட்டு, வெள்ளைத் துணி போட்டு மறைக்கப்பட்டு

விடும். நம்மாலும் ஒற்றுமையாக இருக்க முடியும் என்று ஒவ்வொரு குடும்பத்தினரும் உணர ஒரு வாய்ப்பளிப்பது நவராத்திரி.

## மத, இன ஒற்றுமை

இனி பொம்மைகளின் வகைகளைப் பார்ப்போம். இது ஒரு ஹிந்துப் பண்டிகை என்றால் கூட கிட்டத்தட்ட அனைத்து வீடுகளிலும் ஒரு புத்தர் பொம்மை இருக்கும். வேளாங்கண்ணி மாதாவும், யேசுவும் பொம்மைகளாகக் காட்சி அளிப்பார்கள். சைவ, வைணவ பேதம் இங்கு கிடையாது. ராதா கிருஷ்ணனின் சிருங்காரக் காட்சியை பக்கத்திலேயே நின்று கடைக்கண்ணால் ரசிப்பார் கைலாசவாசி சிவபெருமான். சாயி பாபாவும், சங்கராச்சாரியாரும் அருகருகே நின்று பக்தி நெறி பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள். எம்மதமும் சம்மதம் என்பதை பொம்மைகள் பேசாமல் பேசி விளக்கும். காந்தியும், நேருவும், நேதாஜியும், பெரியாரும் கூட ஒற்றுமையாக வாழுங்கள் என்பதைப் படிக்குப் படி நின்று கூறிக்கொண்டே இருப்பார்கள். அனைத்து மதத் தெய்வங்களையும், தலைவர்களையும் ஒன்றாகக் காணும் பெரியவர்கள் மனத்திலேயே ஒரு சகிப்புத் தன்மை ஏற்படும்போது, குழந்தைகளைப் பற்றிக் கூறுவானேன்?

## சோஷலிஸத் தன்மை

குழந்தைகள் மனத்தில் உயர்ந்தவன், தாழ்ந்தவன், ஏழை, பணக்காரன் என்ற வேற்றுமையில்லாத் தன்மையை உருவாக்குவது நவராத்திரி. மகாவிஷ்ணுவிற்குப் பக்கத்தில் குறவன், குறத்தி தைரியமாக நிற்கலாம். சரஸ்வதிக்கு அருகே சட்டைக்காரச் சிறுமி குதிக்கலாம். காளிங்கநர்த்தன பொம்மைக்கு அருகில் பாம்பாட்டி மகுடி ஊதலாம். ஜப்பான் நாட்டுப் பீங்கான் பொம்மைகளும், கான்பூர் காகித பொம்மைகளும், தமிழ் நாட்டு மண்பொம்மைகளுடன் கூடிக் குலாவலாம்., சிங்கமும், பூனையும், பாம்பும் கிளியும் கூட ஒற்றுமையாக ஒரே வரிசையில் நிற்கலாம். சாயபு பொம்மையும், ஐயர் பொம்மையும், சங்கீத வித்வானும், போலீஸ்காரனும் அருகருகே நின்று அளவளாவலாம். பொம்மைகளிடையே மட்டுமில்லை, மனித மனங்களிடையேயும் இத்தகைய சகிப்புத் தன்மை நிலவ வேண்டும். அனைத்து உயிர்களும் சமம் என்ற உயரிய பாடத்தை இந்தப் பொம்மைகள் நமக்குப் போதிக்கின்றன.

## கலை, கைவண்ணம் வெளிப்படல்

சாதாரண நாட்களில் வீட்டை யாரும் அலங்கரிக்க மாட்டோம். அப்படியே அலங்கரித்தாலும் யார் வந்து பார்க்கிறார்கள்? நம் கைத்திறமையை மற்றவர் பாராட்டும்படி காட்ட நவராத்திரி ஒரு நல்ல சாக்கு. நமக்குள் ஒளிந்திருக்கும் கலைத்திறன் நமக்கே வியப்பளிக்கிறது. தோரணம் கட்ட எடுக்கும் காகிதங்களின் வண்ணச் சேர்க்கையிலிருந்து, வெட்டிய வடிவங்கள், வளைத்துக் கட்டிய விதங்கள் என்று எத்தனை விதக் கலை



நயங்கள்? வண்ணப் பொடிகள்தாம் ''ரங்கோலி'' என்ற பெயருக்குள் பூவாய், மானாய், வண்ணத்துப் பூச்சியாய், ஜமுக்காளமாய் எவ்வளவு வடிவங்கள் பெறுகின்றன? சுமாராகத் தன்னை தினமும் அலங்க



ரித்துக் கொள்ளும் தாய் இன்று எப்படிக் கைதேர்ந்த ஒப்பனைக் கலைஞரானாள்? இவள் கைபட்டுக் குழந்தைகள் ராதையாகவும், கண்ணனாகவும், மடிசார்ப் புடைவை மாமியாகவும் எப்படி மாறிப் போனார்கள்? ''உனக்குள் இவ்வளவு திறமையா, என் இனியவளே!'' என்று கணவரையும் வியக்க



வைக்கும் கைவண்ணமல்லவோ இவை? சரளியில் நிற்கும் பெண் கூடச் சங்கீதம் பாடும் இசைவிழா இது. தத்தி நடக்கும் மழலை கூடப் பட்டுப் பாவாடையில் ஜதி பிடிக்கும் நாடக விழா இது. கலைகள் மொட்ட விழ்ந்து பூப்பூவாய்ப் பல வண்ணம் காட்டும் இந்த நவராத்திரி ஒன்பது நாட்களும் அவரவர் வீட்டில் ''அப்னு உத்ஸவ்'' தான்!

## நட்பு மலருதல்

ஒரு தெருவில் உள்ள அனைத்து வீட்டி னரும் ஒருவரை ஒருவர் அறிமுகப்படுத்திக் கொண்டு நட்புப் பயிரை நட்டு வளர்க்க ஓர் ஏற்பாடுதான் நவராத்திரி. குங்குமச் சிமி ழைக்கையில் எடுத்துக்கொண்டால் அனைத்து வீட்டுக்குள்ளும் தயக்கமின்றி நுழையலாம்.

புதிய மனிதர்களுக்குத் தன் வீட்டை அடை யாளம் காட்டித் தன்னை அறிமுகப்படுத்தி அழைக்கலாம். ''ஆன்டி, ஜெனிஃபரோடு நீங்களும் கட்டாயம் வரணும்'' என்று நடுவில் நிற்கும் மைக்கேல் மாமா வீட்டிலும் கூப்பிடலாம். ''தாஹிராவுக்குப் பார்க் ரொம்பப் பிடிக்கும். அவளையும் கூட்டிக்கிட்டு வாங்க தீதி'' என்று முகமதியப் பெண்ணை யும் முகமலர்ந்து அழைக்கலாம். இவர்கள் வருவதால் கொலுவின் புனிதம் கெடுவதில்லை. பொம்மைப் படிகளிலேயே சாயபுவும், யேசுவும் வீற்றிருக்கும் போது வீட்டுக்குள்ளே வேற்று மத மக்கள் வந்தால் என்ன? குழந்தைகள் மனம் விரிவடைய இத்தகைய மக்களை அழைத்து நட்புடன் பழகி உபசரிக்க வேண்டும். ஒன்பது நாட்களில் கொலு முடியலாம். ஆனால் அப்போது மலர்ந்த நட்பு பல ஆண்டுகள் நீடிக்கும். வேறு பகுதியிலிருக்கும் தோழி களைக் கண்டு நட்பைப் புதுப்பிக்கவும், உறவி னர்கள் வீட்டிற்குச் சென்று நலம் விசாரிக்க வும் ஏற்ற காலம் நவராத்திரி. சின்னக் குழந் தைகளின் தோழிகள் வரும்போது அவர் களின் பெற்றோரும் நமக்கு அறிமுகமாகின் றனர். இப்படி நட்பின் வளையம் விரிய விரிய நம் மனமும் விரிகிறது.

## கதை பிறக்கும் காலம்

சாதாரண நாட்களில் சாப்பிடும் போதும், தூங்கும் போதும் கதை, கதை என்று குழந்தைகள் நச்சரிக்கும் போது ஒரு கதையும் நினைவிற்கு வராது. ஆனால் இப் போது படிக்குப் படி எவ்வளவு கதைகள்? வெற்றிலை, பாக்கைத் தட்டில் எடுத்து வைத்துச் சுண்டலையும் பொட்டலங்களாகக் கட்டி வைத்து, வரும் விருந்தினர்களை எதிர் பார்த்து அமர்ந்திருக்கும் வேளையில் தினம் ஒரு கதையாகப் பிள்ளைகளுக்கும் சொல்ல லாம். வள்ளித் திருமணம், இராவணன் கைலாய மலையைத் தூக்குதல், காளிங்க



நர்த்தனம், பிட்டுக்கு மண் சுமத்தல், சீதா கல்யாணம், தசாவதாரம் என்று புராணக் கதைகளை நம் மனத்திரையில் தொகுத்துக் கொண்டிருக்கும் போதே, காந்தியைப் பற்றி, பாரதி, பாபா, புத்தர் இவர்களைப் பற்றிப் பிள்ளைகள் கேட்கும் கேள்விகளுக்கும் விடை தயாராக இருக்க வேண்டும். இன்னும் கொஞ்சம் சுவாரசியமாக ஒவ்வொரு பொம் மையையும் எப்போது வாங்கியது என்பதை யும், பொம்மைகளை எப்படிச் செய்கிறார் கள் என்பதையும் கூடக் கூறலாம்.

## எழுத்தில்லாப் புத்தகங்கள்

பிள்ளைகளுக்குப் படிப்பு என்பது புத்தகத் திலிருந்துதான் வரவேண்டுமென்பது இல்லை. இதோ இந்த நவராத்திரியை எடுத்துக் கொள்ளுங்கள். இதில் வராத துறைகளே இல்லை எனலாம். தோரண காகிதங்களை மடக்கி எண்ணி, வெட்டி ஒட்டும் போது கணிதம் வருகிறது. படிகளைக் கட்டும் போது, ''சாய்வாகக் கட்டுடா. அப்போதுதான் ஸி. ஜி. (Centre of Gravity) தாழ்வாக இருக் கும். படிக்கட்டும் சரியாது'' என்று அண்ணன் தம்பிக்குப் பௌதிகம் போதிப்பான். இன் னும் செடிகளைப் பார்க்குக்காக முளைக்க வைக்கும் போது தாவரவியல் வருகிறது. பத்து நாட்களில் செடிகள் ஏன் நீண்டு, வெளுத்து வளர்கின்றன? என்ற கேள்வியும், சூரிய ஒளி இல்லாததால் என்ற பதிலும் பிறக்கிறது. பறவைகளை மரத்திலும், மீன் பொம்மைகளைத் தெப்பக்குளத்திலும், பாம்பைக் கட்டிய மலையின் குகைகளிலும் வைத்துச் சின்னத் தங்கைத் தன் உயிரியல் அறிவை வெளிக்காட்டுகிறாள். ஜவுளிக் கடை, மளிகைக் கடையில் வணிக இயலும், கிரிக்கெட் செட்டில் விளையாட்டுத் துறை யும், தேசத் தலைவர்களோடு அரசியலும்

# உங்கள் தலைவலிக்குத் தேவை ஒரு சிறந்த ஸ்பெஷலிஸ்ட்.




## ஸாரிடான்.
## தலைவலி நீக்கும் ஸ்பெஷலிஸ்ட்.

சிறந்த ஸ்பெஷலிஸ்ட் யார்? உங்கள் நம்பிக்கைக்கு உகந்தவர். நீங்கள் வலியால் துன்புறும்போது, அதை நீக்கும் சக்திமிக்கவர் என ஒவ்வொரு முறையும் நம்பக்கூடியவர், உங்களுக்கு நிவாரணமளிக்க விரைந்து பணியாற்றுபவர்.

ஸாரிடான் போலவே. எனவேதான் ஸாரிடான் தலைவலி நீக்கும் ஸ்பெஷலிஸ்ட் என்கிறோம். உலகெங்கிலும் அனுபவம் கொண்ட தலைவலி நீக்கும் ஸ்பெஷலிஸ்ட்.

**ஸாரிடான். சிறந்த ஸ்பெஷலிஸ்ட்டைப் போல், ஒன்றே ஒன்று போதுமானது.**

இப்போது
புதிய
பேக்கிலே




HTA 1123

இங்கே கொலுவிருக்கின்றன. தன் விஞ்ஞான அறிவால் கண் சிமிட்டும் விளக்குகளையும், செயற்கை நீர்வீழ்ச்சியையும் பார்த்துக் கல்லூரியில் படிக்கும் அண்ணன் பூரிப்பான்.

### வயிற்றுக்கும் விருந்து

நவராத்திரியின் போதுதான் எத்தனை விதமான சிற்றுண்டிகள்? சாஸ்திரப்படி சுண்டல், வெள்ளியன்று பிட்டு, சனியன்று எள்ளு சிகினி என்று செய்வதிலாகட்டும், காலத்திற்கேற்ப பொட்டுக்கடலை உருண்டை, கோதுமை சிப்ஸ், ரிப்பன் பக்கோடா என்று புதுமையைப் புகுத்துவதிலாகட்டும் நம்மையறியாமல் பலவித சத்தான உணவு வகைகளை உண்கிறோம். முளைப் பயிரில் புரோட்டீன் மிகுதி என்றும், பொட்டுக் கடலை, வெல்லம் இவை இரண்டும் வளரும் குழந்தைகளுக்கு மிகச் சிறந்த சத்துணவு என்றும் டாக்டர் கூறுவதற்கு முன்பே நம் முன்னோர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

நம் வீட்டு வாயனம் தவிர, நாம் பல வீடுகளுக்குச் சென்று பெறும் வாயனங்களையும் பிரித்து வைத்து, விமரிசித்து, சுவைத்து இரவுசாப்பாட்டுடன் சாப்பிடும் அனுபவமே தனி. புதுமையாக எதையாவது செய்ய விரும்பும் பெண்களுக்கு நவராத்திரி ஒரு சோதனைக்களம். "கோல்டன் ஜூப்ளி" என்ற பெயரில் உருவான சிற்றுண்டி பிற்பகலில் டெபாஸிட் இழந்தால் மாலையில் வரும் சிறுமிகளின் பொட்டலம் அளவில் சற்றுப் பெரியதாக மாற வாய்ப்பு உண்டு. அடுத்த நாள் - வேறு ஒரு பரிசோதனை. சாதாரண நாட்களில் இப்படிப் புதியன செய்ய வாய்ப்புக் கிடைக்குமா?

### லட்சியங்களின் வடிகால்

கொலு வைப்பது ஒரு விளையாட்டுப் போலத் தோன்றினாலும் அவரவர்களின் நிறைவேறாத இலட்சியங்களையும், ஆசைகளையும் தீர்த்துக் கொள்ளும் ஒரு வடிகால் என்றே தோன்றுகிறது. ஒரு பொறியாளராக விரும்பிய தந்தை கிராமத்து நீர்ப்பாசன அமைப்பை அமைத்துத் தன் ஆசையைத் தீர்த்துக் கொள்வார். சொந்த வீடு கட்ட முடியாத இவர்தான் அட்டை வீட்டை எவ்வளவு ஆர்வமுடன் கட்டுகிறார்? வேலைக்குப் போகும் ஆசையுடைய அம்மா, ஜவுளிக்கடையையும் மளிகைக் கடையையும் வைத்து அடிமன ஏக்கத்தைத் தீர்த்துக் கொள்கிறாள். பிராணிகளிடம் பிரியமுள்ள தம்பி ஜூ வைக்கிறான். வாகனங்களில் ஈடுபாடுள்ள அண்ணா, போக்குவரத்து விதிகளை அமைக்கிறான். டான்ஸ் பொம்மையை அலங்கரிக்கும் அக்காவின் ஆசை என்னவாக இருக்கும்?

ஆசைகளும், லட்சியங்களும் மட்டுமல்ல. நடக்க முடியாத நிகழ்ச்சிகளை நிகழ்த்திப் பார்க்கும் மனிதமன வக்கிரங்களும் வெளிப்படுவதுண்டு. சிங்கத்தருகே பூனையை வைப்பதும், பாம்பு பொம்மைக்கு அருகே கோழியை வைப்பதும், புலிக்குப் பக்கத்தில் பசுவை வைப்பதும் நிகழ முடியாதவற்றை நிஜமாக்கும் முயற்சிகள். வக்கிரமான மனம் வேண்டுமென்றே கறுப்பான 'மரப்பாச்சி பொம்மைக்கு வெள்ளை மரப்பாச்சியை ஜோடி சேர்க்கும். ஆங்கிலேயத் தம்பதிகளுக்குப் பாவாடை, சட்டை போட்ட குழந்தை, வள்ளித் திருமணத்திற்கு பேண்டு வாத்தியக் கச்சேரி, இப்படி வைப்பதில் தான் மனத்திற்கு எவ்வளவு சந்தோஷம்? எனவே மனோதத்துவரீதியில் நம் வாழ்வையே அலசி, ஆராய நவராத்திரி உதவுகிறது.

இப்படி நம் வாழ்வோடு இணைந்த நவராத்திரியை தேசியப் பறவை, தேசிய கீதம், தேசியக் கொடி என்று இருப்பது போல் தேசியப் பண்டிகையாக ஏன் அறிவிக்கக் கூடாது? பாரதம் முழுவதும் ஒன்பது நாட்களும், "அப்ஸ பூஜா" என்று நவராத்திரியை ஏன் கொண்டாடக் கூடாது? மதம் ஒன்றைத் தவிர்த்தாலும் இதில் எத்தனை விஷயங்கள் அடங்கியுள்ளன? இப்படிப்பட்ட உன்னதமான பண்டிகையைப் பல பெண்கள், "குடும்ப வழக்கம், விடவும் முடியவில்லை. செய்யவும் முடியவில்லை" என்கிற புலம்பலோடு ஏனோ தானோ என்று கொண்டாடுவது எவ்வளவு வேதனைக்குரிய விஷயம்? இளம் தலைமுறையினர் இப்பண்டிகையின் சிறப்புகளை உணர்ந்து எதிர்காலத்திலேனும் இதனைச் சிறப்பாகக் கொண்டாட முன்வர வேண்டும்.

— லக்ஷ்மி சங்கர்

புகைப்படங்கள்:

அழ. காசி விஸ்வநாதன்

---




## மசாலா அவல்

தேவையான பொருட்கள்:

அவல் — 2 ஆழாக்கு.
மிளகாய் வற்றல் — 10.
புளி — சிறிது.
பெருங்காயம் — சிறிது.
கறிவேப்பிலை — சிறிதளவு.
உளுத்தம்பருப்பு — 2 டீஸ்பூன்.

செய்முறை:

பெருங்காயம், உளுத்தம்பருப்பு, மிளகாய் வற்றலை நன்றாக வறுத்துக் கொள்ளலாம். இம்மூன்றையும் சேர்த்து தேவையான உப்பு, புளி போட்டு உரலில் இடித்து, ஊறிய அவலுடன் கலந்து, இடித்து எடுத்துக் கொண்டு தாளித்துக் கொண்டு சாப்பிட்டால் மிகவும் ருசியாக இருக்கும்.

— மங்களா கிரி

# காலையும் மாலையும்



'நவராத்திரி' என்றுகூறினாலும் ஒன்பது நாட்களின் காலையும் மாலையும்தான் மிகவும் முக்கியத்துவம் உள்ளவை. அம்பாளுக்கு மிகவும் உகந்த இந்த ஒன்பது நாட்களும் மட்டிலுமாவது (தினசரி முடியாதவர்கள்) காலையில் கடவுள் சந்நிதியில் மெழுகி, கோலமிட்டு, கிழக்கு முகமாய்த் திருவிளக்கு ஏற்றி, கடவுள் படங்களுக்கு மலர் சூட்டி, அம்பாளை மனத்தில் தியானித்து, சௌந்தர்ய லஹரியின் ஸ்தோத்திரங்கள், லலிதா சஹஸ்ரநாமம், லக்ஷ்மி அஷ்டோத்திரம், துர்க்கா அஷ்டகம் போன்ற சுலோகங்கள் சொல்லி ஒன்பது நாட்களும் அம்பாளுக்கு பாயசம் படைத்து சேவித்து வணங்கியவரை லோகமாதா அருட்பார்வையால் அரவணைத்து ரட்சிப்பாள்.

நவராத்திரி என்றாலே கொலுப்படிதான் முக்கியமாய் நினைவில் வரும். நம்மிடம் இருக்கும் பொம்மைகளை வைத்தே எத்தனையோ கலைநயங்களை உண்டாக்கலாம். உங்களிடம் இருக்கிற பிள்ளையார் பொம்மையையும் பார்வதி பொம்மையையும் அருகருகே வைத்து பின்னால் பிள்ளையார், பார்வதி, சிவன், மாம்பழ படம் (வாழ்த்துக்கள் அட்டை அல்லது வெள்ளை பேப்பரில் வரைந்து) வைத்தால் அந்தச் சம்பவத்தையே கொலுவில் காட்டி விடும் எஃபக்ட் கிடைக்கும். இதற்காகவே ஆண்டு முழுவதும் வரும் வாழ்த்து அட்டைகளைச் சேர்த்து வைத்து எவ்வளவோ செய்யலாம். கொலுப் பொம்மைகளுடன் நடுநடுவே, கைகளில், இடையில், செருகிவைத்து, கொலுவுக்கே ஓர் உயிரோட்டம் கொடுக்கலாம்.

கொலு பார்க்குக்கு கடுகு, மிளகாய் விதை போன்றவை விதைத்து உருவாக்குபவர்கள் பெரும்பாலும் கொலு ஆரம்பிக்கும் அன்றுதான் விதைப்பார்கள். அவை நான்கு நாட்களில் முளைவிட்டுச் செழிப்பாய்த் தோன்றும்போது கொலு முடிந்து இருக்கும். இதோ ஒரே கல்லில் இரண்டு மாங்காய் யோசனை. சிறு புடைவை அட்டைப் பெட்டியில் நாலு நாட்கள் முன்னதாக மண் நிரப்பி, கொத்துமல்லி தூவி வைத்தால், கொலு ஆரம்ப நாளன்று வளர்ந்திருக்கும். தினம் இரண்டு இரண்டு கொத்துமல்லி ரசம், சாம்பார், மணக்க வைக்க உபயோகிக்கலாம் 'விற்கிற விலையில் கடுகு, வெந்தயம் கொட்டி பார்க்கா?' என்று திட்டும் கிடையாது.

இனி மிகவும் சங்கடமான விஷயம். கொலு வைக்கிறீர்கள். அக்கம் பக்கம் அனைவரையும் தாம்பூலத்திற்கு அழைக்கிறீர்கள். அதேபோல் உங்களை அழைத்திருக்கும் (உங்களுக்கு நெருங்கிய/வேண்டிய) ஒருவர் வீட்டுக்குக் கிளம்பும்போது உங்கள் வீட்டிற்கு நாலு பேர் தாம்பூலத்திற்கு வந்து, உங்கள் கொலுவை ரசித்துக் கொண்டிருக்கையில், இவர்கள் கிளம்பக் கூடாதா? நான் எப்போ... மாமி வீட்டுக்குப் போவது? இவர்கள் கிளம்பறதுக்குள்ளே வேறு யாராவது வந்து விட்டால், என்ன செய்வது? என்று மனத்தில் அலுத்த சம்பவம் கட்டாயம் எல்லோருக்கும் ஏற்பட்டிருக்கும்.

கொலுவின் விசேஷமே வருபவர்களை முகம் மலர வரவேற்றுத் தாம்பூலம் தருவது தான். அதில் நாம் தவறி விடுகிறோம். இதைத் தவிர்க்கலாம். கொலு வைக்கும் ஒன்பது நாட்களும் என்ன கோலங்கள், என்ன சுண்டல், என்ன பாயசம், எந்த வகையில் குழந்தைகள் அலங்காரம், நாம் உடுத்தும் உடை, அணிய விரும்பும் நகை, பெரிய சுற்றுப்புறம் என்றால் எந்தக் கிழமை, எந்தத் தெருப் பெண்டிரை அழைப்பது என்பதுடன், தன்னை அழைப்பவரின் வீட்டுக்கு, எந்தக் கிழமையில், எந்த நேரம் என்று முன்னதாய்த் தீர்மானித்து வைத்துக் கொள்ள வேண்டும். தான் என்று பிறர் வீட்டுக்கு மஞ்சள், குங்குமம் தாம்பூலம் பெற்று, கொலுவைக் காணப் போகிறோமா, அந்த நாளில், அந்த நேரம், நம் வீட்டிற்குப் பிறர் வருகை தராதவாறு முன்னதாய் அழைக்

கும் போதே, பணிவுடன் குறிப்பிடலாம், அழைப்பிதழ் அடிப்பவர்கள் அதில் இதைக் குறிப்பிட்டு அச்சடித்து விடலாம். இதனால் வருபவரை மனமுவந்து வரவேற்கும் முழுப் பலனைப் பெறலாம்.

கடைசியாக ஒரு வார்த்தை —

பணம் படைத்த பெண்ணுக்குச் சாதாரண டெபைடு ரவிக்கைத் துண்டு வைத்துக் கொடுத்து, அவர் அலட்சியமாய்த் தாம் பூலம் எடுத்துக் கொண்டு, அதை இன்னொருவருக்கு வைத்துக் கொடுத்துத் தட்டிக் கழிப்பதைவிட ஏழைப் பெண்ணிற்குத் தரலாம். அவர் முழு மனத்துடன் ஏற்றுக் கொண்டு மனதார வாழ்த்த அதுவே மங்களமாகும்.

— **கனகவல்லி சாரங்கபாணி**






# சத்துணவுத் திட்டம் அமுலுக்கு வரும்முன்...

வள்ளல் அழகப்பச் செட்டியார் பிறந்த ஊர் காரைக்குடி...! அந்தக் காரைக் குடியில் பண்பும் அன்பும் ஒருங்கே அமையப் பெற்ற பெண்கள் இணைந்து; மாதர் சங்கம் ஒன்றை உருவாக்கி, திறம்பட இயக்கி வருகிறார்கள். அவர்களின் சாதனை மலர்கள் சில —

* தமிழக முதலமைச்சர் சத்துணவுத் திட்டம் அமுலுக்கு வரும்முன்... இந்தச் சங்கம் மதிய உணவை பள்ளி மாணவ மாணவியருக்குப் பதினைந்து ஆண்டுகள் வழங்கி வந்துள்ளது.

* பீகாரில் வெள்ளம் ஏற்பட்ட போது ஆயிரக்கணக்கில் துணிமணிகளையும், நிவாரண நிதியையும் அளித்தது.

* இலங்கை வாழ் அகதிகளுக்குப் பொருள்களும் துணிமணிகளும் அனுப்பி ஆதரித்து வருகின்றனர்.

* குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தில் அரசுடன் ஒத்துழைக்கும் விதத்தில் ஐந்நூறு தாய்மார்களுக்கு 'லூப்' பொருத்தி உதவியுள்ளது.

* பொருட்காட்சிகளில் கலந்து கொண்டு, மாதர் சங்க அங்கத்தினர்கள் தங்கள் கைத்திறனைக் காண்பித்துப் பல பரிசுகளும் பாராட்டுக்களும் பெற்றுள்ளனர்.

* தவிரவும் எல்லா மாதர் சங்கங்களைப் போலவே ஏழை நோயாளிகளுக்கு உதவுதல், போட்டிகள் வைத்துப் பெண்களையும் குழந்தைகளையும் ஊக்குவித்தல்.

* தமிழ்நாட்டில் மாதர் சங்கத்திற்கென்று சுயமாகக் கட்டிடம் இருப்பது அபூர்வம்... காரைக்குடி மாதர் சங்கத்திற்கென்று பிரத்தியேகமாகக் கட்டிடம் உண்டு. சுமார் இருபது வருடங்களாகச் சங்கத்தின் தலைவியாக இருந்து, 30,000 ரூபாய்க்கும் அதிகமாய் நன்கொடை பெற்று, வெற்றிகரமாய்க் கட்டிடமும் கட்டி, பல சமூக சேவைகளில் அங்கத்தினர்களை ஈடுபடுத்திய பெருமை திருமதி சுகுமாரன் அவர்களையே சாரும். இந்தச் சங்கத்தின் இன்றைய செகரெட்டரி திருமதி சீதா பாண்டியன்.

— **ராஜி ராதா**




# பிலிப்ஸ்

## புதுமையிலும் புதுமையானவை.
## அருமையிலும் அருமையானவை.

ஸ்டீரியோ டூ-இன்-ஒன்களிலேயே இதுவரை இல்லாத வகைகள் — நீங்கள் கற்பனை செய்த அளவுக்கு.

AR 448
Rs. 1800/-*



AR 458
Rs. 1950/-*



AR 538
Rs. 2200/-*



DR 668
Rs. 2800/-*



DR 568
Rs. 2600/-*



DR 868*
Rs. 3600/-*



D 8248
Rs. 3150/-*



DR 768
Rs. 3495/-*




*எக்ஸைஸ் வரி உள்பட, தலவரிகள் தனி, லைசென்ஸ் தேவை இல்லை.

CLARION-M-PI-157A-87-TAM

பிலிப்ஸ் - ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்




தமிழ்நாடு

843, அண்ணா ரோடு,
சென்னை — 600 002.,

15, இராமநாதன் தெரு,
தி. நகர்,
சென்னை — 600 017.

104, வெங்கடாசல முதலித் தெரு,
மயிலாப்பூர்,
சென்னை — 600 004.

8, கங்குராம செட்டித் தெரு,
சென்னை — 600 001.

ஸ்டால் 5, ஐ. சி. எஃப் ஷாப்பிங்
சென்டர்,
பெரம்பூர்,
சென்னை — 600 038.

103, புது ஆவடி ரோடு,
கீழ்ப்பாக்கம்,
சென்னை — 600 010.

75, மேற்கு ஆவணி மூல தெரு,
மதுரை — 625 001.

23, ஸ்ரீ ரங்கபாளையம் ரோடு,
சேலம் — 636 002.

16 — B, மேற்கு புலிவார் சாலை,
தெப்பக்குளம் போஸ்ட்,
திருச்சிராப்பள்ளி — 620 002.

11/139 — A, சாஸ்திரி ரோடு,
கோயம்புத்தூர் — 641 009.



பெங்களூர்

CLARION/CB/8739

# இம்மாத இல்லத்தரசி



• த. கீதா



• சுனந்தா ஸ்ரீதரன்



• உஷா ராகவன்



• எஸ். வேதா

முதல் பரிசு:

**கோதுமை லட்டிகை**

தேவையான பொருட்கள்:

கோந்து — 100 கிராம்,
பேரீச்சங்காய் அல்லது கர்ஜுர்காய் — 15 காய்கள்,
பாதாமி — 25 கிராம்,
கசகசா — 1 கரண்டி,
பிஸ்தா பருப்பு — 100 கிராம்,
கொப்பரை — அரை மூடி,
சர்க்கரை — பொடி செய்தது.

செய்முறை:

எல்லாச் சாமான்களையும் துண்டு துண்டாகச் செய்து நெய்யில் வறுத்துக் கொள்ள வேண்டும். கொப்பரையைத் துருவி நெய்யில் வதக்கிக் கொள்ள வேண்டும்.

பிறகு எல்லாவற்றையும் இடிக்க வேண்டும். இடித்த பொடி இருக்கும் அளவு பொடி செய்த சர்க்கரையைக் கலந்து நெய்யைக் கொஞ்சம் சூடாகக் காய்ச்சிப் பொடியில்

பரிசுப் பொருட்கள்:



ஊற்றி லட்டு பிடிக்க வேண்டும்.

கோந்தை நன்ருக வெயிலில் காய வைத்தால் நன்ருகப் பொரிக்கும். மேற்கூறியவற்றில் 25 லட்டுகள் சுமாராகப் பிடிக்கலாம். இது சாப்பிடப் புதுச் சுவையாகவும், சத்துள்ளதாகவும், குறிப்பாகப் பெண்களுக்கு நல்ல பலத்தையும், பிள்ளை பெற்றவர்களுக்கு இடுப்பிற்குப் பலத்தையும் கொடுக்கும்.

— — சுனந்தா ஸ்ரீதரன், கே. ஜி. எஃப்.

## இரண்டாம் பரிசு:

### கோல்டன் சீஸ்

தேவையான பொருட்கள்:

ப்ரெட் — 1,
அமுல் சீஸ் — 100 கிராம்,
எண்ணெய் — 1 கப்,
பொரிக்க — டால்டா,

செய்முறை:

ப்ரெட்டைச் சிறுசிறு துண்டங்களாக்கி நீரைத் தெளித்து, கோதுமை மாவை பிசைவது போலக் கெட்டியாகப் பிசைந்து வைக்கவும்.

சீஸை 1" (ஒரு அங்குலம்) அளவில் நீளமாகத் துண்டங்களாக்கி வைக்கவும்.

பிசைந்து வைத்த பிரெட் மாவு, ஒரு சிறிய உருண்டை எடுத்துக் கொண்டு கையால் தட்டி, கப் வடிவமாக்கிக் கொள்ளவும்.

வெட்டி வைத்த ஒரு துண்டு சீஸை கப்பில் வைத்து மூடவும். இதுபோல மேலும் ப்ரெட் மாவை எடுத்துக் கப் தயாரித்து சீஸை உள்ளே வைத்து ரோல்ஸ் தயாரிக்கவும்.

அடுப்பில் தோசைக்கல்லை வைத்துச் சிறிது எண்ணெய் ஊற்றவும். இரண்டு ரோல்களை அதில் இட்டுப் பொரித்தெடுக்கவும். சீஸ் ரோல்ஸ் பொன் நிறம் ஆனவுடன் எடுத்து வைக்கவும்.

எண்ணெய் அதிகம் குடிக்காது. நாக்கிற்கும் சுவையாக இருக்கும்.

— உஷா ராகவன், கல்கத்தா — 29.

## மூன்ரும் பரிசு:

### கோலா உருண்டை

தேவையான பொருட்கள்:

கீமா — ¼ கிலோ,
தேங்காய் — ½ மூடி,
கசகசா — 2 மேஜைக் கரண்டி,
பொட்டுக்கடலை — 100 கிராம்,
பெரிய வெங்காயம் — 3,
பச்சை மிளகாய் — 6,
முழுப் பூண்டு — 1,
இஞ்சி — ஒரு துண்டு,
பட்டை — 2 துண்டு,
லவங்கம் — 4,
சோம்பு — ½ தேக்கரண்டி,
முந்திரி — 5,
கொத்துமல்லி — ஒரு கட்டு,
புதினா — சிறிதளவு,
மஞ்சள் தூள் — சிட்டிகை அளவு.

# பல் டாக்டர்களுக்கும் கிராம்புத் தைலத்தின்மீது முழு நம்பிக்கை.

---



ஆயுர்வேதமாயினும் சரி, ஆங்கில மருத்துவமாயினும் சரி, அனைவரும் இதன் குணத்தைப் புகழ்கிறார்கள். பல் டாக்டர் மருத்துவமனையிலும் இது முக்கிய பங்கு வகிக்கிறது.

ஒரு காலத்தில், பல்லில் சிறிது வலி ஏற்படினும் உடனே நம் நினைவுக்கு வந்தது கிராம்புத் தைலம். சரியான விகிதத்தில் இப்போது கிராம்புத் தைலத்தை நீங்கள் பெறுகிறீர்கள் ப்ராமிஸ் டூத்பேஸ்ட்டில். அதனால்தான் ப்ராமிஸ் டூத்பேஸ்ட் மூலம் நீங்கள் பிரஷ் செய்கையில், இத்தைலம் உங்கள் பற்களின் இடுக்குகளில் புகுந்து, பற்களின் வேர்வரை சென்று பலவீனப்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது. கிருமிகளிலிருந்து விடுதலை பெற்று உங்கள் பற்கள் எப்போதும் ஆரோக்கியமாயும், உறுதியாயும் பளபளப்பாயும் விளங்குகின்றன.

ப்ராமிஸின் ஒப்பற்ற ஃபார்முலாவின் காரணத்தால் இத்தைலம் வாயில் துர் நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை உடனடியாக அழிக்கிறது. உங்கள் சுவாசத்தில் புத்துணர்ச்சி வழங்குகிறது.

உங்கள் பற்களை ஆரோக்கியமாகவும், பளபளப்பாகவும் திகழச் செய்திடுங்கள். வாயில் ஒப்பற்ற புத்துணர்ச்சி பெற்றிடுங்கள். ப்ராமிஸ் டூத்பேஸ்ட் உபயோகியுங்கள்.






**Promise**



கிராம்புத் தைலத்தின் அருமையான படைப்பு — ப்ராமிஸ் டூத்பேஸ்ட்




CHAITRA - B BLS 851 TAM

உப்பு — வேண்டிய அளவு.
பொரித்தெடுக்க எண்ணெய் — 200 கிராம் (ஓ. கே. ஆயில்)

செய்முறை:

கீமாவை நன்றாகக் கழுவி, பிழிந்தெடுத்து, அதனுடன் தேங்காய்த் துருவல், கசகசா, பொட்டுக் கடலை, பட்டை, லவங்கம், முந்திரி, சோம்பு, பச்சை மிளகாய், மஞ்சள் தூள், தேவையான அளவு உப்பு சேர்த்து அரைத்துக் கொள்ள வேண்டும். அதனுடன் நறுக்கிய வெங்காயம், புதினா, கொத்துமல்லி ஆகியவற்றை ஒன்றாகச் சேர்த்து, பிசைந்து கையில் எண்ணெய் தொட்டுக் கொண்டு, சிறிய உருண்டைகளாக உருட்டி, காய்ந்த எண்ணெயில் பொன்நிறமாகப் பொரித்து எடுக்க வேண்டும். இவை சாப்பிட மிகச் சுவையாக இருக்கும். இதை குருமாவில் ஊற வைத்தும் சாப்பிடலாம்.

— ர. கீதா, வேலூர் — 1.

## ஆறுதல் பரிசு:
## விஜிடபிள் பருப்புருண்டை

தேவையான பொருட்கள்:

துவரம் பருப்பு — ½ கிலோ.
சீரகம் — 3 தேக்கரண்டி.
பெருங்காயம்—கொட்டைப்பாக்களவு.
உப்பு — தேவையான அளவு.
எலுமிச்சம்பழம் — 2.
கொத்துமல்லி — 1 கட்டு.
பச்சை மிளகாய் — 20.
கடுகு, எண்ணெய் — ¼ தேக்கரண்டி.
சிறிய வெங்காயம் — 200 கிராம்.
பூண்டு — 50 கிராம்.
பச்சை பட்டாணி — 100 கிராம்.
முட்டை கோஸ் — 25 கிராம்.
பீன்ஸ் — 25 கிராம்.
கறிவேப்பிலை — 6 ஈர்க்.
இஞ்சி — 2 அங்குலத் துண்டு.

செய்முறை:

துவரம் பருப்பை ஒரு மணி நேரம் ஊற வைத்து உப்பு சீரகம், பெருங்காயம், பச்சை மிளகாய் இவற்றுடன் கரகரப்பாக வடைக்கு அரைப்பது போல் கெட்டியாக அரைக்கவும். வெங்காயம், பூண்டு இரண்டையும் தோல் நீக்கிச் சிறிதாக நறுக்கவும். பீன்ஸ், முட்டை கோஸ், கொத்துமல்லி, இஞ்சி, கறிவேப்பிலை இவைகளைப் பொடிப் பொடியாக நறுக்கவும். பட்டாணித் தோல் நீக்கவும். இவற்றை அரைத்த மாவுடன் சேர்த்து எலுமிச்சம் சாற்றை ஊற்றி, கடுகைத் தாளித்து நன்றாகக் கலக்கவும். கலவையை எலுமிச்சம் பழம் அளவு உருண்டைகள் செய்து குக்கரில் பதினைந்து நிமிடங்கள் (ஆவியில்) இட்லிக்கு வேக வைப்பது போல் வேக வைக்கவும்.

உருண்டைகள் தளர்ந்த பதத்தில் செய்ய வேண்டும். வேக வைத்தால் கெட்டியாகி விடும். இறக்கியவுடன் ஒன்றுடன் ஒன்று ஒட்டிக் கொண்டிருக்கும் உருண்டைகளை தண்ணீர் தொட்டு நன்றாக உருண்டைகளாகப் பிடிக்கவும். சுடச்சுடத் தக்காளி சாஸ் உடன் சேர்த்துச் சாப்பிடச் சுவையாக இருக்கும்.

குறிப்பு: இவ்வுருண்டைகளைக் கொதிக்கும் மோர்க் குழம்பில் போட்டு ஐந்து நிமிடங்கள் கொதிக்க விடவும். சாதத்துடன் சேர்த்துச் சாப்பிடச் சுவையாக இருக்கும்.

— எம். மீரா, சேலம் — 4.

## ஆறுதல் பரிசு:
## கச்சிறுகாய் உருண்டை

தேவையான பொருட்கள்:

பச்சரிசி — 1 ஆழாக்கு.
சர்க்கரை — ½ ஆழாக்கு.
வேர்க்கடலை — 50 கிராம்.
ஏலக்காய் — 2.
கசகசா — 2 டீஸ்பூன்.
தேங்காய்த் துருவல் — 1 சிறிய கப்.
பொரித்தெடுக்க எண்ணெய் — ¼ கிலோ.

செய்முறை:

முதல் நாள் மாலை பச்சரிசியை ஆறு மணி நேரம் ஊற வைத்து நீரை வடித்து நிழலில் உலர்த்தி மாவாகத் திரிக்கவும். வேர்க்கடலையைத் தோல் நீக்கி ஒன்றிரண்டாக உடைத்தெடுத்துக் கொள்ளவும். ஏலத்தைப் பொடி செய்யவும். தேங்காய்த் துருவலை லேசாக வறுத்துக் கொள்ளவும். பிறகு மாவில் சர்க்கரை, தேங்காய், வேர்க்கடலை, ஏலக்காய் சேர்த்து லேசாக நீர் தெளித்துப் பிசிறி (புட்டு மாவு போல்) பிறகு மாவை நன்றாகச் சேர்த்து அழுத்தி மூடி வைக்கவும். மறு நாள் காலை நீர் விடாமல் நன்றாகப் பிசைந்து சிறு உருண்டைகளாகப் பிடிக்கவும். அடுப்பில் வாணலியை ஏற்றி எண்ணெயை ஊற்றிக் காய்ந்ததும் பிடித்த உருண்டைகளை கசகசாவில் புரட்டி எடுத்து இரண்டு மூன்றாக எண்ணெயில் போட்டு மிதமான தீயில் பொன் நிறமாகப் பொரித்தெடுக்கவும். இது ஒரு மாதம் வரை கெடாது.

— எஸ். வேதா, சென்னை — 78.

பகாளாபாத் தயாரிக்கச் சாதம் வேக வைக்கும் போது ஒரு ஆழாக்கு அரிசிக்கு ஒரு டேபிள் ஸ்பூன் ஜவ்வரிசி விதம் கலந்தால் குழைவாயிருக்கும்.

—விஜி.

# டாக்டர் பதில்கள்

டாக்டர் ஹைமாவதி பதில்கள்

திருமதி சுப்ரமண்யன், சென்னை — 90.

இரு குழந்தைகளுக்குத் தாயான என் வயது 31. நான் டயட்டில் இருந்து 72 கிலோவிலிருந்து என் எடையை 68 கிலோவாகக் குறைத்துள்ளேன். இன்னும் குறைக்க முயற்சிகள் செய்து வருகிறேன். டயட்டீஷியன் எழுதித் தந்த உணவு அட்டவணையைப் பின்பற்றி வருகிறேன்.

என் உடல் எப்போதும் அசதியாகவே இருக்கிறது. அடிக்கடித் தூக்கம் வருகிறது. தூங்க ஆரம்பித்தால் மணிக்கணக்கில் தூங்குகிறேன். இரவில் என்றால் 12 மணி வரை கூட விழித்திருக்க முடிகிறது. மதியம் தூங்காமல் இருக்க பிரம்மப் பிரயத்தனம் செய்தாலும் என்னையுமறியாமல் நான் தூங்கிவிடுகிறேன். எப்பாடு பட்டேனும் உடலை இளைக்க வைக்க உறுதி பூண்டுள்ளேன். இதற்கு ஒரு நல்ல பதிலை எதிர்நோக்குகிறேன்.

நீங்கள் டயட்டில் (Diet) இருந்தாலும் இரத்தப் பரிசோதனை செய்ய வேண்டும். ஹீமோகுளோபின், ப்ளட் சுகர், மற்றும் ஸீரம் கொலஸ்ட்ரால் இவற்றிற்கான சோதனைகள் செய்து கொள்ள வேண்டும். ப்ளட் ஷுகர் குறைவாக இருந்தாலும் அசதி இருக்கும். அதற்கு குளுகோஸ் சேர்த்து ஜூஸ் சாப்பிடலாம். ஹீமோகுளோபின் சதவீதம் குறைவாக இருந்தால் இரும்புச் சத்து மாத்திரைகள் சாப்பிடவும்.

வத்ஸலா, இலங்கை.

எனது உதடுகள் மிகவும் கறுமையாக இருக்கிறது. நான் பொதுநிறம். உதடுகள் சிவந்த நிறம் பெற என்ன செய்யலாம்? அத்துடன் முகத்திலும் கைகளிலும் சுருக்கங்கள் காணப்படுவதால் எனக்கு 25 வயது என்றாலும் வயது போனதுபோல் தோற்றமளிக்கிறேன். அத்துடன் இளநரை வேறு தோன்றிவிட்டது. இவற்றிற்குப் பரிகாரங்கள் கூறுங்கள். தேகப் பயிற்சிகள் இருந்தாலும் தெரிவியுங்கள். எனது மூக்கைச் சிறிதாக ஆபரேஷன் செய்வதானால் இந்திய ரூபாய்ப்படி எவ்வளவு செலவு ஆகும்?

உதடுகள் கறுப்பாகக் காரணத்தைக் கண்டுபிடிக்க முதலில் மலத்தைப் பரிசோதிக்க வேண்டும். அதில் கிருமிகள், அமீபியாஸிஸ் இருந்தால் அதற்கான மருந்தை மருத்துவ ஆலோசனையுடன் ஒரு கோர்ஸ் சாப்பிடவும். அனால்ஜின், ஆஸ்பிரின் கலந்த தலைவலி மாத்திரைகளை அடிக்கடிச் சாப்பிடுபவரானால் அதை நிறுத்தவும். தினமும் காலை, மாலை முகத்தில் எலுமிச்சம் பழச் சாறு தேய்த்துக் குளிர்ந்த நீரில் குளிக்கவும். பாலும் நிறையச் சாப்பிடவும். காலை, மாலை வேளைகளில் வாக்கிங், ஜாகிங், உடற்பயிற்சி செய்யவும். இதனால் வியர்வை வெளியேறி தோல் சுத்தமாக இருக்கும். மூக்கில் பிளாஸ்டிக் ஸர்ஜரி செய்வதானால் ரூ. 10,000 வரை செலவாகும்.

உஷா, ஈரோடு.

எனக்குக் குழந்தை பிறந்து மூன்று மாதங்கள் ஆகின்றன. என் வயது 21.

பிரசவம் நடந்து மூன்றாம் நாள் முதலே நான் என் உடற்பயிற்சிகளை ஆரம்பித்தேன். இப்போதெல்லாம் குறைந்தது 45 நிமிடங்களாவது உடற்பயிற்சிக்காக ஒதுக்குகிறேன். இருந்தும், என் அடி வயிறு இன்னும் சுருங்கவில்லை. உணவுக் கட்டுப்பாடும் செய்து வருகிறேன்.

நாட்பட நாட்பட எனக்கு நம்பிக்கை குறைந்து கொண்டே வருகிறது. என்னுடைய இந்தச் சிறு மேடு தட்டிய வயிறு, என் கணவருக்கு ஒரு மாதிரியாக இருக்கிறது.

நான் பழையபடி என் உருவத்தைப் பெறவே முடியாதா?

நீங்கள் மனம் தளர வேண்டாம். ஆகாரத்தில் கொழுப்புச் சத்தைத் தவிர்த்து விடவும். ராகிக் கஞ்சி சாப்பிடவும். எலுமிச்சைச் சாற்றில் தேன்விட்டுச் சாப்பிடவும். தினமும் வாக்கிங், ஜாகிங் போன்ற உடற்பயிற்சிகள் செய்யவும். கால்களை நீட்டி உட்கார்ந்து கொண்டு முழங்காலை மடக்காமல் தலையை முன்பக்கமாகக் குனிந்து கொண்டு கைகளால் கால் கட்டை விரல்களைத் தொட வேண்டும். இந்தப் பயிற்சியால் அடிவயிறு கனம் சற்று குறையும். தழும்புகள் மறைய ஆலிவ் ஆயில் மஸாஜ் செய்யவும்.

தொகுப்பு: சுபா பாரதி



# சமையல் கேஸ் இப்போது நீண்ட நாள் கிடைப்பதற்கு.

ஒவ்வொரு தடவை சமைக்கும் போது கேஸ் மிச்சப் படுத்தலாம் என்று உங்களுக்கு தெரியுமா?
கீழ்கண்ட சில வழிகளை சீராக கடைப் பிடிக்கவும்




**இந்த மாதம் புதிய பரிசோதனையை முயன்றுபாருங்கள்.**
கீழ்கண்ட சில வழிகளை சீராக கடைப் பிடிக்கவும். புதிய கேஸ் சிலிண்டர் எத்தனை நாள் வருகிறது என்பதைக் குறித்துக் கொள்ளவும். முந்தைய சிலிண்டருடன் ஒப்பிடவும். நீண்ட நாள் கேஸ் பயன்படுமாறு நீங்கள் செய்யமுடியும். கேஸ் மிச்சமாகும் புதிய வழி எதுபற்றி சிந்திக்க முடிந்தால், பிசிஆர்ஏ வுக்கு எழுதவும்.

எனது சமையல் கேஸ் நீண்டநாள் வருவதைப்பற்றி மேலும் அறிய விரும்புகிறேன்! தயவுசெய்து இலவச சிறுபுத்தகத்தை எனக்கு அனுப்பவும். D

எனது பெயர் ______

எனது முகவரி ______

______

______ பின் ☐☐☐☐☐☐

20 சதவீத கேஸை மிச்சப்படுத்தும் தனிப்பட்டமான எப்போதும் நூதனின் கேஸ் அடுப்பு.




பெட்ரோலியம் சேமிப்பு ஆராய்ச்சி சங்கம்
(பெட்ரோலியம் கன்ஸர்வேஷன் ரிசர்ச் அஸோஸியேஷன்)



# மோனத்திலே; நதிதீரத்திலே...

மஞ்சுளா ரமேஷ்

அமைதி கொஞ்சும் துங்கா நதிதீரம்— மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து வளைந்து சிருங்கேரியைத் தொட்டு ஓடும் நதியின் மடியில் உட்கார்ந்திருந்தால் நேரம் போவதே தெரிவதில்லை. உலகின் விஞ்ஞான அவசரங்களும், மனிதர்களின் அற்ப ஆசைகளும் நடவடிக்கைகளும், டென்ஷனும், வேகமும் எங்கோ போய் நதி, பேசும் 'சளசள' மொழியோடு நாளெல்லாம் அமர்ந்து...

சாமானியர்களுக்கே இப்படி ஒரு மோன நிலையை அந்த நதிதீரம் அளித்ததால்தான், 1200 வருடங்களுக்கு முன் மாதவ முனிவர் ஆதிசங்கரர் அங்கே சங்கர மடத்தை ஸ்தாபித்தார் போலிருக்கிறது! முப்பத்திரண்டு வயதிற்குள் பாரதத்தைத் தன் பாதங்களால் அளந்து ஒருமைப்பாட்டை உண்டாக்கிய

ஆதிசங்கரர் நிறுவிய மடங்களில் ஸ்ரீ சிருங்கேரி மடமும் ஒன்று. அங்கு நவராத்திரி விழா மிகவும் விசேஷமாக ஒவ்வோர் ஆண்டும் நடைபெறுகிறது.

மங்களூரிலிருந்து சுமார் நூற்றைம்பது கிலோ மீட்டர் தூரத்தில் ஆகும்பே மலையுச்சியையும் கடந்தால் சிருங்கேரி வருகிறது. சிருங்ககிரி என்றும் சொல்கிறார்கள். பெங்களூரில் இருந்தும் எட்டு மணிநேரப் பிரயாணத்தில் சிருங்கேரியை அடையலாம். அங்கு வீற்றிருக்கும் ஸ்ரீ சாரதாம்பாள் வருகின்ற பக்தர்களுக்கு மனோ அமைதியையும், வாழ்வின் பயன்களையும் அள்ளி வழங்கிக் கொண்டிருக்கிறாள்.

தலையிலே நாகம் படம் விரித்துத் தாங்க, சந்திரன் கேசத்தில் இடம்கிடைத்தது பாக்கியமென ஒளிவீச ஒரு கையில் முத்துமாலையும், மறுகையில் சுவடியுமாக பத்மாசனமிட்டு ஞான பீடத்தில் ஆட்சி புரிகிறாள் சிருங்கேரி சாரதாம்பாள்.

இந்தக் கருணாமூர்த்தியை ஆதிசங்கரர் ஸ்ரீ சக்கரத்தின் மேல் பிரதிஷ்டை செய்திருக்கிறார். அவருக்குப் பின் இடையில் இடைவெளி இல்லாமல் பட்டமேற்ற சங்கராச்சாரியார்கள் ஆராதித்து வந்திருக்கிறார்கள். அம்மனின் அருளையும், பட்டமேற்ற சன்னிதானங்களின் கருணையையும் உணர்ந்திருந்த விஜயநகர சாம்ராஜ்ய மன்னர்கள் முதல் ஆங்கிலேயர்கள் வரை இந்த சிருங்கேரி சங்கர மடத்தைக் கட்டிக் காப்பதில் கவனமாக இருந்திருக்கிறார்கள்.

துங்காநதி தீரத்தில் சங்கர மடத்தின் மையமாக இருப்பவள் சாரதாம்பிகை. பக்கத்தில் ஸ்ரீ வித்யாசங்கரர் கோயில் கலைக் கூடமாகக் காட்சியளிக்கிறது. இது பக்தர்களுக்கு மட்டுமல்லாமல் கலைப்பிரியர்களையும், விஞ்ஞானிகளையுமே கவரக் கூடிய ஒன்று. கொனாரக் சூரியனார் கோவில் போல ஓரளவு அமைந்துள்ள இந்தக் கோவில் ஸ்ரீவித்யாதீர்த்தர் எனும்சங்கராச்சார்யாரின் நினைவாகக் கட்டப்பட்டது. ஹொய்சள, திராவிட அமைப்பில் கட்டப்பட்டுள்ள இந்தக் கோவிலைச் சுற்றிக் கலைப்பிரவாகமே ஊற்றெடுக்கிறது.

வெளிப்புறத்தில் கீழே பறவைகள் முதல் மேலே தேவர்கள் வரை செதுக்கப்பட்டுள்ளன. இது மனித வளர்ச்சியின் பரிணாமத்தைக் காட்டுகிறது என்கிறார் அங்கே ஒன்பது வயதிலிருந்து இருக்கும் வழிகாட்டி. கோயிலின் உள்ளேயோ அகிலத்தின் பரிணாமத்தையே காட்டுகிறார்கள். கோயிலின் நடுவில் பெரிய கல்வட்டத்தில் பல கோடு



* உடுப்பி மாயகிருஷ்ணன்



* துங்கா நதியிலிருந்து கோயிலின் தோற்றம்



* உடுப்பி கிருஷ்ணனுக்குச் சேவை

கள் பிரிக்கப்பட்டு ஒன்பது கிரகங்களின் மூலம் கால நிலையினைக் காண்பித்திருக்கிறார்கள். இது 'ராசி சக்ரா' எனப்படுகிறது. அதைச் சுற்றிலும் உள்ள தூண்களில் கலைநய மிக்க சிங்கங்கள்!

அதை அடுத்து பின்னர் வந்த மகாசன்னிதானங்களின் சமாதிகள் கோயில்களாக எழுப்பப்பட்டுள்ளன. பிறகு தமிழ்நாடு, கேரளா, ஆந்திரம், கர்நாடகா எனப் பல மாநிலங்களிலிருந்து வந்து வேதம் பயிலும் மாணவர்களின் வேத கோஷங்களுக்குப்



* ஸ்ரீ வித்யாதீர்த்தர் கோயில்

பக்கத்திலேயே சாரதாம்பாள் கோலோச்சி அமர்ந்திருக்கிறாள்.

உள்ளுறையும் மூலவர் சாரதாம்பாளுக்கு நவராத்திரியில் இருமுறையும், பிரதிஷ்டை செய்யப்பட்ட பௌர்ணமி அன்றும் மட்டுமே அபிஷேகம். மற்றநாட்களில் உற்சவருக்கே அபிஷேகங்கள்.

தெய்வீகம் பொலியும் சாரதாதேவி நவராத்திரி ஒன்பது நாட்களும் சிருங்கிரியில் பல்லாயிரக்கணக்கான மக்களைக் கவர்ந்திழுக்கிறாள். விரிந்து பரந்து நிற்கும் சங்கர மடத்தின் முற்றங்களில் மக்கள் இரவும் பகலும் நடமாடிக் கொண்டு இருக்கிறார்கள்.

## மூன்று தேவியரை ஏன் வழிபட வேண்டும்?

அசுரர்களின் கொடுமைகள் அதிகரித்த போது தேவர், மூவரின் சக்திகளைத் தன்னகத்தே எடுத்துக் கொண்ட ஆதிசக்தி முத்தேவியராக அவதரித்து அசுரர்களை அழிக்கின்றாள். மஹாசரஸ்வதியாக சும்ப நிசும்பர் போன்றோரையும், மஹாலக்ஷ்மியாக மஹிஷாசுரனையும், மாகாளியாக மதுகைடபரையும் அழிக்கிறாள்.

'ஷரத்' காலத்தில் (மழை காலம்) வருகின்ற நவராத்திரியில் இவளைப் பூஜித்தால், எல்லா தேவதைகளின் சக்தியும் இவளிடமே உறைவதால், இவளே மஹாசக்தியாக வேண்டிய வரங்களை அருளுவாள் என்பது ஐதீகம். சப்தசதி பாராயணத்தில், 'ஷரத் நவராத்திரியில் என்னைப் பூஜிப்பவர்களுக்குச் சகலமங்கலங்களையும் தருவேன்' என்று தேவியே கூறுவதாக வருகிறது.

## ஒன்பது நாட்களும் ஒன்பது அலங்காரங்களும்



* வேத கோஷம்

ஆதி சக்தி எல்லாத் தெய்வங்களின் சக்திகளையும் பெற்று விடுவதால் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு தெய்வத்தின் ஆயுதங்களுடன் தோன்றுவாள்.

ஹம்சவாகனத்தில் பிராம்மியாகவும் (பிரம்மாவின் சக்தி), ரிஷப வாகனத்தில் மாஹேச்வரியாகவும் (சிவன்) மயூர வாகனத்தில் கௌமாரியாகவும் (சக்தி), கருட வாகனத்தில் வைஷ்ணவியாகவும் (விஷ்ணு), வீணையைக் கையில் ஏந்தியவளாகவும் (சரஸ்வதி), சிம்ம வாகனத்தில் சாமுண்டியாகவும் (பராசக்தி), ராஜராஜேஸ்வரியாகவும் தோன்றுகிறாள். இப்படி சிருங்கேரியில் சாரதா தேவிக்கு அலங்கரித்து சப்த மாதரையும் வணங்குகிறார்கள். மோகினி அலங்காரமும், விஜயதசமியும் சேர 'நவராத்திரிகள் ஆகின்றன.

இங்கு வாராஹி அலங்காரம் செய்யப்படுவது இல்லை. முதல் நாள் கையில் குழந்தையுடன் இருப்பது போல பிரஸூதிகா அலங்காரம் செய்யப்படும். உலகிற்கே அன்னையாகி லோக மாதாவாகி நிற்கும் தன்மையை உள்ளடக்கி அன்று அருளாசி தருவாள் அன்னை.

## நவராத்திரியில் என்னென்ன பூஜை?

நவராத்திரி ஒவ்வொரு நாளும் ஸ்ரீலஸ்ரீ மகாசன்னிதானமும், சன்னிதானமும் பூஜைகளைச் செய்வார்கள். இதைக் கண்டுகளிக்க ஆயிரக்கணக்கான மக்களும் கூடி இருப்பார்கள். ஆசார்யாளின் காலை

**ஸ்ரீலஸ்ரீ சிருங்கேரி மகாசன்னிதானம் அவர்கள்' பெண்களுக்கு அருளும் செய்தி:**



"இன்றைய நிலையில் பாரதப் பெண்களிடம்தான் நமது இந்திய நாட்டின் கலாசாரம், பண்பாடே இருக்கிறது. அதைக் காக்க வேண்டிய பொறுப்பு அவர்களுடையது. நடை, உடை, பாவனைகளிலே இந்திய மாதர்களாக இருந்து நம்முடைய பழம்பெரும் கலாசாரத்தை அவர்கள்தான் அழியாமல் காக்க வேண்டும். நம்முடைய பாரம்பரியம் விட்டுப் போகாமல் தொடர வேண்டும்.

**இந்தியப் பெண்கள் மங்கலமூர்த்திகளாக இருக்க வேண்டுமே தவிர, மோகமூர்த்திகளாக மாறக் கூடாது."**

அனுஷ்டானங்கள் முடிந்தபின் ஸ்ரீ சக்ர பூஜை, குருபாதுகா பூஜை செய்வார்கள். பின்னர் துங்கா நதிக்கு வந்து கங்கா பூஜை செய்வார்கள். இதைப் பற்றிக் குறிப்பிடும்போது ஸ்ரீலஸ்ரீ மகாசன்னிதானம் அவர்கள் —

"கங்கையாகப் பெருக்கெடுக்கும் நீரே மனிதனுக்கு ஆதாரமான விஷயம். நீரில்லாமல் மனிதனின் உயிர் ஏது? அதனால் ஒவ்வொரு மனிதனுமே நீரை மதித்துத் தெய்வமாக நினைக்க வேண்டும். எனவேதான் பூஜைகளிலேயே கங்காபூஜை விசேஷமானது. இப்படி நாம் நீரைப் பூஜித்து மதித்தால்தான் அதை அசுத்தம் செய்யாது, வரும் தலைமுறைகளும் ஒழுக்கமுடன் வாழும்" என்றார்கள்.

பிறகு கன்யா பூஜை. நவ்ராத்திரியில் கன்னியாக அவதரித்து, தேவி அசுரனைக் கொன்றதால், தேவியைச் சிறு குழந்தையின் உருவிலே பார்க்கிறோம். பின்னர் எல்லாக் கோயில்களிலும் இரு சன்னிதானங்களும் தண்ட நமஸ்காரம் செய்து, ஸ்நானம் செய்து, மூலவர் ஸ்ரீ சாரதாம்பாளுக்குத் தாங்களே பூஜை செய்வார்கள்.

மஹா மங்கள ஹாரத்தியும், இவை முடிய மதியம் மணி மூன்றாகிவிடும். மாலையில் அம்பாள் தன்னை நாடி வர முடியாத பக்தர்களைக் காண கருணையுடன் அலங்காரியாக ஊர்வலம் புறப்பட்டு விடுவாள். பின்னர் சாரதா, சந்திரமௌளீஸ்வரர் பூஜை. தீபாராதனைக்கு இரவு ஒன்பதாகும்.

மாலையில் 'மஹா தர்பார்' இங்கு விசேஷம். ஸ்ரீலஸ்ரீ சன்னிதானம் அவர்கள் அரச சபையில் இந்த ஒன்பது நாட்களும் அம்பாளின் முன் வந்து அமர்வார்கள்.



'சண்ம சப்தஷதி' பாராயணம் செய்யப் படும். நான்கு வேத பாராயணமும், பஞ்சாங்கஷ்ரவணமும், பலஊர்களிலிருந்து வரும் வித்வான்களின் சங்கீத சேவையுமாக அம்பாள் குளிரக் குளிர அமர்ந்திருப்பாள்.

வெள்ளி ரதத்தில் உற்சவ மூர்த்தியை வைத்துக் கோயிலினுள்ளேயே மூன்று முறை அம்பாள் வலம் வரவும் செய்வாள். இவை யாவும் ஒவ்வொரு நாளும் நடைபெறும்.

தவிர, மூலநட்சத்திரத்தில் வீணை சரஸ் வதிக்குப் பூஜையும், அஷ்டமியில் ஆயுத பூஜை, வாகன பூஜையும் மஹா நவமியில் கஜபூஜையும் நடைபெறும். ஒவ்வொரு நாளுமே கன்யா பூஜை, சுவாசினி பூஜை உண்டு. சத ஷண்டி ஹோமம் ஆரம்பிக்கப் பட்டு பூர்ணாஹுதியுடன் முடியும் நாள் தம்பதி பூஜையும் உண்டு.

விஜயதசமியன்று அம்பாள் அருகிலுள்ள காளிகாம்பாள் கோயிலுக்குப் புறப்பட்டு விடுவாள். போகும்போது அசுரனை ஒழிக் கும் வேகம். குதிரை வாகனத்தில் சென்று கோயிலில் வன்னிமரம் மாய்த்துத் தீபா ராதனை பெற்றுத் திரும்பும்போது, மக்களின் குதூகலத்தில் தானும் பங்கு பெறுவாள். போகும் போது எங்கேயும் நிற்காமல் போகும் தேவி வரும்போது ஒவ்வொருவ ரின் பூஜை மரியாதைகளையும் ஏற்றுக் கொண்டு திரும்பப் பல மணி நேரங்கள் பிடிக்கும்.

இப்படியாக சாரதாதேவி ஷரத் நவராத் திரியை ஏழு நாட்களும் கொண்டாட வரும் மக்களுக்கெல்லாம் இலவச உணவுடன் கருணையையும் வழங்குகிறாள்.

சிருங்கேரி போகப் புறப்பட்டு விட்டீர் களா? பக்கத்தில் வேறு சில ஸ்தலங்களும் உள்ளன. அதையும் பார்த்துக் கொண்டு திரும்பலாமே!

ஒரு வாரம் 'டூர்' போகலாம் என நினைப்ப வர்கள் முதலில் மங்களூர் போய் விடுங்கள். அங்கே தங்கிக் கொண்டு இன்னும் விசேஷ மான ஆறு ஸ்தலங்களைத் தரிசிக்கலாம். ஒவ்வொன்றும் நூறு கிலோ மீட்டர் தூரத்திற் குள் இருப்பவைதான்.

கொல்லூர் மூகாம்பிகை அம்மன் சக்தி யின் உறைவிடம். முதலில் அங்கே போய் விட்டு வாருங்கள். திரும்புவதற்கு மாலை ஐந்து மணிக்குமேல்பஸ்கிடையாது.ஏனென் றால் வரும் வழியெல்லாம் காடு. எனவே, நேராகக் காலையில் மங்களூரிலிருந்து கொல் லூருக்குப் போகலாம். அம்மனைப் பார்த்து விட்டு, மாயச் சிரிப்பும், மயக்கும் பார்வையு மாக நிற்கும் உடுப்பி கிருஷ்ணனைக் கண்டு மகிழலாம். மாலையில் உடுப்பி கிருஷ்ணன் மடாதிபதி தானே கிருஷ்ணருக்குச் செய்யும் பூஜை, வேலையைக் கண்டுகளித்துத் திரும்ப லாம்.

பின்னர் தர்மஸ்தலா, சுப்ரமண்யா, ஹாசன், பேலூர் ஆகியவைகளைப் பார்த்துவிட்டு வரலாம். பின்னர் சிருங்கேரி சென்று சாரதாம்பாளின் பாதங்களைப் பணியலாம்.

கர்நாடகாவின் எழில் கொஞ்சும் மலை களும், காட்டினூடே செல்லும் போது 'கில்' வண்டின் ரீங்காரமும், கோயில்களின் புனிதத் தோற்றங்களும்... மற்ற நாட் களின் 'டென்ஷன்'கள் மறந்தே போகும்!

தகவல்கள்:

**ஸ்ரீ கிரிதாரி பிரசாத் சாஸ்திரிகள், கௌரிசங்கர் (அட்மினிஸ்டிரேடிவ் ஆபீஸர், சிருங்கேரி சங்கர மடம்.)**

புகைப்படங்கள்: **யோகா**

## 'புழுங்கலரிசி உப்புமா'

புழுங்கலரிசியை ஊற வைத்து, அத்துடன், மிளகாய், உப்பு, பெருங் காயம் சேர்த்து, ஆட்டுரலில் கர கரப்பாக அரைத்துக் கொள்ளவும். வாணலியில் சிறிது நீர் ஊற்றி, இட்லி தட்டுகளில் மாவை ஊற்றி, இருபது நிமிடங்கள் கழித்து, அதை ஒரு தட்டில் கொட்டி உதிர்த் துக் கொள்ளவும்.

வாணலியில் ஒரு கரண்டி எண் ணெய் ஊற்றி, கடுகு, உளுத்தம் பருப்பு, கடலைப் பருப்பு போட்டு, சிவந்ததும், கறிவேப்பிலை, கொத்து மல்லி கிள்ளிப் போட்டு, உதிர்த்த உப்பு மாவையும் போட்டு, நன்கு கிளறி மேலும் உதிர்க்கவும். இறக்கு முன்பு தேங்காயைத் துருவிப் போட்டுக் கீழே இறக்கி விடவும்.

இதைச் சுடச் சுடச் சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும்.

— உமா

# பல்வேறு மாநிலங்களில் நவராத்திரி



## தேவி பூஜை

புரட்டாசி மாத, சுக்லபட்சத்துக்கு முதல் நாள் அன்று ஹஸ்த நட்சத்திரம் கூடுகிறது. அந்த நாள் தேவி பூஜைக்கு உகந்த நாள் ஆகும்.

## கன்யா பூஜை

'கன்யா பூஜை' என்பது நவராத்திரியின் ஒரு பகுதியாகக் கொண்டாடப்படுகிறது. பத்து வயதிற்குள் உள்ள சிறு பெண்களை அழைத்து வந்து, அவர்களுக்கு எண்ணெய் ஸ்நானம் செய்வித்து, புதுப்பாவாடை சட்டை அணிவித்து, தட்சிணை தாம்பூலங்களுடன் அவர்களுக்கு அறுசுவை உணவளித்துப் பூஜிக்கும் வழக்கத்தை இன்றளவும் நம் நாட்டவர் கடைப்பிடித்து வருகிறார்கள்.

## வங்காளத்தில்...

நவராத்திரியில், தேவி பார்வதி, தன் கணவன் வீட்டிலிருந்து, பிறந்த வீட்டிற்கு வருகிறாள் என்பது ஐதீகம். இதனால், நவராத்திரிக்கு, பிறந்த வீட்டிற்குச் செல்வது என்பது வங்காளிப் பெண்களிடம் உள்ள பழக்கம்.

பிறந்த வீட்டிற்கு வரும் தன் மகளுக்கு, ஹிமவானும், அவன் மனைவி மேனையும் சீராட்டி, அவளுக்குச் சீராகச் சகல சௌபாக்கியங்களையும் அளித்துத் தருகின்றனர். இந்த நிகழ்ச்சியின் சார்பாக, பிறந்த வீட்டிற்கு வரும் தம் பெண்களுக்கு நவராத்திரி ஒன்பது நாட்களும் புதுப் புடவை, வளையல் சாமான்கள் முதலியன கொடுத்து வரவேற்பது வங்காளிகளின் வழக்கமாக உள்ளது.

## குஜராத்தில்...

'அம்பாஜி' என்று பெயரிட்டு அழைக்கப்படும் அன்னை பராசக்தியை நவராத்திரி ஒன்பது நாட்களும் பெண்கள் மிகவும் பக்தியுடன் பூஜை செய்கிறார்கள். கடைசி நாளன்று, 'கர்பா' என்ற கிராமிய நடனத்தை ஆடிக் கொண்டே கோவில்களுக்குச் செல்கிறார்கள். ஓட்டைப் பானையில், எரியும்-மெழுகுவர்த்தியைத் தலையில் வைத்துக் கொண்டு ஆடும் நடனத்திற்கு 'கர்பா' என்று பெயர்.

## மகாராஷ்டிரத்தில்....

நவராத்திரியின் ஆரம்ப தினத்தன்று, நவதான்யங்களாலான பாலிகையை மண் கிண்ணங்களில் தெளித்து வைப்பார்கள். ஒன்பது நாட்களும் 'தேவி' பூஜையை வரிசையாகக் கொண்டாடி; பத்தாம் நாளாகிய விஜயதசமியன்று, பாலிகையை ஆற்று நீரில் கரைத்துவிட்டு, பெண்கள் வீடு திரும்புகிறார்கள். இது 'காகர் புங்கனே' என்று அழைக்கப்படுகிறது.

## கர்நாடகத்தில்...

'தசரா' என்ற பெயருடன் வெகு விமரிசையாகக் கர்நாடக மாநிலத்தில் நவராத்திரிப் பெருவிழா நடக்கிறது. இம்மாநிலத்தின் சக்தி தேவியாக சாமுண்டீஸ்வரி அமர்ந்து அருள் பாலிக்கிறாள்.

மைசூரை ஆண்ட 'உடையார்' வம்சத்தினர் காலத்தில் 'தசரா' விழா துவங்கப்பட்டது. மகாராஜா தர்பார், ஆனை மேல் அம்பாரி, ஊர்வலம், வில்வித்தை, வாள் வித்தை போன்ற வீர சாகச விளையாட்டுக்கள் எனப் பலவிதமான நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன. திறமையான வில், வாள், வித்தைக்காரர்களுக்கு பரிசுகள் வழங்கிச் சிறப்பிக்கப்பட்டன.

இப்போது 'தசரா- அரசு விழாவாகக் கொண்டாடப்படுகிறது. அரண்மனை, வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு, கண்கொள்ளாக் காட்சியாக, மக்கள் கண்முன்னே விரிந்து நிற்கிறது.

— பாகீரதி

# சிக்கனமாக அதே சமயம் கை நிறைய..!

நவராத்திரி சமயங்களில் வரும் பெண்களுக்குக் கனிசமாகவும் கைநிறையவும் பட்சணங்கள் கொடுப்பதுதான் நல்லது. வட நாட்டவர் தட்டில் வைத்து உண்ணச் சொல்வார்கள். அந்த மாதிரி, நம் ஊர் வழக்கம் இல்லை. கனிசமாகவும் சிக்கனமாகவும் தயாரிக்கச் சில 'அயிட்டங்கள்.' சுண்டல் தவிர இப்புதிய தயாரிப்புக்களைக் கொடுக்கலாமே!

## அவல் புட்டு

தேவையான பொருட்கள்:

1 கப் அவல் என்றால் 1 கப் வெல்லம். இந்த அளவில் எடுத்துக் கொள்ளவும். அவலை வறட்டு வாணலியில் வறுக்கவும். லேசாகப் பொரிய ஆரம்பித்ததும் இறக்கி விடவும். ஆறியதும் மிக்ஸியில் பொடிக்கவும். ஏலக்காயும் சேர்க்கவும். ஆழாக்கு துவரம் பருப்பை இலை இலையாக (அதிகம் வேகாமல்) வேகவிட்டு வடிகட்டவும். தேங்காய் ஒன்று உடைத்து (1 கிலோ அவல் அளவுக்கு) திருகவும். வெல்லத்தைப் பாகு வைக்கவும். அவல் பொடியைத் துளி மஞ்சள் தூள் போட்டுக் கலக்கவும். வெதுவெதுப்பான வெந்நீரை விட்டுப் பிசையவும். அவலைப் பிடித்தால் உருட்டும் வடிவம், விட்டால் உதிரும் வண்ணம் அளவான நீர் சேர்க்கவும். பாகு நன்றாக முற்றியதும் தேங்காய்த் துருவல், வெந்த பருப்பு இவற்றை அவல் மாவில் கலந்து, பாகை விட்டுக் கரண்டியால் ஒன்று சேர்த்து அமுக்கி வைத்து விடவும். அரை மணி நேரம் கழித்து அருமையான புட்டு கிடைக்கும். முந்திரி திராட்சையும் போடுங்கள். அருமையான ருசி. அள்ளிக் கொடுக்கும் அளவு தாராளமாகக் காணும்.

## ரெடி மிக்ஸர்

பொட்டுக் கடலை கால் கிலோ, அரிசிப் பொறி கால் கிலோ, கொப்பரை (சிறு துண்டுகளாக்கவும்), வறுத்த அவல், வேர்க்கடலை, அரிசி மிட்டாய் அம்பது கிராம் இவற்றைக் கலக்கவும். நெய்யில் கறிவேப்பிலை பொறித்துக் கார மிளகாய்ப் பொடி, உப்புப் பொடி போட்டு டப்பாவில் வையுங்கள். இந்த மிக்ஸர் மிகவும் ருசியாக இருக்கும். வரும் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம்.

## நைலான் புட்டு

ஜவ்வரிசி 1 கப் என்றால் பச்சரிசி 1 கப் அளவில் எடுத்துக் கொள்ளவும். வெறும் வாணலியில் (அடுப்பை நிழலாக எரிய விட்டு) ஜவ்வரிசியை வறுத்துப் பொடித்துக் கொள்ளவும். அரிசியைத் தனியே சிவக்க வறுத்து (நல்ல) மாவாக மிக்ஸியில் அரைக்கவும். தேங்காயைப் பூந்துருவலாகத் துருவிக் கொள்ளவும். இலுப்பச் சட்டியில் ஜலம் வைத்து, அரிசி மாவை (வேட்டில்) நீர்விட்டுப் பிசிறி இரண்டு நிமிடம் வெள்ளைத் துணியில் வைக்கவும். மாவு வெந்ததும் ஆற விடவும். ஜவ்வரிசி மாவில் லேசாக வெந்நீர் தெளித்து மஞ்சள்பொடி கலந்து அரிசி மாவுடன் பிசிறி விடவும். ஜவ்வரிசி மாவு வெந்தால் கொழ கொழ என்றாகிவிடும். சூட்டோடு அரிசி மாவில் கலந்து விட்டால் போதும். ஏலக்காய்ப் பொடி போடவும். வெல்லம் சம அளவுக்கும் சற்றுக் கூடுதலாக வைத்து நல்ல பாகு காய்ச்சவும். வெந்த மாவுடன் கலந்து தாம்பாளத்தில் அமுக்கி வைக்கவும். முந்திரிப் பருப்பை நெய்யில் வறுத்துப் போடவும். மிக மிருதுவான புட்டு இது. வேகவிடும் போது சிட்டிகை உப்பு சேர்க்கலாம்.

## பட்டன் தட்டை

2 கப் அரிசி மாவு, கால் கப் அளவு பயத்

தம்பருப்பு, பெருங்காய நீர், கடலைப் பருப்பு கொஞ்சம் ஊற வைத்தது. மிளகு, சீரகம், உப்பு. அரிசி மாவைச் சிவக்க வறுக்கவும். பயத்தம்பருப்பை வேகவிட்டு (குழையாமல்) நீரை வடிக்கட்டி வைக்கவும். மாவில் பயத்தம்பருப்பைப் போட்டுப்பிசைந்து உப்புடன் பெருங்காய நீர் விட்டுப் பிசையவும். பயத்தம் பருப்பு வேகவிட்ட நீரை விட்டுப் பிசையலாம். மிளகைத் தூள் பண்ணி, கடலைப் பருப்பு சீரகம் (கொஞ்சமாக) போட்டு மாவைக் கலக்கவும். கெட்டியாகப் பிசையவும். கோலியளவு உருட்டி உருட்டித் துணியில் போட்டு ஆள்காட்டி விரலால் அழுத்தினால் பட்டன் மாதிரி அழகாக வரும். எண்ணெயில் பொறிக்கவும். குழந்தைகளுக்குக் கைநிறையக் கொடுத்த மாதிரி இருக்கும். (ரகசியம். பெரிய தட்டை ஒன்றுக்கு இது கைநிறையக் கொடுக்கலாம்) வெண்ணெய்ச் செலவு இல்லை. 'பயத்தம் பருப்பு 'கரகர'வென்று ஆக்கும்.

— சித்ரா

# மற்ற மாடுகளும் இரட்சிக்கப்பட வேண்டியவையே..

"கோமாதா எங்கள் குலமாதா" என்ற கட்டுரையை எத்தனை முறை படித்தேன்...! எண்ணிக்கை நினைவில்லை. பசுவைத் தெய்வமாய்ப் பூஜிக்கும் நம் நாட்டில், சங்கராச்சாரிய சுவாமிகள் பசு வதை கூடாது என்று வேண்டிக் கொண்டதையும் மீறி, கோமாதா படும் அவலங்கள் உங்கள் கட்டுரையில் வெட்ட வெளிச்சமாகியுள்ளன.

தமிழ்நாட்டின் நெற்களஞ்சியமான தஞ்சையின் இன்றைய நிலை...! காவிரி மணலாய்க் கொதிப்பதால், விவசாய வேலைகள் நடவாததால் உழவு மாடுகள் அடிமாடுகளாகின்றன. ஆம். கசாப்புக் கடைக்காரர்கள் மாமிசத்திற்குக் கொல்ல மாடுகளை வாங்கி விடுகிறார்கள்.

விவசாய வேலையை நம்பியுள்ள ஜனங்கள் வயிற்றில் போட ஈரத் துணி நனைக்கக் கூடத் தண்ணீர் இல்லை. இன்று தஞ்சையில் மக்களுக்கே தண்ணீர் இல்லாத நிலையில் ஆடு மாடுகளுக்குத் தண்ணீருக்கு என்ன செய்வது? மூன்று மாதத்திற்கு முன்பே வற்றி விட்ட குளம் குட்டைகள் வெடித்துப் பொருக்குத் தட்டிக் காணப்படுகின்றன. வீட்டுக் கிணறுகளிலும், கை பம்ப்களிலும் தண்ணீர் இல்லை. அதனால் வந்த விலைக்கு மாடுகளையும், ஆடுகளையும் மனமில்லாமல் விற்கின்றனர் ஏழை விவசாயிகள்.

போர் செட்டில் குளித்து, தண்ணீர் குடிக்கின்ற வசதியான நிலச்சுவான்தாரின் வீட்டு மாடுகளை விரல் விட்டு எண்ணி விடலாம். மற்றைய மாடுகளின் நிலை மிகவும் அவலம். எலும்பும் தோலுமாய் நடக்கக் கூடச் சக்தியற்ற கோமாதாக்களின் நிலை கண்டு ரத்தக் கண்ணீர் வருகிறது. இதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறதோ அரசாங்கம்?



கோமாதா மட்டுமல்ல; காளை மாடுகளும், எருமை மாடுகளும் கூட ரட்சிக்கப்பட வேண்டியவையே. நம் அன்பை, பராமரிப்பை நாடுபவையே.

— கனகவல்லி சாரங்கபாணி

சீகாகாய் சோப்?

இல்லை,
விப்ரோ சீகாகாய்!

## விப்ரோ சீகாகாய் சோப் என கேட்டு வாங்குவீர்

...ஏனெனில் எல்லா சீகாகாய் சோப்புகளும் ஒன்றுபோல் இருப்பதில்லை. இயற்கையான நற்குணங்கள் நிறைந்த விப்ரோ சீகாகாய் சோப், உங்கள் கேசத்திற்கு நம்பகமானது. ஏனெனில் இதில் பெருமளவில் அடங்கியுள்ள தூய்மையான சீகாகாய், உங்கள் கேசத்தை சுத்தமாகவும் பட்டுப்போன்று மென்மையாகவும் திகழச் செய்கிறது.




நம்பகமான தூய சீகாகாய் சோப்.

WIPRO
LIMITED
Closer to the consumer.



1



2



3



4

# சொல்லுங்கள் பார்க்கலாம்

1 மாஸ்கோவில் இந்தியக் கலைவிழா ஓராண்டு காலம் நடைபெறப் போவது நமக்குத் தெரியும். இவ்விழாவினை மாஸ்கோவில் நமது பிரதம மந்திரி தொடங்கி வைத்தார். இவ்விழா நடைபெறும் மாஸ்கோ நகரக் கட்டிடம் இது. இதன் பெயர் என்ன?

2 தண்ணீரில் 51 மணி நேரம் மிதந்து உலக சாதனை ஒன்றை நிகழ்த்தியிருக்கிறார் தமிழக காவல்துறையைச் சேர்ந்த ஒருவர். இவருக்குச் சப்—இன்ஸ்பெக்டராகப் பதவி உயர்வும் கொடுக்கப்பட்டுள்ளது. இவருடைய பெயரென்ன?

3 பெண்ணாடத்தில் ஒரு பன்றிக்குட்டியை இறைச்சிக்காக அறுத்த போது அதன் வயிற்றில் எட்டு குட்டிகள் இருந்தன. அதில் ஒன்று மட்டும் வித்தியாசமாக இருந்தது. இதன் விசேஷம் என்ன?

4 சிறந்த கர்நாடக இசைப் பாடகர் ஜேசுதாஸ் திரைப்படப்பாடல்களையும்பாடியிருக்கிறார். இவர் அண்மையில் உண்ணாவிரதம் இருந்தது குறிப்பிடத்தக்கது. ஏன் உண்ணாவிரதம் இருந்தார்?

5 இவர்கள் நான்கு பேரும் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக மாணவர்கள். இவர்களின் இந்திய விஜயத்தின் நோக்கம் என்ன தெரியுமா?

6 தமிழகத்தைச் சேர்ந்த ஆர். வெங்கடராமன் இந்தியாவின் ஜனாதிபதியாகியிருக்கிறார். இவர் இந்தியாவின் எத்தனையாவது ஜனாதிபதி? இதற்கு முன் ஜனாதிபதி பதவி வகித்தவர்கள் யார், யார்?

7 சென்னை கோட்டூர் புரத்தில் அமைக்கப்பட்டுள்ள இந்த விண் நோக்கியின் நோக்கமென்ன?

8 இந்திய பாலர் மன்றத்தின் கொடுங்கையூர் கிளையைச் சார்ந்த மா. ராஜா என்பது இந்த மாணவனின் பெயர். இந்த மாணவர் பல்கேரியா மாநாட்டிற்குச் சென்று இருந்தார். பல்கேரியாவில் என்ன மாநாடு நடந்தது?

9 சிலோன்பிரச்னைசம்பந்தமாக இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையே கொழும்பில் ஓர் ஒப்பந்தம் கையெழுத்தானது. இந்த ஒப்பந்தம் கையெழுத்தான நாள் எது?

1 செயின்ட் பேஸில் கதீட்ரல்.

2 ஆர். சண்முகம்.

3 இதன் முகத்தில் யானைக்கு இருப்பது போல் தும்பிக்கையும் அகலக் காதுகளும் இருந்தன.

4 ஜேசுதாஸ் சென்னை நகரில் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்க்கத் தமிழக அரசு விரைவில் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கோரி உண்ணாவிரதம் இருந்தார்,

5 மலைக்காடுகளில் ஊர்வன (குறிப்பாகப் பாம்புகள்) பற்றி ஆராய்ச்சி செய்யத் தமிழகம் வந்துள்ளனர்.

6 வெங்கட்ராமன் ஒன்பதாவது ஜனாதிபதி ஆனால் இவர் எட்டாவது நபர். டாக்டர் ராதாகிருஷ்ணன் இரண்டு முறை ஜனாதிபதியாக இருந்திருக்கிறார். ஜனாதிபதி பதவி வகித்தவர்கள் ராஜேந்திரபிரசாத், டாக்டர் ராதாகிருஷ்ணன், ஜாகிர் உசேன், பக்ருதீன் அலி அகமது, வி. வி. கிரி, சஞ்சீவி ரெட்டி, ஜெயில்சிங்.

7 விண்ணுலகில் நடைபெறும் விசித்திரங்களைப் பார்க்க இது உதவும்.

8 பல்கேரியாவில் உலக சமாதானம், நட்புறவு ஆகிய நோக்கங்களுக்காக சர்வதேசச் சிறுவர் மாநாடு நடைபெற்றிறது.

9 ஜூலை 29, 1987.

தொகுப்பு: தாம்பிரவருணி





6



7



5



8



9

# இல்லத்தரசிகளின் பிரச்சினை

ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடியவில்லையே என்ற பெருங்குறை இன்று பெரும்பாலான இல்லத்தரசிகளிடம் காணப்படுகிறது.

தங்களது மழலைச்செல்வங்களைப் பள்ளியில்சேர்க்கும்போதும், வகுப்பு, ஆசிரியைகளிடம்குழந்தைகளைப்பற்றி விசாரிக்கும்போதும், குழந்தைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுக்கும் போது அவர்கள் கேட்கும் சந்தேகங்களை விளக்கவும் ஆங்கில இலக்கணம் தேவைப்படுகிறது.

வேலைக்குச் செல்லும் மகளிர் தங்களது அலுவலகத்தில் ஆங்கிலத்தில் உரையாட வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது.

பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் போதும் பொது இடங்களில் தகவல் பெற விரும்பும் போதும் ஆங்கிலத்தில் பேச வேண்டியுள்ளது.

ஆங்கிலம் நம் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் தேவைப்படுகிறது. இக்கருத்தை மனதிற்கொண்டு விவேகானந்தா கல்வி நிலையத்தினர் நீங்கள் ஆங்கிலத்தில்சரளமாகப்பேச தபால் முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள். நேர்முகப் பயிற்சியும் உண்டு.

இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் எழுத, தயக்கமின்றி சரளமாக ஆங்கிலத்தில் உரையாட விரும்புவோர் கீழ்கண்ட முகவரிக்கு கடிதம் எழுதினால் தகவல் புத்தகத்தை அனுப்பி வைக்கிறார்கள். நீங்களும் தொடர்பு கொண்டு பயன் பெறலாமே.

**விவேகானந்தா கல்வி நிலையம் (Regd)**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை — 17.**

## உணவு வகைகள்

ஸ்ரீலக்ஷ்மண ராஜகோபாலன்

### வண்ணக் கேக்குகள் இனிய பிஸ்கட்டுகள்

செய்முறை வண்ணப்படங்களுடன் (கேக், பிஸ்கட், ஜாம்ரோல் முட்டையில்லாத கேக், கேக்கின் மேல் பூ வேலைசெய்தல் முதலிய 68 வகைகள்) 21.00
(Size 24 × 18 Cm.)

### சுவைமிக்க உணவுகள்

ருசியுங்கள் ரசியுங்கள்
(Vegetarian) Soup, Snacks, Deserts, Ice cream Pudding etc., 110 receipes
வண்ணப்படங்களுடன் 21.00

### சுவையான இனிப்புகள் செய்முறை (Sweets)

வண்ணப்படங்களுடன் 9.00
**விசாலாட்சி**

### நவீன அசைவ உணவு வகைகள்

Non-Vegetarian-83 Receipes
வண்ணப்படங்களுடன் கூடியது.
சூப் கோப்தா, சிக்கன் 65, தன்தூக், மட்டன் மசாலா, ஸ்பிரிங் ரோல்ஸ் மீன் கேக், etc. (Size 24 × 18 Cm.) 21.00

### பழரசம், ஜாம், ஊறுகாய் செய்முறை

55 Receioes, சிரப், சர்பத், பழரசம், ஜாம், ஊறுகாய் செய்முறை) 5.00

**சுவையான சிற்றுண்டிகளும், சமையலும்** 437 வகைகள் 14.00

**அப்பளம், வத்தல், வடாம், ஊறுகாய்கள்** செய்முறை 4.00

**திருமகள் கோலக்கலை** 4.50

### அருணா கோபாலகிருஷ்ணன்

நாம் அழகாய் இருக்க (பெண்கள் அழகு செய்து கொள்ளும் முறைகள் Make-up) 20.00
பெண்களுக்குப் பயனுள்ள குறிப்புகள் 7.50
எளிய தமிழ் மருந்துகள் 5.00
சத்துள்ள உணவு உண்டு ஆரோக்கியமாய் வாழ்வது எப்படி? 5.50
பிரதமருடன் ஒரு பயணம் சிவசங்கரி 8.50
நூல் ஏணி சிவசங்கரி 19.00
விளக்கில்லா சந்திரங்கள்
அனுராதா ரமணன் 6.00

**தனிப்பிரதிவேண்டுவோர் புத்தகவிலையுடன் ரூ. 4.50 சேர்த்து அனுப்புக.**



**திருமகள் நிலையம்,**
**55, வெங்கட்நாராயணா ரோடு,**
**தி. நகர், சென்னை — 17.**
**போன்: 442899.**



நரையில் பாதிக்கப்படுவதற்கு முக்கிய காரணம் அவர்கள் தலைமுடியின் மயிர்க்கால்களில் உயிர்ச்சத்துக்கள் இல்லாமல் போவதாகும். எனவே வாரத்திற்கு ஒரு முறையாவது கூந்தலில் சிறிதளவு வெண்ணெயைத் தடவிக் கொண்டு குளிக்கும் பழக்கத்தைக் கையாண்டால் தலைமுடி நரைப்பது தானாக நிற்கும்.

நரை முடிக்கு வேறு சில காரணங்களும் உண்டு. சிலருக்கு இது பரம்பரையாய் வருகிறது. சிலருக்கு திடீர்த் தாக்குதல்கள் அதிர்ச்சி தரும் செய்திகள், துயரமான நிகழ்ச்சிகள், கவலை...... நாம் உண்ணும் உணவில் வைட்டமின் 'ஏ' யும், 'டி' யும் குறைவாக இருந்தால் இந்த இழப்பின் காரணமாகவும் முடிகள் நரைக்கத் தொடங்கும். எனவே வைட்டமின் ஏ, டி ஆகியவற்றை உணவில் போதிய அளவு சேர்த்துக் கொள்ளவும்.

# அலங்காரம்

விதவிதமான முடியலங்காரங்களால் பெண்கள் தங்கள் தோற்றத்தை மிக அழகாகக் காட்டுகிறார்கள். இத்தகைய கூந்தல் மாதத்திற்கு அரை அங்குல வளர்ச்சியைக் காண்கிறது. குறிப்பிட்ட அளவு வளர்ச்சியை அடைந்ததும் அவை வளருவதில்லை. சரிவிகித உணவு ஒன்றினால் தான் அதனை வளமாகவும், பலமாகவும் வைத்திருக்க முடியும்.

புரோட்டீன், வைட்டமின் பி 12, வைட்டமின் C மற்றும் இரும்புச் சத்து ஆகியவை தலைமுடிக்கு ஊட்டம் தரும் சத்துக்கள். ஈரல், சிறுநீரகம், ரொட்டி, முட்டை ஆகியவற்றில் வைட்டமின் பி 12, சத்து மிகுதியாயுள்ளது. வெண்டைக்காய், பச்சைக் காய்கறிகளை முடிந்த அளவு உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும். பாலிலும் கூந்தலுக்குத் தேவையான உயிர்ச்சத்து அதிக அளவில் உள்ளது.

முக அழகிற்கு மகுடமாய் விளங்குவது கூந்தல் அலங்காரமே. தலைமுடியைப் பொறுத்தவரையில் பலருக்கும் பல பிரச்னைகள். சிலருக்கு இளவயதிலேயே முடி நரைத்து விடும். வேறு சிலருக்குப் பொடுகு இருக்கும். மற்றும் வழுக்கைத் தலை, ஏராளமான அளவில் முடி கொட்டுதல் இப்படி எத்தனையோ பிரச்னைகள்.

இரவு படுக்குமுன் சிறிதளவு வெதுவெதுப்பான விளக்கெண்ணெயைத் தலையில் தடவிக் கைவிரல்களால் நன்றாகக் கோதித் தேய்த்துவிட்டுப் படுத்துக் கொள்ள வேண்டும். காலையில் எழுந்ததும் தலைக்குச் சிகைக்காய் போட்டுக் குளிக்க இந்தச் சிகிச்சை தலைநரையைப் போக்கச் சிறந்த முறையாகும்.

முட்டையின் வெள்ளைக் கருவை நன்றாக நுரை பொங்க அடித்து எலுமிச்சம் பழச் சாற்றோடு கலக்க வேண்டும். குளிப்பதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன் இக்கலவையை மண்டையோட்டில் நன்கு படும்படி தேய்க்க சீயக்காய்ப் போட்டுக் குளிக்க வேண்டும். இச்சிகிச்சையால் பொடுகு உதிரும்.

பொடுகிற்கு எலுமிச்சம்பழச் சாறும் ஒரு நல்ல மருந்து. எலுமிச்சம் பழச்சாற்றை எடுத்து மயிர்க்கால்களில் படும்படியாக நன்றாகத் தேய்த்து ஒரு மணி நேரம் ஊற வைத்து, சீயக்காய் தேய்த்துக் குளிக்க வேண்டும். இப்படித் தொடர்ந்து செய்து வந்தால் தலையில் பொடுகும் வராது. தலைமுடியும் பளபளப்பாய் இருக்கும்.

சிலருக்குத் தலைமுடி உதிர்ந்து அங்கொன்றும் இங்கொன்றுமாய்க் காணப்படும். தலைமுடி உதிர்வதற்குப் பல காரணங்கள் உண்டு. மயிர்க்கால்கள் பலமில்லாவிட்டாலும் முடி உதிரும். காரமுள்ள உணவை மிகுதியாக உட்கொண்டாலும் முடி உதிரும். டைபாயிடு, அம்மை போன்ற நோய்களின் தாக்குதலாலும் முடி உதிரும்.

தினமும் தலைமுடியைத் தண்ணீரில் கழுவ வேண்டும். தலைக்குத் தேங்காய் எண்ணெயையும், நல்லெண்ணெயையும் உபயோகிப்பது நல்லது. குளிக்கும் போது தலைக்குச் சோப்பை உபயோகிக்கக் கூடாது. சோப்பிலுள்ள காரம் தலைமுடியில் உள்ள பளபளப்பைப் போக்குவதோடு பழுப்பு நிறத்தையும் உண்டாக்கும்.

பெண்களுக்கு வழுக்கை என்பது பெரும்பாலும் இல்லை. இருந்தாலும் சிலருக்கு ஏற்படலாம். இவர்கள் இரும்புச் சத்து, அயோடின், வைட்டமின் பி ஆகியவற்றை உணவில் அதிக அளவில் சேர்த்துக் கொள்ள வேண்டும். மண்டைக்குச் செல்லும் இரத்த ஓட்டத்தை இந்த அயோடின் சத்து அதிகப்படுத்துகின்றது. அயோடின் சத்துக் குறைந்தால் தலைக்குச் செல்லும் இரத்த ஓட்டம் குறையத் தொடங்கும். அதனால் முடிகள் பலமிழந்து உதிரத் தொடங்கும். எனவே, கூந்தலின் ஆரோக்கியத்திற்கு அயோடின் சத்து மிகவும் அவசியம்.

ஹார்மோன் கிரீம்கள், நிலையாகக் கூந்தலைச் சுருள வைக்கும் கலவைகள், கூந்தல் சாயம், கூந்தலைக் கழுவும் திரவம் என்று கடைகளில் கிடைப்பதையெல்லாம் உபயோகிப்பது ஆரோக்கியமான விஷயமல்ல என்கிறார்கள் மருத்துவர்கள். இவற்றால் கூந்தல் மட்டுமல்ல, நமது சருமமும் கெட்டுப் போகக்கூடும். எனவே இவற்றை உபயோகிப்பதில் அதிகக் கவனம் தேவை.

கூந்தலுக்கு ஒழுங்காக எண்ணெய் தடவிச் சிறிது நேரம் ஊற வைத்து, பின்னர் முட்டையின் வெள்ளைக் கருவை நன்கு அடித்துக் கலந்து கூந்தலில் தேய்த்துக் கொள்ளவும். அது முழுவதும் உலர்ந்தபிறகு, ஷாம்பு அல்லது சிகைக்காய் போட்டுக் கூந்தலைச் சுத்தம் செய்யவும். இந்த முறையானது கூந்தல் அடர்த்தியாக வளர உதவி செய்கிறது.

எண்ணெயைக் கூந்தலின் நுனி வரையில் ஓட்ட வேண்டும். அப்போதுதான் கூந்தலின் நுனியில் பிளவு ஏற்படாது. எண்ணெய் தடவிய பிறகு சிறிது நேரம் ஊற வைத்துப் பின்னர் தலையை வாரிக் கொள்ள வேண்டும். தலைக்குக் குளிக்கும் போது முதலில் தேங்காய் எண்ணெயைக் கைகளில் ஊற்றிக் கொண்டு தலையில் நன்றாகத் தேய்க்க வேண்டும். பிறகு வேர்க்கால்களில் எண்ணெய் இறங்கும் அளவிற்கு சூடு பறக்கத் தேய்க்க வேண்டும். 2 மணி நேரம் எண்ணெயில் ஊறிய பிறகு சிகைக்காய் கொண்டு தலையைத் தேய்த்துக் குளிக்க வேண்டும். சிகைக்காய்ப் பொடியை வெளியில் வாங்குவதை விட வீட்டிலேயே தயாரித்துக் கொள்வது தான் நல்லது. வெளியில் விற்கும் கலப்படப் பொடிகள் தலைமுடிக்குத் தீங்கு விளைவிக்கும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

ஓவல் வடிவ முகமாயிருந்தால் உங்களின் உயரம், வயது, அழகு ஆகியவற்றை மனத்தில் கொண்டு எந்தவிதமாக 'வேண்டுமானாலும் தலைமுடியை அலங்கரித்துக் கொள்ளலாம்.

சதுர வடிவ முகமாயிருந்தால், தலையின் நடுவில் வகிடு எடுக்கக் கூடாது. பக்கவாட்டில் வகிடு எடுத்துக் காதுகளை மூடி வாரிக் கொள்ள வேண்டும். உங்கள் முகத்தை ஒல்லியாகக் காட்ட வேண்டுமென்றால் முகத்தின் இரண்டு பக்கமும் முடியை நெருக்கமாகவும், அழுத்தியும் வாரிவிட வேண்டும்.

தினந்தோறும் காலையில் நல்ல மென்மையான பிரஷ்ஷைக் கொண்டு தலை முடியை வேர்க்கால்களில் இருந்து அவற்றின் முனை வரைக்கும் நன்றாகச் சீவிவிட வேண்டும். வலுவாகவும், அழுத்தமாகவும் பிரஷ்ஷை உபயோகிக்கக் கூடாது. சிக்கல் எதுவும் இல்லாமல் அதிக இடைவெளி கொண்ட சீப்புகளின் மூலம் அதன் போக்கிலேயே மெதுவாகச் சீவி விடவேண்டும்.

மென்மையான ஷாம்புகளையே உபயோகிக்க வேண்டும். அடிக்கடி ஷாம்புகளை மாற்றக் கூடாது. தலை குளிப்பதற்குச் சூடான நீரை உபயோகிக்கக் கூடாது.

வாரத்தில் இரண்டு முறை இரவு படுக்கும் போது தலையில் சிறிதளவு விளக்கெண்ணெய் தடவி நன்றாகப் பரவலாகத் தேய்த்து மறுநாள் காலையில் தலைக்குக் குளித்து வர வேண்டும். இச்சிகிச்சையால் தலைமுடி மினுமினுப்போடும் மிருதுவாகவும் இருக்கும்.

ஷாம்புவை உபயோகிப்பவர்களும் விளக்கெண்ணெய் உபயோகிக்கலாம். தலைக்குக் குளிப்பதற்கு முந்தின நாள் இரவோ அல்லது குளிப்பதற்கு ஒரு மணி நேரம் முன்னதாகவோ தலையில் விளக்கெண்ணெய் தடவி நன்றாக மசாஜ் செய்து ஊற வைத்துக் குளிக்க வேண்டும்.

ஷாம்புவை உபயோகித்துக் குளித்ததும் கடைசியாக (அ) எலுமிச்சம்பழச் சாற்றைக் கலந்து குளித்து வருவது நல்லது.

வாரத்தில் நான்கு நாட்களுக்கு விளக்கெண்ணெயையும் அயோடினையும் மாற்றி மாற்றி (ஒரு நாளைக்கு ஒன்றாக) தலைக்கு உபயோகித்து வந்தால், தலை முடி உதிர்வதைத் தடுக்கலாம்!

— **ஜெயலட்சுமி**

புகைப்படம்: **அழ. காசி விஸ்வநாதன்**

பிஸிபேளாபாத் தயாரிக்கும் போது வெங்காயத்துக்குப் பதிலாக மணத்தக்காளி வற்றல், சுண்டைக்காய் வற்றல் ஆகியவற்றை வதக்கிப் போட்டால் புது வித சுவையோடு இருக்கும். வெங்காயத்தை உணவில் சேர்த்துக் கொள்ளாதவர்களும் விரும்பிச் சாப்பிட வசதியாயிருக்கும்.

—விஜி.








மாறிக் கொண்டிருக்கும் காலத்தின் எதிரொலியாக இது போன்ற மதக்கொள்கைகள் சார்ந்த கருத்துக்கள் சிறிது சிறிதாக மாறி எல்லாச் சமுதாயத்தினருக்கும் பொதுவான ஒரு பண்டிகையாகக் கொலு இப்போது மாறிக் கொண்டிருக்கிறது. சென்னை இராஜா அண்ணாமலைபுரத்திலுள்ள ''நவஜா'' இல்லத்தைச் சேர்ந்த திருமதி லக்ஷ்மி ஜெயராமன் கூறுகிறார்:

''பழங்காலப் பாரம்பரியத்தின் படிதான் நாங்கள் நவராத்திரி கொண்டாடுகிறோம். பத்து நாட்களும் லலிதா சஹஸ்ரநாமம் கூறி தேவிக்குப் பூஜை செய்கிறோம். ''தேவி பாகவதமும் இராமாயணமும் பாராயணம் செய்கிறார்கள். உறவினர்களையும் நண்பர்களையும் அழைத்து வெற்றிலை, பாக்கு, மஞ்சள், முதலான மங்கலப் பொருட்களை அளிக்கிறோம். சுமங்கலிப் பெண்களுக்குப் புடைவையும் கன்யாக் குழந்தைகளுக்குப் பாவாடையும் அளிக்கிறோம். வெறும்







பெண்மையை மதிக்கிறார்களோ, என்னவோ நம்மவர்கள் எல்லோரும் பெண் தெய்வங்களுக்குக் கொடுக்கும் மரியாதையே அலாதிதான். ஆனால், பெண்மையை, பெண்மையின் சக்தியை உணர்ந்து போற்றிய நம் முன்னோர் பிரம்மா தன் நாவிலே சரஸ்வதிக்கும், திருமால் தன் மார்பிலே திருமகளுக்கும் ருத்திரன் தன் உடலில் இடப்பாகத்தையே உமையவளுக்கும் கொடுத்திருப்பதாகச் சித்திரித்துள்ளனர். இந்த முதல் அன்னை உருவங்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்து, முதல் மூன்று நாட்கள் மலைமகளுக்கு விசேஷமாகவும், இடை மூன்று நாட்கள் அலைமகளுக்கு விசேஷமாகவும் இறுதி மூன்று நாட்கள் கலைமகளுக்கு விசேஷமாகவும் கொண்டாடப்படுகிறது.' இருந்தாலும் இது, மிகவும் பெயர் பெற்றது துர்க்கா பூஜை' என்ற பெயரிலேயே.

அம்பாளுக்கு மட்டும் ஆராதனையாகக் கொலுவைக் கருதும் சில வைணவர்கள் நவராத்திரிக்கு அவ்வளவாக முக்கியத்துவம் அளிப்பதில்லை.

மரப்படிகளில் பொம்மைகளை வரிசையாக அடுக்காமல் புராணக் கதைகளைக் கலைநயத்துடன் அறிவுபூர்வமாகக் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுப்பதற்கு இதை ஒரு சந்தர்ப்பமாகப் பயன்படுத்திக் கொள்கிறோம். பல சமயங்களில் 'கிருஷ்ண லீலா', ''ஆதி சங்கரர் வரலாறு,'' 'சிவ தாண்டவம்,' 'தேவி மகாத்மியம்,' 'பிள்ளையார் புராணம்,' 'மீனாக்ஷி கல்யாணம்,' 'தெய்வத் திருமணங்கள்' போன்ற கதைத் தொடர்களைக் காட்சிகளாக அமைத்துள்ளோம்.''

''சாவி இல்லாமலேயே மண்ணுலக மாந்

தர்களைத் தம் கைப்பொம்மைகளாக ஆட்டுவிக்கும் தெய்வத் திருவுருவங்களுக்கிடையே, சாவி கொடுத்தால் நடனமாடும் குழந்தைப் பொம்மைகளும் இடம் பெறுவது தான் மாறிவரும் காலத்திற்குச் சான்று. "நீங்கள் சொல்வது ரொம்ப சரி" என்று ஒப்புக் கொள்கிறார் அண்ணா சாலை காதி எம்போரியத்தில் பொம்மைகள் பிரிவில் அஸிஸ்டெண்ட் ஸ்டோர் இன்சார்ஜாகப் பணிபுரியும் எம். அனந்தகுமாரி.

"நவராத்திரிப் பொம்மைகளுக்கு 'ஆர்டர்' கொடுக்கும் முன்பாகப் பொது மக்கள் ரசனையில் என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதைத் தெரிந்து கொண்டுதான் 'ஆர்டர்' கொடுக்கிறோம். அப்போதுதானே விற்பனை நன்றாக அமையும்? உதாரணமாகச் சென்ற சில வருடங்களில் விளையாட்டில் ஆர்வமுள்ள இந்தக் காலக் குழந்தைகளை மனத்தில் கொண்டு நாங்கள் தயாரித்த 'கிரிக்கெட் செட்'டும், வளர்ச்சிகள் பல அடைந்துள்ள சமுதாய நற்பணித் திட்டங்களை வைத்துத் தயாரித்த 'முதியோர் கல்வித் திட்ட' செட், 'சத்துணவுத் திட்ட' செட் போன்ற பொம்மைகளுக்கு மிகச் சிறந்த வரவேற்பு கிடைத்துள்ளது. வருடத்துக்கு 200, 300 செட்கள் கூட இவை ஒவ்வொன்றும் விற்பனையாகும்.

இப்போது அந்தக் காலக் களிமண் பொம்மைகளை விட, காகிதக் கூழ் பொம்மைகளைத் தான் அதிகம் தயாரிக்கிறோம். ஒரு சிலர் தான் தெய்வக்களை குன்றாமல் பெரிய திருவுருவங்களைச் செய்வதில் தேர்ச்சி பெற்றவர்களாக இருக்கின்றனர். களிமண் பொம்மைகளைச் செய்வதில் வேலையும் அதிகம். கூலியும் குறைவு. காகிதக் கூழ் பொம்மைகளுக்கோ வேலை குறைவுதான். வைத்துக் கூடச் சுட வேண்டாம். வெயிலில் வைத்தாலே காய்ந்து விடும். இதைச் செய்யத்தான் ஆட்களும் ஆர்வத்துடன் முன்வருகிறார்கள். எனவே பொம்மைகளைச் செய்பவர், வாங்குபவர் இருபாலரது மாறிவிட்ட கருத்துக்



களுக்கு ஏற்பத்தான் நாங்களும் செயல்படுகிறோம்," என்கிறார் அனந்தகுமாரி.

இவருடைய கருத்தை ஆமோதிக்கிறார் 'டாசெல்' (தமிழ்நாடு செராமிக்ஸ் நிறுவனம்) வில் டிசைனராகப் பணிபுரியும் திரு. ரகுநாத் பாபு.

"கொலுவின் போது பொம்மைகள் வாங்க வரும் இல்லத்தரசிகள், நவராத்திரியின் போது மட்டும் அலங்காரமாக வைத்துவிட்டுப் பின் பரண் மீது தூக்கி வைத்துவிடும் பொருட்களாக அல்லாமல் எக்காலத்திலும் பயன்படும் 'Utility items' அதாவது அன்றாடத் தேவைப் பொருட்களையே மிகவும் விரும்பி வாங்குகிறார்கள்" என்கிறார்.

மத்தியதரக் குடும்பத்தினரை மனத்தில் வைத்து ரூபாய் ஐம்பதுக்குள் விலை இருக்குமாறு செய்யப்பட்ட வண்ணக் குத்துவிளக்குகள், சங்கிலியால் பிணைக்கப்பட்ட தொங்கும் சர விளக்குகள் ஆகியவற்றுக்கும் நல்ல வரவேற்பு இருக்கிறதாம். பிள்ளையார், நவக்கிரகங்கள் ஆகிய தெய்வ உருவங்கள் தவிர மேனாட்டுப் பாணியைக் கடைப்பிடித்துச் செய்யப்பட்ட ரோமியோ ஜூலியட், சாக்ரடீஸ், போன்ற சிலை வடிவங்களும் நன்கு விற்பனையாகின்றன. கொலுவின் போதும் பயன்பட்டுப் பின்பு 'ஷோ கேஸி'லும் அலங்காரமாக வைக்கப்படும் 'பானை ஒன்றை நளினமாகத் தூக்கிச் செல்லும் ராஜஸ்தான் பெண்' 'அஜந்தா ஓவியங்களை முன்னோடியாகக் கொண்டு செய்யப்பட்ட உருவங்கள்,' 'குளிக்கும் அழகி' ஆகியவற்றையும் மக்கள் விரும்பி வாங்குகிறார்கள் என்கிறார் ரகுநாத் பாபு.

பொம்மைகளைப் போலவே கொலுப் படிகளும் இடப் பிரச்னையைச் சமாளிக்கும் வகையில் தனித்தனியாகப் பிரிக்கக் கூடிய படிகளாகவும், மடக்கு படிகளாகவும் சற்று மாற்றிப் பொருத்தினால் சமையலறைச் சாமான்கள் வைக்கும் 'ராக்'காகவும் மாறும் படிகளாகவும், தற்காலத்துக்கு ஏற்றவாறு மாறி வருகின்றன. பல வீடுகளில் அடுக்குப் படிகள் இல்லாமலேயே கூட அழகாகக் கொலு அமைக்கப்படுகிறது.

"இவ்வாறு கொலுவுக்கு அடிப்படையே அவரவரது அழகுணர்ச்சியே" என்கிறார் திருமதி பிரதிபா நாராயணன். "நம்முடைய கற்பனை வளத்தையும், கலைநயத்தையும் வெளிப்படுத்த ஒரு நல்வாய்ப்பு. வீட்டை நன்கு அலங்கரித்துப் பார்க்க நல்ல ஒரு தருணம். உபயோகப்படுத்தாமல் மூலையில் போட்டிருக்கும் வாயகன்ற பித்தளைப் பாத்திரங்களைக்கூட நன்கு பாலிஷ் செய்து பூந்தொட்டிகளாகப் பயன்படுத்தலாம். இன்னும் சிறிது மனத்தைச் செலுத்தி யோசித்தால் பல புது ஐடியாக்கள் கிடைக்கும். நாமும் நன்கு அலங்கரித்துக் கொண்டு வீட்டையும் நன்றாக அமைத்து, நாலு பேரைக் கூப்பிட்டு அளவளாவினால் கிடைப்பது குன்றாத உற்சாகமும், புத்துணர்ச்சியுமல்லவா?"

ஆம். என்னதான் மதப்போர்வையில் ஒளிந்து வாழ்ந்தாலும், அன்றாட வாழ்வின் இயந்திர கதியைச் சற்றே மறந்து, மரத்துப் போன மனத்திற்குப் புதுத் தெம்பு அளிக்க வேண்டிய அருமருந்தல்லவா பண்டிகைகள்?

— நிர்மலா சக்கரவர்த்தி



# பொம்மைகளை நாமே செய்யலாமே!



இதோ இந்த வருடம் நவராத்திரி வந்து விட்டது. புதுப் புதுப் பொம்மைகள் வாங்கி ஒன்பது படிகள் கட்டி அடுக்கிக் கலர் பேப்பர், கலர் பல்பு என்று எத்தனைதான் அலங்காரம் செய்தாலும், "இதோ இது நான் செய்த கைவேலை" என்று வைப்பது கொஞ்சம் பெருமையாகத்தான் இருக்கும்.

நேரமும், பணமும் அதிகம் செலவாகாமல் ரொம்பவும் சிரமப் படாமல் செய்யக் கூடிய ஒரு கைவேலை கற்றுக் கொள்வோமா?

ஒரு கையில் குடையும் மறு கையில் ஹாண்ட் பாக்கும் வைத்திருக்கும் லேடி பொம்மை (விலை 20 பைசாதான்) நவராத்திரி சமயங்களில் கொட்டிக் கிடக்கும். இதை மொத்தமாக வாங்கினால் இன்னும் 'சீப்'தான். அந்தப் பொம்மைகளின் கையிலிருக்கும் குடைகளையும் 'ஹேண்ட் பேக்'களையும் மெதுவாக எடுத்து விடுங்கள். (படம் 1) இந்த ஒரே மாதிரி பொம்மைகளை எப்படியெல்லாம் மாற்றலாம் தெரியுமா?

சாதாரணமாகத் தையற்கடையில் தூக்கி எறியப்படும் 'பிட்' துணிகள் இவைகளுக்கு டிரெஸ் செய்யப் போதுமானவை.

முதலில் பள்ளி மாணவிகள். மூன்று அங்குல நீளமுள்ள துணியை எடுத்துக் கொண்டு, பொம்மையின் இடுப்பிலிருந்து கால் வரை உயரத்தைக் கணக்குச் செய்து கொண்டு அடியில் மடித்து ஹெம் பண்ணிக் கொள்ளவும். இடுப்புப் பகுதியைச் சுருக்கி டாக் செய்து கொண்டு இடுப்பில் வைத்துப் பின்னால் நூலை இறுக்கிக் கட்டி விட வேண்டும்.

சட்டைக்கு ஒரு கையில் மட்டும் சிறிய பிட் துணியால் மூடிவிட்டால் போதும். (மற்றொரு பக்கம் தலைப்பு வந்துவிடும்) தாவணிக்கு இரண்டு அங்குல நீளமுள்ள துணியை மேல் புறத்தை இடுப்பில் வைத்துப் பாவாடையுடன் . ஒரு தையல் போட்டு விட்டுச் சுற்றிக் கொண்டு வந்து தலைப்பைப் போட்டு, பின்னால் இழுத்துப் பாவாடையின் அந்தப் புறத்தில் ஒரு தையல் போட்டு விடுங்கள்.

அடுத்தது தலை. இதற்குக் கொஞ்சம் பஞ்சு, கறுப்பு நூல், கோந்து, வாட்டர் கலர் (கறுப்பு) இவைதான் தேவை. முதலில் தலையில் கொஞ்சம் கோந்தைத் தடவி விட்டு, கொஞ்சம் பஞ்சை எடுத்துச் சுற்றி ஒட்டி விட வேண்டும். வாட்டர் கலரில் கறுப்பு வண்ணத்தை நீர்க்கக் குழைத்துக் கொண்டு பஞ்சின் மேல் மூன்று சொட்டு விட்டால் போதும். அது பரவி பஞ்சை அப்படியே கறுப்பாகத் தலைமயிரைப் போல் ஆக்கி விடும்.

இப்போது தலைப் பின்னல், ஒற்றைப் பின்னலா, இரட்டைப் பின்னலா என்று



தீர்மானித்துக் கொண்டு அதற்கு ஏற்றாற் போல் கறுப்பு நூலை நீளமாக ஒன்பது துண்டுகள் வெட்டிக் கொள்ளவும். மேலே ஒன்றாகச் சேர்த்து முடிந்து கொண்டு ஒரு காலுக்கு மூன்று துண்டு வீதம் எடுத்துக் கொண்டு தலை பின்னுவது போல் பின்ன வும். மேல் பகுதியைத் தலையின் பின்பக்கம் அடியில் கோந்தின் உதவியுடன் ஒட்டிவிட்டுப் பின்னலை எடுத்துக் கழுத்தைச் சுற்றி முன்னே போடவும்.

இப்போது மாணவி ஸ்கூலுக்குப் போக ரெடி.

அட்டைப் பெட்டியில் ஒரு ஸ்கூல் தயார் செய்து இந்த மாதிரி மாணவிகள் நிறைய டிரெஸ் செய்து வைத்தால் அழகாக இருக்கும்.

இதே பொம்மைக்கு ரவிக்கையில்லாமல் நீளமாய் ஒரு துணியை வெறும் தட்டுச் சுற்றாகச் சுற்றித் தலைப்புப் போட்டு முன்புறம் மடி வைத்துச் சொருகினால் ஒரு நாட்டுப்புற நங்கையாகி விடுவாள்.

தலைக்குப் பின்னலுக்குப் பதில் பஞ்சையே தனியாக உருண்டையாக்கி சைடில் ஒட்டி விட்டுக் கறுப்பு இங்கை விட்டு விட்டால் சொருகுக் கொண்டை போலிருக்கும். சாதாரண வெள்ளைத் துணியை இடுப்பில் சுற்றி விட்டுத் தலையில் முண்டாசு கட்டி விட்டால், "கிராமத்து ஆள்" தயார்.

பார்க், வயல் வரப்பு என்று கட்டி விட்டு, அட்டையில் இரண்டு மூன்று குடிசையும் கட்டி விட்டு இந்த மாதிரிப் பொம்மைகள் ஆங்காங்கே வைத்து விட்டால் "பாரதி ராஜா" டைப்பில் ஒரு கிராமம் ரெடி.

சில்க் துணியில் இதே பொம்மைக்கு ஐயர், ஐயங்கார், மாத்வக் கட்டுக் கட்டி ஜரிகைப் பேப்பரை மெலிசாகக் கட் செய்து ஜரிகை மேல் ஒட்டி விட்டால், மாமிகள் தயார்.

காலியான வீடு என்று செட் செய்து இது போலப் பட்டுப் புடவை மாமிகள் வைத்தால் அமர்க்களமாக இருக்கும். மண்ணில் சின்ன மலைகட்டி அதில் கோவில் வைத்து மாமிகளைப் படிக்கட்டில் வைத்தாலும் ரம்யமாக இருக்கும்.

புடவை மேல் ஒரு வெள்ளை கோட் தைத்து கையில் ஓர் ஒயரில் வைத்த ஸ்டெதாஸ்கோப் கொடுத்தால் டாக்டரம்மா ரெடி. வெள்ளையில் பிராக்கும் தலையில் வெள்ளை ஸ்கார்பும் கட்டினால் நர்ஸம்மா ரெடி. கோடு போட்ட துணியில் டிரெஸ் செய்து கொண்டு கையில் கட்டுப் போட்டிருக்கும் கணவனை அழைத்துக் கொண்டு மனைவி ஆஸ்பத்திரிக்கு வருகிறாள்.

டிரெஸ் செய்யும் முறையைத் தெரிந்து கொண்டு விட்டால் மற்றது நம் கற்பனைதான். ஆஸ்பத்திரி, வயல், குடிசை,. கோயில், கல்யாண மண்டபம், கடைத் தெரு, ஸ்கூல், காலேஜ் என்று எப்படி வேண்டுமானாலும் செய்யலாம்.

ஒரே மாதிரி உயரத்தில் பொம்மைகள் அமைவதால் பார்ப்பதற்கு நிஜமான மனிதர்கள் நடமாடுவது போல் இருக்கும்.

நிறையப் பணமோ பொருட்களோ தேவையில்லை இதற்கு. கொஞ்சம் பொறுமையும் நிறையக் கற்பனையும்தான் வேண்டும்.

**— கிரிஜா ராகவன்**

புகைப்படங்கள்: **சுபா**

— எஸ். ஜெயலக்ஷ்மி சுந்தரராமன்



நாசமாப் போறவனே, வந்து சோத்தைக் கொட்டிக்கோ! எனக்கு ஏகப்பட்ட வேலை கிடக்கு'' கோபம். ''டக், டக்'' ''ஐயையோ, இன்னிக்கும் பஸ்ஸைக் காணலியே. லேட்டா போனாக் கடுவன் மூஞ்சி மானேஜர் 'கையெழுத்துப் போட விடாதே!'' பரபரப்பு. ''ட்ரிப், ட்ரிப்.'' என்ன, இந்தத் தடவையும் பேப்பர்லே நம்பரைக் காணோமா? நம்ம வம்சமே அதிர்ஷ்டக் கட்டைடாப்பா'' ஏமாற்றம். ''சொட், சொட்.''

இன்னும் இதுபோன்று படபடப்பு, சலிப்பு, வெறுப்பு, சின்னப் பொறாமைகள் — இந்த நவரசநாயகி யார் என்று சுற்றும் முற்றும் பார்க்கிறீர்களா? ஏன் எதிரே கண்ணாடி இல்லையா? பின்னே வேறு யாரும்மா — சாக்ஷாத் திருமதி இல்லத்தரசிதான். ''சரி விடுங்க..அதுக்கென்ன வாழ்க்கைன்னா நாலுந் தான் இருக்கும்!'' என்று சப்பைக் கட்டுக் கட்டுகிறவர்களுக்குத்தான் பின்னால் வரும் 'டக், டக்' 'ட்ரிப், ட்ரிப்' இத்யாதி.

ஒவ்வொரு முறை உணர்ச்சி வசப்படும் போதும், பதற்றம் அடையும் போதும் நம் உடலில் ஜீரணத்துக்கு உதவும் நீர்களைச் சுரக்கும் சுரப்பிகள் தாறுமாறாக வேலை செய்ய ஆரம்பிக்கின்றன. விளைவு — வேறென்ன? வியாதிகள்தான். அந்தக் காலச் சிவப்பிந்தியர்கள் நீதிமன்றத்தில் சாட்சி சொல்பவனை வெறும் அரிசியை மெல்லச் சொல்வார்களாம். அவன் பொய் கூறினால் அவனுக்கிருக்கும் பதற்றம் காரணமாக உமிழ்நீர் சரியாகச் சுரக்காமல் அவன் வாய் உலர்ந்து அரிசியை மெல்ல முடியாதாம். பழங்காலச் சிறையில் பிடிபட்ட ஒற்றர்களுக்கு, கார்போஹைடிரேட் குறைந்த, புரோட்டீன் மிகுந்த உணவைக் கொடுப்பார்களாம். இது அவர்கள் உடல் எடையைக் குறைத்து, நரம்பு மண்டலத்தைப் பலமிழக்கச் செய்து, மனோ திடத்தைக் குலைத்து இறுதியில் எல்லா ரகசியங்களையும் கக்கி விடும்படி செய்யுமாம். இப்போது விஞ்ஞான ஆராய்ச்சிகளின்மூலமும்பதற்றம் போன்ற உணர்வுகள் ஜீரண உறுப்புக்களைப் பாதிக்குமென்று கண்டுபிடித்துள்ளனர்.

அதிகமான காரம், கிராம்பு, பட்டை போன்ற வாசனைப் பொருட்கள், ஆல்கஹால், கலந்த போதை தரும் மதுபான வகைகள், சிகரெட்டிலிருக்கும் நிகோடின், காப்பியிலிருக்கும் 'காஃப்பின்' எனப்படும் போதைப் பொருள் இவை மட்டுமல்லாமல் கோபம், சலிப்பு போன்ற அதீத உணர்வுகளும்.. வயிற்றில் சுரக்கும் ஜீரண நீரான 'Gastric juice' அதாவது ஜடராக்கினி திரவத்தை அதிகமாகச் சுரக்க வைத்து விடுகின்றன.

டாக்டர் பி. டி. சீனிவாசன் கூறுகிறார்: 'பிறகென்ன, அந்தத் திரவம் பெயருக்கேற்றபடி அக்கினியாக வயிற்றின் உட்புறத் தசைச் சுவர்களை அரித்து விடுகிறது. இதனால் சாப்பிடும்போது மிகுந்த வலி உண்டாகிறது. இது gastric ulcer எனப்படும் வயிற்றுப் புண். சிலவேளைகளில் இந்தப் புண் 'duodenam' என்கிற வயிறும் சிறுகுடலும் இணையும் பகுதியில் ஏற்பட்டால் அது 'duodenal ulcer' அதாவது குடற்புண் எனப்படும்.

குடற்புண்ணால் பாதிக்கப்பட்டவர்களுக்குச் சாப்பிட்டு இரண்டு அல்லது மூன்று மணி நேரம் கழித்து அதாவது சாப்பிட்ட உணவு வயிற்றிலிருந்து சிறுகுடலை வந்தடையும்போது மிக அதிகமான வலி ஏற்படும். பெண்களுக்கு இது ஏற்படுவதற்கு முக்கிய காரணம் அவர்கள் சரியான நேரப்படி சாப்பிடாதது தான் என்கிறார் டாக்டர் சீனிவாசன்.

எத்தனை உண்மை! காலைப் பரபரப்பில் கணவனை ஆபீஸிற்கும், குழந்தைகளைப் பள்ளிக்கும், வேலை செய்யும் பெண்மணியாயிருந்தால் தன்னையும் தயார் செய்யும்

# அல்சருக்கான உணவுக் கட்டுப்பாடு

போது, காலை உணவு, மதிய உணவு எல்லாவற்றிற்கும் டைனிங் டேபிளில் தட்டுகளும், வாய் திறந்த டிபன் பாத்திரங்களும் வரிசையாகக் காத்துக் கொண்டிருக்கும்

எத்தனை இல்லத் தலைவிகள் சாப்பிடவே மறந்து விடுகின்றனர். **"Breakfast like a king, lunch like a prince and dine like a beggar"** என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு.

நாள் பூராவும் செய்யும் வேலைக்கெல்லாம் சேர்த்துச் சக்தியளிக்கும் வகையில், தொலை தூரம் செல்ல வேண்டிய காரின் பெட்ரோல் டேங்க்கை முழுவதும் நிரப்பிக் கொள்கிறோமே அதுபோல, சாதத்தின் தலையில் புளித் தண்ணீர் ரசத்தைக் கொட்டி அள்ளி அள்ளிப் போட்டுக் கொள்ளாமல், நல்ல சத்தான உணவையும், அதை நிதானத்துடன் சாப்பிடுவதற்கு நேரத்தையும், எப்பாடு பட்டாவது ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். காலை உணவு, மதிய உணவு, இரவு உணவு எல்லாவற்றிற்கும் கால அட்டவணை ஒன்றை வைத்துக் கொண்டு, ரொம்ப கண்டிப்பாக இல்லாவிட்டாலும் ஓர் அரைமணி, முக்கால் மணிக்கு மேல் முன்னே, பின்னே போகாமல் சாப்பிட்டு விடுவதும் குடற் புண்ணைத் தவிர்க்கும் இன்னொரு வழி.

எப்பொழுது பார்த்தாலும் வேலை வேலை என்று பறந்து கொண்டு,'பசிக்கும் போதெல்லாம் காப்பியைக் குடித்து அதை மறக்கடித்து, 'நான் சாப்பிடக் கூட நேரமில்லாமல் சம்பாதிக்கிறேன்' என்று பெருமைப்பட்டுக் கொள்பவர்களுக்கு ஒரு சின்ன வார்த்தை: 'நீங்கள் சம்பாதிப்பது எதற்காக? நன்கு ஆரோக்கியத்துடன் நெடுநாள் வாழ்ந்து அனுபவிக்கத்தானே? ஆரோக்கியம் நலிந்தால், சம்பாதித்ததை அனுபவிக்கக் கூட இயலாதையா! இதைச் சாப்பிடக் கூடாது. அதைச் சாப்பிடக் கூடாது. இங்கே போகக் கூடாது. அங்கே போகக் கூடாது என்று மருத்துவர்கள் கட்டளையிட்டு விடுவார்கள். ஆரோக்கியம்தான் பெரும் சொத்து. மற்ற சொத்தையெல்லாம் எப்பொழுது வேண்டுமானாலும் சேர்த்துக் கொள்ளலாம். இதை இழந்தால் இழந்ததுதான்.

'அல்சர்'ரால் அவதியுறுவோருக்கு என்னென்ன உணவு வகைகள் தவறாமல் சேர்க்கப்பட வேண்டியவை, என்னென்ன உணவு வகைகள் தவிர்க்கப்பட வேண்டியவை என்பது பற்றி உணவியல் நிபுணர் கூறுகிறார்:

## சேர்த்துக் கொள்ள வேண்டிய உணவுகள்

பானங்கள்: பால் இனத்தைச் சேர்ந்த அனைத்தும், பழரசங்கள், காப்பி, டீயானால் டிகாக்ஷன் ஸ்ட்ராங்காக இல்லாமல் நீர்த்து நிறையப் பால் சேர்த்து.

தானிய வகைகள்: அவல், பொரி, அரிசி, கோதுமை, சோளப்பொரி, ரொட்டி வகைகள்.

இனிப்பு வகைகள்: கஸ்டர்டு, புட்டிங் வகைகள், ஐஸ்கிரீம்.

முட்டை: பொரித்தது தவிர மற்றெல்லாம்

எண்ணெய் வகைகள்: வெண்ணெய், தாவர எண்ணெய்.

பழ வகைகள்: வாழைப்பழம், திராட்சை, ஆரஞ்சு.

இறைச்சி வகைகள் — காரமில்லாமல் சமைக்கப்பட்டது.

சாஸ், சூப் வகைகள்: அதிகக் காரம், அதிக வெங்காயம் சேர்க்காதது.

புட்டி உணவுகள்: மிக அதிகமாக பதப்படுத்தப்பட்ட பொருட்கள் சேர்க்காத உணவு வகைகள்.

## தவிர்க்க வேண்டிய உணவுகள்

பானங்கள்: மதுவகைகள், பாட்டில் பானங்கள்

ரொட்டி வகைகள்: புதிதான, சூடான, ரொட்டி, பூண்டு சேர்க்கப்பட்ட ரொட்டி.

தானிய வகைகள் — 'பாலிஷ்' செய்யாத பச்சை, முழுத் தானியங்கள்.

இனிப்பு வகைகள்: நிறையச் சாக்லேட், தேங்காய் சேர்ந்த முந்திரிப் பருப்பு போன்றவை சேர்ந்த இனிப்புகள்.

எண்ணெய் வகைகள்: கொழுப்பு வகைகள்.

பழ வகைகள்: அன்னாசி, அத்தி.

கடுகு, மிளகு, வினிகர் போன்ற தாளிக்கும் பொருட்கள்.

காய்கறி வகைகள்: முட்டை கோஸ், காலிஃபிளவர், வெள்ளரி, வெங்காயம், தக்காளி

சப்பாத்தியுடன் ரயிலில் பிரயாணம் செய்வதானால் ஃபிரஷ்ஷாக தக்காளியும், உப்பு + மிளகுப் பொடியும் கூட எடுத்துச் சென்றால், சாப்பிடும் போது, தக்காளியை பொடியாக நறுக்கி, உப்பு+ மிளகுப் பொடியைத் தூவி, சப்பாத்திக்குத் தொட்டுக் கொண்டு சாப்பிட்டால் பிரமாதமாக இருக்கும்.

— உமா

# "என் டூத்பேஸ்ட்டை நான் மாற்ற வேண்டுமா? அதற்கான காரணம்?"



## இதோ மூன்று காரணங்கள்: கிராம்பு+ஃப்ளோரைட்+மிண்ட்.

கிராம்பின் நற்குணம் துர்நாற்றம் விளைவிக்கும் பாக்டீரியாக்களிடமிருந்து பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கிறது.

ஃப்ளோரைட் தரும் பாதுகாப்பு சொத்தையும், பற்குழிகளும் ஏற்படாமல் தடுக்கிறது. பல் எனமலை பலப்படுத்துகிறது.

மிண்ட் தரும் புத்துணர்ச்சி வாய் மணக்கும் சுவாசத்தை வழங்குகிறது.

ப்ரூடண்ட் மட்டுமே பற்களைப் பராமரிக்க இத்தகைய நிக–ரற்ற சிறப்புகளை ஒரு சேர அளிக்கிறது—அதுவும் அருமை–யான சுவை கொண்ட டூத்பேஸ்ட்டில்!

அரிய ஸாஃப்ட் ஸ்க்வீஸ் ட்யூப் நேர்த்தியானது. ஆகையால் இறுதிவரை டூத்பேஸ்ட்டை உபயோகிக்கலாம்.

பார்லே




மகத்தான மூன்று - பற்களைப் பராமரிக்க நன்று.

# *Sakthi Hall*

**BRASSIERS**

பெண்மையின்
இளமைக்கு இனிமை
சேர்க்கும் புதுமை
உண்மை!!!

சக்தி ஹால் பிரா







சக்தி ஹால்
68, இரண்டாவது
அக்ரஹாரம்
சேலம்-636 001
போன்: 65887

போன்ற வாசனை அதிகமான பச்சைக் காய்கள்.

மற்றும் காரமான ஊறுகாய் வகைகள், அதிகமான எண்ணெயில் பொரிக்கப்பட்ட உணவுகள், சூயிங்கம் போன்றவை.

இவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய மாதிரி உணவுப் பட்டியல்:

அதிகாலை — பால்,
காலை — ரொட்டி, வெண்ணெய்.
நடுப்பகல் — பால்
மதிய உணவு — பருப்பு சாதம், கறி, தயிர்.
சாயந்திரம் — சமைத்த வேர்க்கடலை, டீ.
இரவு உணவு — தயிர் சாதம், புதினாச் சட்னி.

'அல்சர்' நோயாளிகள் எப்போதும் உட்கொள்ள வேண்டியது **'Bland Diet'** எனப்படும் காரம், எண்ணெய் குறைவாக இருக்கும் மித உணவு. உணவுக்கு இடையிடையே பாலைச் சேர்த்துக் கொள்ளும்படியும் மருத்துவர்கள் இவர்களுக்கு அறிவுரை கூறுகிறார்கள்.

ஆனால் சத்துணவியலில் டாக்டர் பட்டம் பெற்று பம்பாயில் இவ்வியலில் ஒரு கல்லூரியையே தோற்றுவித்திருக்கும் கவிதா முகி கூறுகிறார்: 'அல்சர்' நோயாளிகள் அவ்வப்போது பால் குடிப்பது தற்காலிக நிவாரணம்தான் தரும். ஏனென்றால் கொஞ்ச நேரத்துக்கு வயிற்றின் உட்புறச் சுவர்களை ஜடராக்கினியின் அமிலத் தன்மையிலிருந்து பாதுகாக்கிறது. அந்த நேரம் வலி மட்டுப்படுகிறது. இவ்வழியில் நோயிலிருந்து நிரந்தரமான தீர்வு கிட்டாது''

'அல்சர்' ஏன் வருகிறது என்பதற்கு அவர் கூறும் முக்கிய காரணம், 'stress' அல்லது கவலை, ஏமாற்றம் இவற்றால் நரம்பு மண்டலம் கூடிய சக்தி பெற்று உடனடி வேலைக்குத் தயாராகிறது. அதுபோலவே தசைகளும் அதிக சக்தி பெறுகின்றன. இந்தக் கூடுதல் சக்தி வேறு வழிகளில் வெளியேற்றப்படாவிட்டால் உடலுக்குள்ளேயே சிறைப்பட்டு, மெல்லிய நரம்பு மண்டலத்தையே 'எரித்து' (பயனற்றுப் போகச் செய்து) விடுகிறது. இதற்கு மாற்று என்ன? இந்த அதிகப்படி சக்தியை இயற்கையான உடற்பயிற்சிகளின் மூலம் வெளியேற்றி விடவேண்டும். 'ஜாக்' செய்தல், ஓடுதல், நீந்துதல் போன்ற பயிற்சிகள் உகந்தவை. இல்லாவிட்டால் கோபம் அதிகமாக வரும்போது அன்றைய டிபனுக்குச் சப்பாத்தியோ, பூரியோ செய்யும் விடலாம். கோபத்தையெல்லாம் மாவில் காட்டி அழுத்தி அழுத்திப் பிசையும் போது கோபமும் போய்விடும். மாவும் மிக மிருதுவாகி அன்றைய டிபனும் கனஜோராக அமைந்துவிடும்.

உடல் ஆரோக்கியத்தின் முதல் எதிரியான கவலையை ஒழிப்பதற்கு 'மனத்திற்குப் பிடித்த சம்பவங்களை நினைவு கூர்தல், பாட்டு, அவரவருக்குப் பிடித்த பொழுது போக்கில் ஈடுபடுதல், தியானம் இவற்றையும் கூறுகிறார் கவிதா முகி. தான் படித்த 'கவலை' பற்றிய வேடிக்கையான கருத்தைத் தருகிறார்.

''ஏன் கவலைப்பட வேண்டும்? உடல் நலம் பற்றிய இரண்டே இரண்டு நிலைகள் — ஒன்று உடல் நலம் நன்றாக இருக்கும். இரண்டு — நலிந்திருக்கும். முதல் நிலை பற்றிக் கவலையில்லை. இரண்டாவதென்றால் — ஒன்று மீண்டும் நலமாகிவிடும். இல்லையென்றால் இறந்து விடுவோம். முதலாவதென்றால் கவலையில்லை. இரண்டாவது என்றால் ஒன்று சொர்க்கத்துக்குப் போவோம். இல்லை நரகத்துக்கு. முதலாவதென்றால் கவலையில்லை. இரண்டாவது என்றாலும் கவலை ஏன்? அங்குதான் நம் நண்பர்கள் நிறையப் பேர் இருப்பார்களே!''

இதற்கெல்லாம் மேலாக, தொட்டதற்கெல்லாம் சோர்ந்து போகாமல் மனத்தை லேசாக வைத்துக் கொள்ளப் பழகிக் கொள்ள வேண்டும். மனத்தை லேசாக்கும் மாமருந்தல்லவா சிரிப்பு? அது ஜீவராசிகளில் மனிதனுக்கு மட்டுமே வழங்கப்பட்ட வரப்பிரசாதம். நார்மன் கஸின்ஸ் என்பவர் 'கான்சர்' நோயையே சிரித்துச் சிரித்தே குணமாக்கிக் கொண்டாராம். அழகு நிபுணர்கள் கூடச் சிரித்துக் கொண்டே இருந்தால் முகம் பொலிவு பெறும் என்று கூறுகிறார்கள். பிறகென்ன தடை? உலகைக் காமிராவின் கண்ணாகக் கற்பனை செய்து கொள்வோம். எப்போதும் 'சீஸ்' என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே இருப்போம்.

— நிர்மலா சக்கரவர்த்தி

---

பருப்புப் பொடி செய்யும் போது, ஒன்றரை ஆழாக்கு 'கொள்ளை' வாணலியில் லேசாக வறுத்துக் கொண்டு, அத்துடன் ஒன்றரை ஆழாக்கு, துவரம் பருப்பு, எட்டு மிளகாய் வற்றல், ஒரு ஸ்பூன் மிளகு, ஒரு ஸ்பூன் சீரகம், உப்பு, பெருங்காயம் இவற்றைச் சேர்த்துப் பொடி செய்து நெய் கலந்த சாதத்துடன் பிசைந்து சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும். 'கொள்ளு' வாயுவுக்கு ஏற்ற மருந்தும் கூட.

— உமா.

# பயணங்கள் மறப்பதில்லை

கல்கத்தாவிலிருந்துதிவ்யாதான் எழுதியிருந்தாள். "அன்புள்ள அக்கா தீப்தாவுக்கு திவ்யா அ. நெ. ச. விக்ஞாபனம். (சோம்பேறி... முழுக்க எழுத நேரமில்லையாம்.) வழக்கம் போல் இந்த வருடமும் உங்களையெல்லாம் பார்க்காமல் திரும்புவதாக இல்லை. புதிய ஊருக்குப் பக்கத்தில் பார்க்கக் கூடியதாக என்ன இருக்கிறது என்று விசாரித்து வை. ஒரு ஜாலி ட்ரிப் போய் வரலாம். இல்லாவிட்டால் இதுகளை வீட்டில் உட்கார வைப்பது ரொம்ப கஷ்டம்... திவ்யா"

குழந்தைகள் பெரிய அட்டவணையையே தயாரித்து விட்டன. கடைசியாகப் பொன்முடி போகலாம் என்று தீர்மானித்து, சஸ்பென்ஸ் லிஸ்டில் எழுதி வைத்தோம்.



ஸ்ரீமயோ ரகுநந்தன்

திவ்யா குடும்பத்துடன், அவள் கணவரின் ஒன்றுவிட்ட பெரியம்மா சீதா மாமியும் வருவதாக எழுதியிருந்தது எங்களுக்கெல்லாம் ரொம்ப சந்தோஷமாக இருந்தது.

வந்தார்கள்.

ரொம்ப 'ஷார்ட் ஸ்டே'யாக இருந்ததால், மறுநாளே, பொன்முடிக்குப் போக, ஒரு வேனுக்கு ஏற்பாடு செய்து விட்டார் அவர்.

இட்லிக்கு அரைத்து வைத்து, 'மன்சிங்குக்கும் வாங்கி வைத்துவிட்டு, மறுநாளைக்கு, குழந்தைகளுக்கு வேண்டிய உடைகளையும் தயாராய் டேபிளில் எடுத்து வைத்து, அலாரத்தையும் செட் – அப் செய்து விட்டுப் படுத்தோம்.

திடீரென்று நினைவு வந்து திவ்யா எழுந்து உட்கார்ந்தாள்.

"தீப்தா... ராத்திரி ஒரு மணிக்கே எழுந்து எந்த அமர்க்களமும் செய்யாதே..." என்று எச்சரித்துவிட்டு உறங்க ஆரம்பித்தாள்.

வாஸ்தவம்தானே! முன்பு கோவையிலிருந்தபோது, ஊட்டி போக பிளான் செய்து, என் சுபாவப்படி ராத்திரி ஒரு மணிக்கே எழுந்து செய்த அமர்க்களம் அவளை அப்படிப் பேசச் செய்தது. சீதா மாமியின் 'குறட்டை ஒலி தாலாட்ட எப்போது உறங்கினேனோ?

மெதுவாகக் கண்விழித்த போது, திவ்யா மீண்டும் தடுத்தாள்.

"ஒன்றும் கவலைப்படாதே, தீப்தா... பூரி, கிழங்கு, சிப்ஸ் புளியோதரை எல்லாம் ரெடி... இனிமேல் 'பாக்' செய்துவிட்டுக் கிளம்பினால் போதும். அப்போது எழுப்புகிறேன்" என்று செல்லமாகக் கூற, மசாலா வாசனை மூக்கைத் துளைத்தாலும், 'தேவை ஒரு தங்கை, இப்படி' என்று உறங்கி விட்டேன்.

யாரோ பிடித்து உலுக்கும் போது பாய்ந்து எழுந்தேன். திவ்யாதான்...

"ஒன்று அர்த்த ராத்திரி கலாட்டா... இல்லாவிட்டால் கும்பகர்ணனுக்குத் தங்கையா? நேரமாச்சு எழுந்திரு."

நான் முறைத்தேன்.

"நீதானே சொன்னாய், பூரி மசாலா முதல் புளியோதரை வரை எல்லாம் ரெடி என்று..."

"கனவா... பூரியாவது, புளியோதரையாவது... இட்லி அல்லவா ரெடி செய்யணும்? புளி எங்கே வைத்திருக்கிறாய்? வருஷத்துக்கு ஒரு ஊர் மாற்றுகிறாய். சாமானைக் கண்டு பிடிப்பதற்குள்...."

நான் வேகமாகக் குளியலறைக்குள் புகுந்து கொண்டேன்.

சீதா மாமி அதற்குள் இரண்டு அடுப்புகளையும் மூட்டி, இட்லி, சட்னி, வெந்தயக் குழம்பு, வடாம் என்று மூழ்கியிருந்தாள்.

நான் அவர் பார்வைக்குப் பயந்து, ரொம்ப சுவாரசியமாகப் பாத்திரங்களைத் துடைக்கத் தயாராக வைத்தேன்.

அவர் நொடிக்கொருதரம் உள்ளே எட்டிப் பார்க்க...

"ஓ... இன்னும் காப்பி தயாராகவில்லையா...?"

மாப்பிள்ளை காமிராவும் கையுமாக உட்கார்ந்துவிட்டார். குழந்தைகள் தானே அழகி என்று காதிலும், கையிலும், கழுத்திலும் எதையெதையோ மாட்டிக் கொண்டு



அமர்க்களப்படுத்த, பெரியவன், "ஏம்மா... வேன் வர இன்னும் நேரமிருக்கே... காப்பி மாத்திரம் எப்படிப் போதும்? பேசாமல் இட்லியைக் கொடுத்திடு," என்று காதுக்குள் மந்திரம் ஓதினான்.

சீதா மாமிக்குப் பயந்து நான் மௌனமாக இருக்க, அவரும் மாப்பிள்ளையும் நான் தட்டுடன் வருவேன் என்று கண்டும் காணாதது போல் அமர்ந்திருந்தார்கள். நான் ரொம்ப பணிவாகக் காப்பி ஃப்ளாஸ்க்குகளைக் கூடையில் வைக்கும் சாக்கில் நகர்ந்தேன்.

சீதா மாமியும், திவ்யாவும் ஏதோ கசகசப்பில் ஆழ்ந்து, இட்லிகளைச் செலவழிக்க ஆரம்பிக்கவும், வாசலில் வேன் வந்து நிற்கும் ஓசையும் ஒன்ருக இருந்தது. அமளி துமளியை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள். நம்மால் முடியாது.

ஒருவழியாக, சாமான்களையும் ஏற்றி, நாங்களும் ஏறி உட்கார்ந்து கொண்டோம். குழந்தைகள் சந்தடி சாக்கில் கதவோர சீட்டுக்குப் போட்டி போட, டிரைவர் ரொம்ப சாவதானமாக, 'ஒவ்வொரு டர்னிங்குக்கும் அந்தக் கதவு அநேகமாகத் தானுகத் திறந்து கொள்ளும் 'மாஜிக்' பற்றி முன்னெச்சரிக்கை விட்டார். முடிவில் சீதா மாமி கதவுக்குக் காவலாக உட்கார்ந்து கொண்டார்.

இதுதான் ரப்பர், இதுதான் டேபியோகா என்று நான் ரொம்பப் பெருமையாக என் தாவர அறிவைக் காட்டிக் கொண்டு வர, வேன் மலையேறத் தொடங்கியது.

சிறிது தூரம்தான் போயிருக்கும். வேன் நின்று விட்டது.

"இதுவா பொன்முடி?"

திவ்யாவின் கடைக்குட்டி சுதாவுக்கு இப்படித்தான் ரொம்ப விசித்திரமான சந்தேகம் வரும்... எனக்கோ அதற்கு மேல்...

டிரைவர் ரொம்ப சாவதானமாகக் கதவைத் திறந்து, "அதோ அந்த வழியில் போய் நடங்க, கல்லாறு வரும். நல்லா இருக்கும்..." என்ருன்.

கதவைத் திறந்து கொண்டு ரொம்ப யோசித்து நாங்கள் சாவதானமாக இறங்குவதற்குள், குழந்தைகள் சொல்லி வைத்தாற் போல் இறங்கி, ஓடி எங்கோ மறைந்து போனார்கள்.

'இதற்குத்தான் 'பிளேடன்' கதைகள் வாங்கித் தராதே என்றேன். அவர்களை இந்தக் காட்டில் எங்கே தேடுவது? இந்த அட்வெஞ்சரை லேசில் விடுவார்களா?" என்று திட்டிக் கொண்டே மாப்பிள்ளை ஓட நாங்கள் மெதுவாக இறங்கினேம். அந்த அழகான சூழ்நிலையையும், சலசலக்கும் நீரோடையையும் அனுபவிக்க முடியாதவாறு குழந்தைகளைப் பற்றியும், அவர்களைத் தேடிப் போன மாப்பிள்ளையைப் பற்றியும் கவலைப்பட்டுக் கொண்டு, அவர் பின்னல் நடந்தோம்.

எங்கோ தூரத்தில் கத்தலும் கூச்சலும் அதிகரித்தன. "ஒன்றுமில்லை! அவர்தான் குழந்தைகளை 'மானேஜ்' செய்கிருர்" என்று திவ்யா நிம்மதி தந்தாள்!

"வந்ததும் பெரிய பிளாஸ்க்கை தீர்த்து விடுவோம். (அதாவது காப்பியை) அது எங்காவது திரிந்து போனல், அவருக்கு ஆகவே ஆகாது..."

திவ்யாவுக்குக் காப்பி நினைவு வந்துவிட்டது. சீதா மாமி அனைவரையும் 'பார்த்து' அழைத்து வருவதாகச் சத்தியம் செய்யவும் நானும் திவ்யாவும் வேன் இருக்கும் இடத்தை அடைந்தோம்.

ஒரு நிமிடம் செய்வதறியாது நின்றேம். எங்கள் வேன் மாதிரியே நாலைந்து வேன்கள். எது நாங்கள் வந்த வண்டி என்று அறிய முடியாதபடி குழப்பம். டிரைவரைக் காணவில்லை.

சரி, ஒவ்வொரு வண்டியாகத் திறக்க வேண்டியதுதானு?

"அதோ அதுதான் நாம் வந்த வண்டி. பார் கதவையேக் காணவில்லை... எங்காவது விழுந்திருக்கும்..." என்று திவ்யா ஜோக் அடிக்க, என்னுடைய ஆகி வந்த கருப்புக் கூடை கண்ணில் பட்டதும், ஏறி பிளாஸ்க் கூடையை இறக்கி ரெடிமேட் காப்பியைத் தயாரித்தோம்.

சீதா மாமியின் சிற்றுக் குரல் அருகே ஒலிக்க ஆரம்பித்தது. "தீப்தா... முதலில் பெரியம்மாவுக்குக் காப்பி கொடுத்துவிடுவோம். இல்லாவிட்டால் உஷ்ணம் தாங்காது" என்ற எச்சரிக்கையுடன் முதல் காப்பியை நீட்ட, மாமி காப்பியைப் பருகி ஆசுவாசப்படுத்திக் கொண்டாள்.

பிளாஸ்க்கை காலி செய்து, கூடையில் வைத்து, அதற்குள் டிரைவர் கதவை எடுத்து வந்து பொருத்த, வேன் கிளம்பியது.

சிறிது தூரம் போனவுடன், நச்சு மெதுவாகக் கேட்டான்.

"அம்மா.... சுதா எங்கே?"

எல்லோரும் போட்ட கூச்சலில், டிரைவர் பயந்து பிரேக் போட, அதை எதிர்பார்க்காத சீதா மாமி கதவுடன் விழ, அவர் இது எதையும் சட்டை செய்யாது, சுதாவைத் தேடி ஓடிஞர். நானும் ஓடினேன்.

வந்த வழியே இறங்கி, தேடி அலைந்து, கையைப் பிசைந்து பார்க்கையில், "ஆன்ட்டி" என்ற குரல் பாலை வார்த்தது.

காரட் துருவலுடன் பச்சை மிளகாய் உப்பு தக்காளிப்பழத் துண்டுகள் சேர்ப்பதுடன் கடைசியில் வெங்காயத்தையும் பொடியாக நறுக்கிச் சேர்க்கலாம்.

— விசாலாட்சி




# வெறும் ஒரு மிக்ஸி
# வேண்டுமென்றால்
# எதையும் வாங்கலாம்.
# தினசரி நீங்கள்
# பயன் படுத்த
# வேண்டுமென்றால்
# மீனு மிக்ஸ் ஒன்றே!

எத்தனையோ மிக்ஸிகள் மார்கெட்டில் வருகிறது. அவை வந்த சுவடு தெரியாமல் போய்விடுகிறது. ஆனால் மீனு மிக்ஸ் மாத்திரம் 18 வருட காலமாக குடும்பத் தலைவிகளின் உற்ற துணைவனாக விளங்குகிறது. நீண்ட காலம் பழுதடையாமல் உழைக்கும் மோட்டார் உடையது. பிளேடுடன் கூடிய ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜார் ஒன்று எந்த விலையுமின்றி இலவசமாக இத்துடன் தரப்படுகிறது. சிந்தி, சிதறி வீணாகாத வகையில் பிரத்தியேகமான முறையில் வடிவமைக்கப்பட்டது. இவை எல்லாம் மீனுவின் சிறப்பு அம்சங்கள்! இந்திய மிக்ஸிகளிலேயே ஆதி முதலில் ISI யின் 'சிறந்த தர' அங்கீகாரம் பெற்ற மீனு மிக்ஸ் ஒரு வருட உத்தரவாதத்துடன் தரப்படுகிறது.



Meenu Equipments
P.O. Box No. 6909
Coimbatore 641 044

*நம்பிக்கைக்குரிய ஸ்தாபனத்தின்*
*பிரபல்யமான மிக்ஸி.*

**MeenuMix®**
— it's helpfully yours!

திரும்பினேன்.

சற்று தூரத்தில் ஏழெட்டு குழந்தைகளுக்கு நடுவில் உட்கார்ந்து எதையோ சாப்பிட்டுக் கொண்டிருந்தாள் சுதா.

நான் பாய்ந்து ஓடினேன்.

ஏகப்பட்ட குழந்தைகள் புடைசூழ அமர்ந் திருந்த பெண்ணிற்கு அப்போதுதான் உறைத் தது. "இவள் உங்க குழந்தையா... ஸாரி."

"ஓ... நம்ம கேஸ்தான்" என்று அசடு வழிந்தாலும் "வந்து..." என்று நான் ஆரம் பிக்க,

"பரவாயில்லே...." "பாப்பா... இன்னும் கொஞ்சம் பிஸ்கெட் வேண்டுமா...?" என்று அவர்கள் கேட்டவுடன், "தேங்க்ஸ்" என்று முழுப் பாக்கெட்டையும் வாங்கிக் கொண்டு முன்னால் ஓடினாள் சுதா.

'பிகு செய்வது எங்கள் அகராதியிலேயே இல்லை' என்று அசட்டுப் புன்னகை யுடன், நானும் அவரும் நடந்தோம்.

ஒரு முறைக்குப் பத்து முறையாக எண் ணிக் கொண்டு, சீதா மாமி 'சரி வேன் போகலாம்' என்றவுடன் மீண்டும் கிளம்பி யது.

பொன்முடியை அடைந்தோம். வேன் நின்றது. பெரியவர்கள் பராக்கு பார்க்க, சிறியவர்கள் இதுதான் சாக்கு என்று அங்கும் இங்கும் அலைந்து ஏறி இறங்கிய வுடன், சாப்பாடு முடிந்தது.

குழந்தைகளை மேய்க்கும் சாக்கில் ஆண் கள் சென்றுவிட, நான் புல் தரையில் அமர்ந் தேன். திவ்யா, பாத்திரங்களை வண்டியில் வைக்கப் போய்விட்டாள்.

சீதா மாமி, ஆங்கில பெங்காலி புத்த கங்களைப் பரப்பி வைத்துக் கொண்டு,

"டீ.வி.யில் கவாஸ்கர் போன வாரம் பிய்த்து உதறிவிட்டார் இல்லே...." என்று ஆரம்பித்தாள்.

"எதை, பந்தையா...?" என்று அப்பாவித் தனமாக நான் கேட்க, மாமி ஏற இறங்க என்னை ஒருமுறை பார்த்துவிட்டு,

'வாட் எ ஷேம்' என்று லேசான அதிர்வு டன் மீண்டும் புத்தகத்தில் ஆழ்ந்தாள்.

நான், என் அறியாமையை நொந்த வண்ணம் புல் தரையில் அமர்ந்தேன்.

அழகிய வானம், எதிரே அருகில் ஒரு சின்ன மலை. ஏதோ புறம்போக்கில் அதை ஆராய்ந்தபோது, திடுக்கிட்டு எழுந்தேன்.

"மாமி... நம்ப பசங்கள்...." என்று கூவி னேன்.

'ஐயோ, பாவம்... ராத்திரியில் சரியான தூக்கமில்லே. இப்போது தூங்கட்டும். இந்த குட்டி தூக்கத்தில் ஒரு குட்டி கனவு வேறு...' என்ற ரீதியில் சீதா மாமி மீண்டும் புத்தகத் தில் ஆழ்ந்து போக, நான் மீண்டும் அலறி னேன்.

"நிஜம்தான் மாமி.... நம்ம பசங்கள் தான்...

இதற்குள் உலாவப் போன அவரும், மாப்பிள்ளையையும், திவ்யாவும் திரும்பிவர, அருகிலிருந்த டிரைவர், "நான் போய் அழைத்து வருகிறேன்" என்று கிளம்பினார்.

எங்களுக்கோ பயமும் கவலையும். வேறு ஒன்றும் இல்லை. இறங்கும் வேகத்தில் டிரைவர், காலில் கையில் அடிபட்டால், எப்படி நாங்கள் மலையிலிருந்து இறங்குவது?

'இவர் ஸ்கூட்டரோ, காரோ ஓட்டினால் எனக்குப் பரப் பிரம்மத்தைத் தவிர வேறு நினைவு இருந்ததில்லை' என்று திவ்யா ஒரு முறை கூறியிருக்கிறாள்.

எங்களுக்குக் காரைத் தள்ளித்தான் பழக் கம். ஓட்டி இல்லை. முடிவில், நான் எதிர் பார்த்ததுபோல் சீதா மாமி ஒரு குச்சியை யும் உடைத்து எடுத்துக் கொண்டு விறு விறு வென்று இறங்கினாள்.

பதினைந்து நிமிடங்கள் ஆகியிருக்கலாம். பின்னால் குழந்தைகளின் கூக்குரல்.

"உங்களை இனிமேல் சீதா மாமி வந்தால் தான் அழைத்துப் போகணும்..." என்று அவர் உறும,

"சீதா மாமியா... நாங்களாகத்தானே வந் தோம்..." என்று அவர்கள் விழித்தார்கள்.

நாங்கள் பயந்தபடி, மாமி இறங்கிப் போனத் திசையில் விழுந்தடித்துக் கொண்டு ஓடினோம். தூரத்தில் மாமி, குச்சியும் கையு மாக கோபத்துடன் வருவது தெரிய, குழந்தை கள் வந்த வேகத்தில் வேனுக்கு ஓடினார்கள்.

மீண்டும் ஒரு கப் காப்பி சாப்பிட்டவுடன் தான், எங்களது குறிப்பாக சீதா மாமியின் உஷ்ணம் குறைந்தது.

டிரைவர் அருகில் வந்து நிற்பது தெரிந் தது.

"சீக்கிரம் கிளம்பிடணும். மழை வந்தா கஷ்டம்..."

பிரிய மனமின்றி வண்டியில் ஏறினோம்.

அவர் ரொம்ப தூரம் வரை குழந்தைகளை எண்ணிக் கொண்டே வந்தார். அவர் கவலை அவருக்கு.

பாதி தூரம் வருவதற்கும், மழை ஆரம் பிப்பதற்கும் சரியாக இருந்தது. கவலையும் பீதியுமாக நாங்கள் அமர, 'வாட்எவர் வில் பி, வில் பி' என்று ஒரு வார்த்தையுடன் சீதா மாமி 'ஆங்கிலத்தி'ல் ஆழ்ந்து போனார். தூக்கம் விட மும்முரமாக மறந்து, கதவே கண்ணாயிருந்தோம்.

---

ரவை உருண்டை, பயத்த மாவு உருண்டை செய்யும் போது அரைத்த சர்க்கரையையும் நெய்யையும் ஒரு தட்டில் நன்றாகக் குழைத்துக் கலந்தபின் மாவை அதில் போட்டுக் கலந்து உருண்டை பிடித் தால் மிகவும் சுவையாயிருக்கும்.

— விசாலாட்சி

'போதுமடா சாமி' என்று வீடு வந்தவுடன் உள்ளே நுழைந்தவர்களின் கண்ணில் பட்டன கீறி கிழிக்கப்பட்ட பால்பாக்கெட்டுகள்.

''அடடா.... பூனையின் வேலை. காலையில் பால்காரனிடம் சொல்ல மறந்துவிட்டேன்...''

''கல்கத்தாவென்றால் உடனே பால் ரெடி...'' என்று சீதா மாமி ஆரம்பித்தவுடன், குறிப்பறிந்து அவர் செருப்பை மீண்டும் மாட்டிக் கொண்டு பால் வாங்க ஓடினார்.

ஒருவழியாக காப்பி, மீண்டும் டிபன், மிச்சம் மீதி என்று எல்லாவற்றையும் ஒரு கை பார்த்துவிட்டு படுக்கையில் விழுந்தோம்.

காலையில் முதலில் கண் விழித்தது குழந்தைகள்தான்.

தங்களது முதல் நாள் அட்வென்சர்களைப் பற்றி குசுகுசுவென்று பேசியபடி கிடந்தனர். நச்சு சாவகாசமாக மாப்பிள்ளையின் படுக்கையில் போய் அமர்ந்தான்.

அவர் மெதுவாக அவனைப் பார்த்தார்.

''சித்தப்பா, இன்னிக்கும் லீவு போடணுமா... எங்காவது போகப் போறேமா..?''

அவர் ஒரே ஒரு நிமிடம்தான் அவனைப் பார்த்திருப்பார். அடுத்த நிமிடம் பதட்டத்துடன் படுக்கையை விட்டு எழுந்தார்.

''அடடா.... மறந்தேவிட்டேன். திருச்சியில் நாளை ஒரு ஃப்ரெண்டின் கல்யாணம். இன்னிக்கே புறப்படணும். நல்லவேளை இப்போதுதான் ஞாபகம் வந்தது.... திவ்யா... எப்போ வண்டி...'' என்று அலறினார்.

இது வழக்கமாக வரும் அதிர்ச்சிதான். எங்களுக்கு சகஜம். மீண்டும் அடுத்த வருஷம் சந்திப்போம். புறப்படுவோம். அதிர்வோம்... அந்தப் பயணங்களும் மறப்பதில்லை.



எங்கள் வீட்டில் இருக்கும் பொம்மைகளை வைத்தே புதுப்புது விதமாக ஒவ்வொரு வருடமும் கொலு வைப்பது வழக்கம். 20 அம்சத் திட்டம் அமுலான அந்த ஆண்டு ''20 அம்சத் திட்ட கொலு'' வைத்தேன். அந்தக் கொலு அனைவரின் பாராட்டையும் பெற்றதுடன் எங்கள் குழந்தைகளின் பள்ளி ஆசிரியர்களும் மாணவ மாணவிகளும் வந்து பார்க்கும் கண்காட்சியாகவும் அமைந்து விட்டது.

வழக்கமாக 6, 7, 9 என்று படிகள் அமைப்பதையே சற்று மாற்றி அதே படிகளை உயரத்தில் அமைத்து அடியில் ஒரு நகரத்தை உருவாக்கி ''அண்டர் கிரவுண்ட் கொலு''வாக அமைத்தேன். இது சேலத்தில் கொலுப் போட்டியில் 2 வது பரிசும் பெற்றது.

## ...அப்போது நாங்கள் போட்ட அழைப்பிதழ்

கொலுவிருக்கு
கொண்டாட்டமா

போன வருஷம்
போட்டவில்லே

புதுமையான
புறப்பட்டு

அண்டர்கிரவுண்டு
அட்டகாசமாய் —

தங்கள் முகம்
தட்டாமல்

கொலுவிருக்கு
வந்து பாருங்க

சின்ன கொலு
பத்திரிகை

கொலுவிருக்கு
வாருங்கள்

கொலுவிருக்கு
கார் ரேஸும்

பார்த்து வருஷம்
வந்திடுவீர்

எங்க வீட்டிலே
எல்லா நாளுமே

வைத்திருலே
எங்க கொலுவுக்கே

இந்த வருஷமே
இந்த நிமிஷமே

அருமையாகவே
கூட இருக்குதே

இரண்டு ஆகுதே
கண்டு களிக்கவே

— இந்திராணி ஸ்வாமிநாதன்

# நீண்ட காலம் நிற்காமல் உழைக்கும் சக்தி

# நிப்போ சூப்பர் பென்லைட்

புதிய நிப்போ சூப்பர் ஜிங் குளோரைடு பென்லைட் செல்கள்.

- உங்களுடைய காமிரா ஃப்ளாஷ், வாக்மன் மற்றும் உங்கள் குழந்தைகளின் எலெக்ட்ரானிக் விளையாட்டுப் பொருள்களுக்காக மட்டுமே சிறப்பாகத் தயாரிக்கப் பட்டவை.
- அகில உலகப் புகழ் பெற்ற நேஷனல், ஜப்பானின் தொழில் நுட்ப கூட்டுறவுடன் இந்தியாவில் இன்டோ நேஷனல் லிமிடெட்டினால் உருவாக்கப்பட்டவை. உங்களுக்கு இன்று உலகமெங்கும் உபயோகிக்கப்படும் நவீன ஜிங்க்ளோரைட் டெக்னாலஜியின் தரமான பலன் கிடைக்கிறது.
- 'மல்டிபிள் இன்டக்ரேடட் ஸீலிங்' உங்களுக்கு நீண்ட கால உழைப்பை உறுதி செய்கிறது. உங்களுடைய எலெக்ட்ரானிக் சாமான்களுக்கு இரட்டிப்பு பாதுகாப்பு கூட.
- இன்டோ நேஷனலின் அதி நவீன தொழிற் கூடத்தில் தயாரிப்பு.




## நிப்போ சூப்பர்

அபார சக்தி கொண்ட பாட்டரி

everest/S/87/INL/51 Tam B

# நவராத்திரியில் ஆண்களுக்குத் திண்டாட்டம்



ஹரன்



சந்திரசேகரன்

**நவராத்திரி என்றால் பெண்களுக்குக் கொண்டாட்டம்தான். ஆனால் அச்சமயம் ஆண்களுக்கு என்னென்ன பிரச்னைகள் எழுகின்றன? ஆர்வம் உந்த, சில ஆண்களைப் பேட்டி கண்டபோது எவ்வளவு சுவையான விஷயங்கள் தெரிய வந்தன!**

**திரு ஆர்.பி. ஹரன், மெல்லிசைப் பாடகர்:**

மெல்லிசைக் கலைஞரான திரு ஹரன், "நான் தமிழ்நாடு தவிர பிற மாநிலங்களிலும் மெல்லிசைக் கச்சேரி செய்பவன். எனவே டேப் ரெகார்டரில் பிற மொழித் திரைப் பாடல்களைப் போட்டுக் கேட்டுச் சாதகம் செய்வது எனக்கு மிகவும் அவசியமானது. நவராத்திரி சமயம் என் சாதகத்திற்குப் பாதகம் வந்துவிடும். கொலுவிற்கு ஒரு வாரத்திற்கு முன்பே ஒட்டடை அடிக்கிறேன் பேர்வழி என்று என்னை ரூம் ரூமாக விரட்டிக் கொண்டிருப்பாள் என் மனைவி. "இந்தப் பலகையைப் பிடியுங்கள். அந்தப் பெட்டியை இறக்குங்கள்" என்ற மனைவியின் கட்டளைக்கு அடிப்பணிவதோடு வேலை முடிந்துவிடுமென்று நினைக்கிறீர்களா?

"நான் பாடிக் கொண்டிருக்கும்போது, 'இந்த பொம்மையை எங்கே வைப்பது? பார்க்கை எந்தப் பக்கம் கட்டலாம்?' என்று கேள்வி வேறு கேட்டுக் கொண்டேயிருப்பாள். கொலு வைத்த பிறகுதான் உண்மையான தலைவலி. பல ஸ்ருதிகளில் தினமும் மாலையில் வாண்டுகள் விஸ்தாரமாகப் பாடுவது கர்ண கடூரமென்றால், கட்டைக் குரலிலும், கீச்சுக் குரலிலும் பாடும் பெரிய மனிதர் வீட்டுப் பெண்கள் என்னுடைய எக்ஸ்பர்ட் ஒபீனியனைக் கேட்பது மகா தர்ம சங்கடம். மர்மமான ஒரு புன்னகையை பதிலாக அளிப்பேன்!

"ஒருசமயம் 'ஆந்திர மாநிலக் கச்சேரிக்காகத் தீவிரமாகச்' சாதகம் செய்து கொண்டிருந்தேன். ஹாலில் அமர்ந்திருந்த என் மனைவியின் தோழிகள் என்னை வேறு ஒரு பாட்டுப் பாடுமாறு கேட்க, மனைவியை முறைத்தபடியே பாடினேன். வயதான மாமியின் விருப்பமாக அடுத்த இன்னொரு பாடல். இப்படி சில நிமிடங்கள் சென்றபின் நேயர் விருப்பம்போல் ஒவ்வொருவராகப் பாடலைச் சொல்ல, நான் கூச்சத்துடன், பெண் பார்க்கும் படலத்தில் இருக்கும் பெண்ணைப் போல பாடிக் கொண்டிருந்தேன். வீட்டில்தான் இந்த நிலை, வெளி வேலைகளையாவது கவனிக்சலாமே என்று எங்கள் தெருவிலுள்ள ஒரு மாமி வீட்டிற்குப் போன் செய்யப் போனேன். அவர்கள் என்னைப் பிரபல சினிமாப் பாட்டைப் பாடச் சொல்லிவிட்டார்கள். அம்பாள் மீது பல பாடல்கள் எனக்குத் தெரிந்தும் சினிமாப் பாட்டைப்பாடியதைஎண்ணி மனம் வேதனைபட்டது. ஆயினும் இந்த ஒன்பது நாட்களும் சிறுமிகளின் கொலுக சிணுங்கலும், வளையல்களின் குலுங்கலும், பெண்களின் பட்டுப் புடைவை சரசரப்பும் இனிய இசையாகத் தான் இருக்கிறது. நவராத்திரி முடிந்த மறு நாள் முதல் வீடே வெறிச்சென்றிருப்பதும் அடுத்த நவராத்திரிக்காக மனம் ஏங்குவதும் நிஜம்"

என்று ஒரு கவிதை மாதிரித் தன் அனுபவங்களைக் கூறினார் அவர்.

**திரு வி. சந்திரசேகரன், அலுவலர்:**

நவராத்திரி என்று நான் துவங்கிய



• சித்தார்த்தன்

• முகுந்தன்

வுடனேயே கோபத்துடன் பொரிந்து தள்ளியவர் இரயில்வேயில் பணிபுரியும் திரு வி. சந்திரசேகரன். இருக்கும் சிறிய வீட்டில் நிற்க, நடக்கக் கூட இடமில்லாமல் கொலுப் படிகளும், மாலையில் பெண்களுமாக நிறைத்துக் கொள்வது இவரது கோபத்திற்குக் காரணம்.

"எங்கள் வீட்டு ஹால் வழியாகத்தான் எல்லா அறைகளுக்கும் செல்ல வேண்டும். மாலையில் களைப்புடன் அலுவலகத்திலிருந்து திரும்பினால் குளியலறைக்குப் போய் முகம் கழுவ முடியாமல், சமையலறைக்குச் சென்று ஒரு டம்ளர் தண்ணீர்கூட குடிக்க முடியாமல் வாசல் அறையிலேயே சிறைவாசம். பூ, பழம், வெற்றிலை, பட்சணங்கள், சுண்டல் என்று என் பட்ஜெட்டின் பெரும்பகுதியைச் சுரண்டிவிடும் மனைவி, அவ்வப்போது ஜன்னல் வழியாக, "இதோ பாருங்க, வெத்தலை தீர்ந்து போயிடுத்து. கொஞ்சம் எதிர்த்த கடையில வாங்கி வாங்க" என்று ரகசிய அறிக்கை விடும் போது என் எரிச்சல் எவ்வளவு என்பதை அனுபவித்தால் மட்டுமே உணர முடியும்.

"தொலைக் காட்சிப் பெட்டியும் கொலுவுக்குப் பக்கத்தில் மாட்டிக் கொண்டிருக்கும். எனவே டி.வி. நிகழ்ச்சிகளையும் பார்க்க முடியாது. மாலை ஐந்து முதல் எட்டுவரை போதுமடா சாமி என்று கத்துமளவிற்கு ஹாலில் பாட்டு பிளஸ் அரட்டைக் கச்சேரி வேறு. விஜயதசமியன்று 'விடுதலை விடுதலை' என்று பாட வேண்டும்போல் மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடும். அப்பா! இன்னும் ஒரு வருடத்திற்கு நிம்மதி."

**டாக்டர் ஏ. முகுந்தன், கல்லூரிப் பேராசிரியர்**

"நவராத்திரி சமயம் தங்கள் பிரச்னை என்ன?" என்றேன். இவருடையது வித்தியாசமானது.

"கொலு சமாசாரமெல்லாம் என் மனைவியே கவனித்துக் கொண்டுவிடுவாள். ஆனால் அந்த ஒன்பது நாட்களும் குழந்தைகளின் ஹோம் ஒர்க்கை செய்ய நான்தான் உதவ வேண்டும். மாலையிலேயே ஒரு அறைக்குள் என்னையும் குழந்தைகளையும் புத்தகக் கட்டுகளுடன் தூக்கிப் போடாத குறையாகத் தள்ளி, கதவைச் சாத்தி விடுவாள்.

"என் சிறிய பெண் தமிழ் நோட்டை எடுத்துக் கொண்டு வந்து, 'தமிழ் 'இ' மட்டும் ஏம்பா இப்படி ஜாங்கிரி மாதிரி இருக்கு? இங்கிலீஷ் Eயையே தமிழில் எழுதினால் என்ன?' என்று எழுத்துப் புரட்சி செய்வாள். அதற்குள் பெரிய பெண் கணக்கு நோட்டுடன் வந்து, 'செவன்ல நைன் போகமாட்டேங்குதுப்பா' என்பாள். 'கடன் வாங்கு' என்று நான் சொன்னதும், 'நீ இன்னிக்குக் காலையிலே கடன் வாங்கற குடும்பம் உருப்படாதுன்னு அம்மாகிட்டே சொன்னியே?' என்று சிறிய பெண் மடக்குவாள். 'கணக்குலே கடன் வாங்கினாத்தான் நீங்க உருப்படுவீங்க' என் கோபம் உச்சக் கட்டத்தை நோக்கி நகரும் நேரம் கடைக்குட்டி வருவான். 'பத்துக்குப் பக்கத்திலே பதினொன்று' என்று நான் சொன்னால், 'இல்லை, ரெண்டு ஒண்ணு போட்டிருக்கே. அது ரெண்டொண்ணுதான்' என்று சாதிப்பான். முதுகில் ஒன்று கொடுத்து, 'அது பதினொண்ணுதாண்டா' என்று நான் கத்த, அவன் உச்ச ஸ்தாயில் அலற, கதவைத் திறந்து எட்டிப் பார்க்கும் மனைவி, 'நீங்கள் பாடம் சொல்லிக் கொடுக்கும் அழகு இது தானா?' என்று முறைப்பாள்.

கல்லூரியில் அனாயாசமாக வகுப்புகள் எடுக்கும் எனக்கு இந்தக் குழந்தைகள் சரியான சவால். ஒன்பது நாட்களே ஒன்பது யுகங்களாகத் தோன்றுகின்றனவே? வருடம் முழுவதும் இவைகளை மேய்க்கும் என் மனைவி பொறுமையில் பூமி தேவிதான். எனவே நவராத்திரி என் மனைவியைப் புரிந்து கொள்ள உதவும் ஒரு பண்டிகை தான்" என்று முடித்தார் முகுந்தன்.

**திரு என். சித்தார்த்தன், ஆடிட்டர்**

"பெயருக்குத்தான் இது பெண்கள் பண்டிகை. படி கட்டுவது, பொம்மைகளை வைப்பது, தோரணம், சரவிளக்குக் கட்டுவது, தேவையான பொருட்களை வாங்கிக் கொடுப்பது, குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது, பெண்கள் வெளியே போனால், அப்போது

வீட்டிற்கு வருபவர்களை வரவேற்று உபசரிப்பது என்று ஒன்பது நாட்களும் ஓடி ஓடி உழைப்பது ஆண்கள். மகிஷாசுரனைக் கொல்ல அம்பாள் தவமிருந்தது எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மை, எங்கள் வீட்டு அம்பாளிடம் திட்டு வாங்காமல் இருக்க நாங்கள் தவமிருப்பதும். இவ்வளவு உதவி செய்தும் நவராத்திரி எங்கே தெய்வீகத்தோடு விளங்குகிறது?

''சாஸ்திரியப்படி சுண்டல் செய்வதெல்லாம் போய் மிக்ஸர், பிஸ்கெட் என்று மாறி விட்டது. மண்ணாலான தெய்வ பொம்மைகள் மறைந்து, பிளாஸ்டிக் துணி பாசிமணி என்று இவற்றில் தயாரான பொம்மைகள் நிறைந்துவிட்டன. கலசம், மாவிலை எல்லாம் பிளாஸ்டிக்கில். பாட்டு இருக்கிறதோ இல்லையோ, அரட்டை நிறைய நடக்கிறது. தினம் தினம் எல்லா வீடுகளுக்கும் செல்வது அநாகரிகமாகிவிட்டது. கார்டில் குறிப்பிட்ட தேதிகளில் வருவதும் போவதும் வழக்கமாகிவிட்டது. அலுவலகம் சென்று ஆறு அல்லது ஏழு மணிக்கு வரும் பெண்கள் எவ்வளவு உற்சாகத்தோடு கலந்து கொள்ள முடிகிறது?

''எனவே ஒன்பது நாட்களும் ஆண்களே அதிகமாகப் பொறுப்பு ஏற்கிறார்கள். அப்படி இருக்க எங்கள் பங்கை எவரும் பாராட்டுவதில்லை. கொலுவிற்கு, ஆண்களை யாருமே அழைப்பதுகூட இல்லை. ஏதோ, நீங்களாவது எங்கள் பிரச்னைகளைக் கேட்க முன்வந்தீர்களே, அதற்கு நன்றி'' என்று சிரித்தார் திரு சித்தார்த்தன்.

பேட்டி: **லக்ஷ்மி சங்கர்**

# முகம் அழகு பெற...



உடலின் மற்ற பகுதிகளைப் போல் முகமும் தசைகள் கொண்டு அமைந்தது. உடலுக்குச் சில எக்சர்சைஸ் செய்வது போல மிக எளிதான கீழ்க்காணும் ஐந்து எக்ஸர்சைஸ்களை தினசரி செய்தால், முகத்தில் உள்ள சுருக்கங்கள், கோடுகள் ஓடி ஒளிந்து, ''என்றும் பதினாறு வயது யுவதி''யின் முகமாய் உங்கள் முகம் இருக்கும்.

1. முகத்தில் வயது, கோபதாபத்தின் விளைவு காரணமான கோடுகள், கண்ணைச் சுற்றி, கன்னத்தில், உதடுகள் அருகே இடம் பிடித்துவிடும். இது மறைய கண்களை இறுக மூடிக் கொண்டு, வாயை எவ்வளவு அகலமாய்த் திறக்க முடியுமோ அவ்வளவு திறந்து 10 செகண்ட் இருங்கள். ஒரு நாளைக்குத் தொடர்ந்து 8 முறை செய்யவும்.

2. குழி விழுந்த கன்னம் நீங்க, மூக்கிலிருந்து வாய் வரை, மென்மையாய்க் கோடு அமைய — வாயை இறுக மூடிக் கொண்டு, வாய் கொள்ளாமல் காற்றை ஊதவும். பிறகு உறிஞ்சி விடவும். இவ்வாறு 8 தடவை செய்யவும்.

3. தாடை, முகவாய் சீராய் இருக்க, உதடுகளை மடித்து (சப்தம் இல்லாமல் விசில் செய்வதுபோல்) இப்போது உதடுகளின் மேலும் கீழும் பல் வரிசை அழுத்தும் — வாயை முடிந்த அளவு அகலமாக்கி, சுருக்கவும். இவ்வாறு 8 முறை செய்யவும்.

4. உறுதியான கன்னச் சதை அமைய, உதடுகளை மடித்தநிலையில் கீழ்த்தாடையை ஆறுமுறை வலமிருந்து இடமாயும், 6 முறை இடமிருந்து வலமாயும் சுழற்றவும்.

5. கொழுத்து, இரட்டை சதை மடிப்புக் கொண்ட முகவாய் சீராக... தலைக்குத் தலையணை இல்லாமல் மல்லாந்து படுக்கவும். கால்களைச் சிறிது உயரமாய் வைக்கவும். தலையை மெதுவாய்த் தூக்கி, (தோளை நகர்த்தக் கூடாது) கால் விரல்களைப் பார்க்கவும். மறுபடி மல்லாந்து தலையைக் கிடத்தவும். இவ்வாறு முதலில் ஒரு நாளுக்கு 8 முறை செய்யவும். சற்றுச் சிரமமான பயிற்சி ஆதலால், பயிற்சி ஓரளவு பழகியபின் 15 முறை ஒரு நாளுக்குச் செய்யலாம்.

— *கனகவல்லி சாரங்கபாணி*



# சின்ன காரணம் பெரிய விளைவு!

**Indian Childhood Cirrhosis (ICC)** என்று ஒரு நோய்.

இது இந்தியாவில், கிராமப்புற, நடுத்தர வர்க்க, ஹிந்துக் குழந்தைகளை மட்டுமே பாதிக்கிறது. வேறு எந்த நாட்டிலும், எந்த மதத்தவரிடமும் இந்த நோய் கிடையாது.

எட்டு மாதத்திலிருந்து மூன்று வயதுக்குட் பட்ட குழந்தைகள் மட்டுமே இந்த நோயினுல் அவஸ்தைப்பட்டு இறக்கிருர்கள்.

நோய் கண்ட குழந்தையின் கல்லீரலும் மண்ணீரலும் வீங்கி, வயிறு உப்பி, உடலில் மற்ற பாகங்கள் எல்லாம் வலுவிழந்து சூம்பி, குழந்தை சப்தம் எழுப்பக் கூட சக்தி யில்லாமல் போட்ட இடத்தில் போட்டபடி, ஜுஸ்வரத்தில் முனகிக் கொண்டிருக்கும். இந்த வியாதி முற்றிய நிலையில் மருத்துவம் ஏதும் செய்ய முடியாத நிலையில், மூன்று வயது ஆகுமுன்பே குழந்தை இறந்து விடு கிறது.

நோயின் காரணம் வெகு நாட்கள் புரி யாத புதிராக இருந்தது. இப்பொழுது இதன் காரணத்தைக் கேட்டால் நீங்களே திகைத்துப் போய் விடுவீர்கள்.

இதற்குக் காரணம், நாம் உபயோகப்படுத் தும் பித்தளை தாமிரப் பாத்திரங்களே.

பாத்திரத்தில் ஈயம் பூசியிருந்தால் கெடுதல் இல்லை.

ஆனல் ஈயம் பூசாத, ஈயம் அழிந்து போன பாத்திரத்தில் பாலைக் காய்ச்சினல், அதிலேயே ஆறு மணி நேரம் வைத்திருந் தால், பாலில் உள்ள காப்பர் சத்து கிட்டத் தட்ட ஐம்பது மடங்காக அதிகரிக்கிறது. இவ்வளவு காப்பர் சத்து, குழந்தைக்குத் தேவையில்லை. அதை வெளியேற்றும் சக்தி அதன் கல்லீரலுக்கு இல்லை. கொஞ்சம் கொஞ்சமாகக் கல்லீரலில் காப்பர் சேர்ந்து அதை வலுவிழக்கச் செய்கிறது. ஆகாரத்தி லிருந்து எந்தவிதமான போஷாக்கையும் கிர கித்துக் கொள்ள முடியாமல் போகிறது.

உலகிலேயே, இந்தியாவில் மட்டுமே பித்தளைப் பாத்திரங்கள் சமைக்க உபயோ கப்படுத்தப்படுகிறதாம். அதிலும் நடுத்தர வர்க்க, கிராமப்புற ஹிந்து ஜனங்களே இதை அதிகம் உபயோகப்படுத்துபவர்கள். ரொம்ப ஏழைப்பட்டவர்கள் அலுமினியம் உபயோகப்படுத்துகிருர்கள். முஸ்லிம், கிறிஸ்துவ இனத்தவரும் அலுமினியம் எனமல், பீங்கான் போன்றவற்றையே உப யோகப்படுத்துகிருர்கள்.

நடுத்தர வர்க்கத்தினர் குழந்தைக்கு 5, 6 மாதங்களாக இருக்கும்பொழுது தாய்ப் பாலை நிறுத்திவிட்டு வெளிப் பாலைக் கொடுக்க ஆரம்பிக்கிருர்கள். (ரொம்ப ஏழைகள் இன்னும் அதிக மாதங்கள் தாய்ப் பால் கொடுப்பார்கள். அதற்குப் பின்பும் அவர்களால் வெளிப் பால் வாங்கிக் கொடுக் கக் கட்டாது.)

இந்த நிலையில் குழந்தையின் ஆகாரம் பெரும்பாலும் பாலாகவே இருக்கிறது. அதுவும் பெண் குழந்தைகளை விட ஆண் குழந்தைகளுக்கே அதிகம் பால் கொடுப்பார் கள். இதனல் இந்த நோயினல் பாதிக்கப் படுவதும் அதிகமாக ஆண் குழந்தைகளே.

இப்பொழுது ஈயத்தின் விலை உயர்ந்து விட்டது. ஈயம் பூசும் செலவு அதிகமாகி விட்டது. வீட்டு வாசலுக்கு, ஈயம் பூசுபவர் கள் வருவதில்லை. பால் காய்ச்சப் பாத்திரத் தில் ஈயம் இல்லாவிட்டால் பரவாயில்லை என்று பலர் காய்ச்சுகின்றனர்.

பித்தளைப் பாத்திரங்கள் பளபளப்பாகத் தங்கமாகத் தேய்த்து வைத்திருப்பது பார்க்க ரொம்ப அழகாகத்தான் இருக்கும். இதில் இப்படி ஒரு விஷத் தன்மையா?

யோசித்துப் பாருங்கள். பேசாமல் அலு மினியம் அல்லது எவர்சில்வர் பாத்திரத் திற்கு மாற்றி விடுங்கள்.

உங்கள் பால்காரன் பித்தளை தூக்கு, அல்லது வாளியில் பால் கொண்டு வந்தா லும் மாற்றச் சொல்லுங்கள். பால் காரர் கள் பாலைக் கறந்து பல மணி நேரங்கள் கழித்து நமக்குக் கொண்டு வந்து கொடுக் கிருர்கள்.

பெரிய பெரிய வியாதிகளுக்குத் தடுப்பு ஊசிகள் போடவேண்டும். இந்தப் பெரிய நோய் வராமல் தடுக்க நாம் ஒரு சின்ன முன்னெச்சரிக்கையான மாற்றம்தான் செய்யவேண்டும்.

பூ ஜிஸி நிகழ்ச்சியில் பார்த்து, கேட்டு எழுதியவர்:

— ஜெயா வி. ராமன்

# தங்க கவரிங் நகைகளுக்கு
# தன்னிகரற்ற பெயர் ''மேரி''

கண்ணைக் கவரும், அழகும், பொலிவும், தரமும் உத்திரவாதமும் உடைய உலகப் புகழ்பெற்ற 22ct ''மேரி'' தங்க கவரிங் நகைகளை வாங்கி அணிந்து மகிழுங்கள்!

நகைகளின் நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் நகைகள் அனுப்பப்படும். வி.பி.பி. சார்ஜ் தனி. இலவச கேட்லாக்கைப் பெற எழுதுங்கள்!




## மேரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால்பெட்டி : 1405, 14, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-600017.



# பட்டர்ஃபிளை வழங்கும் ஸ்டாண்டர்ட் பிரஷர் குக்கர்






இலவசம்!
சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 18 G ல் ஆன ஒரு அன்னக்கரண்டி மற்றும் கரண்டி.

10 வருட உத்திரவாதம்

ஸ்டாண்டர்ட் பிரஷர் குக்கர்-சமையல் உபகரணங்கள் தயாரிப்பில் முன்னணியில் உள்ள பட்டர்ஃபிளை நிறுவனத்தினரின் மற்றுமொரு புதிய படைப்பு. நல்ல தரமான "ஸ்டாண்டர்ட்" பிரஷர் குக்கரை உங்களுக்கு வழங்க எங்களது 40 ஆண்டு கால அனுபவத்தை அர்ப்பணித்திருக்கிறோம். அவை ஒவ்வொன்றும் தரத்தில் தலைசிறந்த உலோகக் கலவையினால் தயாரிக்கப்பட்டு அதிக உறுதியும் கனமும் கொண்டவை. உங்களுக்கு வாழ்நாள் முழுவதும் உழைப்பவை.

முழுப் பாதுகாப்பிற்கு தனித்தன்மை வாய்ந்த "காஸ்கெட் ரிலீஸ் சிஸ்டம்" பொருத்தப் பட்டுள்ளது. துரித சமையல். எனவே, எரிபொருள் மற்றும் நேரம் மிச்சம்.

ஒவ்வொரு ஸ்டாண்டர்ட் பிரஷர் குக்கரும் உற்பத்தியின் ஒவ்வொரு நிலையிலும் கடுமையான தரக் கட்டுப்பாடு பரிசோதனைக்குப் பின்பே வெளிவருகிறது.

## ஸ்டாண்டர்ட் பிரஷர் குக்கர்

சமையலறையில் ஒரு சிறந்த சாதனம்
உங்கள் பணத்திற்கு சிறந்த மதிப்பு.

**7.5, 10 & 12 லிட்டர்களில் உள்ளன.**

பிரஷர் பான்களும் 2 அளவுகளில் உள்ளன.

தயாரிப்பாளர்கள் :-
**கங்காதரம் எண்டர்பிரைசஸ்,**
272, அண்ணாசாலை,
(கோ-ஆப்டெக்ஸ் வானவில் சமீபம்)
தேனாம்பேட்டை, சென்னை-600 018.
போன் :- 454186, 412091, 418171

Concept/M

குறுநாவல்



அனுராதா ரமணன்

"இந்த விசை நவராத்திரிக்காவது குழந்தைகள் வந்தாத் தேவலை..."

ரங்கநாயகி தனக்குள் புலம்பிக் கொள்கிறாள்.

ஒன்று இரண்டா... பெண்ணில் நாலு... பிள்ளையில் இரண்டு...

எல்லாம் கொப்பும் கிளையுமாய் விருட்சமாகி எந்தெந்த . தேசத்திலோ காலூன்றியிருக்கிறதுகள்...

பிள்ளைகளும் — மூத்தப் பெண்கள் இரண்டும் அமெரிக்காவில். அவர்களை எதிர்பார்ப்பதில் பிரயோஜனமே இல்லை என்பது ரங்கத்துக்குத் தெரியும்...

மூன்றாவது டில்லியில்; நாலாவது — எட்டி உதைக்கிற தூரத்தில் — அதாவது சென்னையில்.

திருவானைக்காவலுக்கும் சென்னைக்கும் எத்தனை கிலோ மீட்டர்?

ரங்கத்துக்குக் கிலோ மீட்டர் கணக்கெல்

# சிருஷ்டி



லாம் தெரியாது. ராத்திரி வண்டியில் ஏறிப் படுத்தால் — விடிந்தால் மெட்ராசில் இருக்கலாம் என்று அவள் கணவர் சேஷாத்திரி சொல்வார்.

சொல்லுவாரே தவிர — சேஷாத்திரி அப்படியெல்லாம், பெண்ணைப் பார்க்க வேண்டும் என்று ஓடுகிற ரகமில்லை.

எதிர்த்தாற்போல இருக்கிற அம்பாளைப் பார்க்கத்தான் ஓடுவார்.

அதுவும் நவராத்திரி வந்து விட்டால் — திருச்சியிலுள்ள பெரிய மனிதர்கள் எல்லோரும் இவரை மொய்த்துக் கொள்வார்கள்.

இவர் வந்து லலிதா சஹஸ்ரநாமம் சொல்லி ராஜராஜேஸ்வரிக்கு ஒன்பது நாட்களும் அர்ச்சனை செய்தால்தான் — நவராத்திரியே பூர்த்தியடைந்த மாதிரி நினைக்கிற மனிதர்கள் நிறையப் பேர்.

விடியற்காலையிலேயே கார் வந்து அழைத்துப் போய்விடும். அங்கிருந்து ஒவ்வொரு வீடாக முடித்துக் கொண்டு வீடு வந்து சேரும் போது பகல் மணி ஒன்றாகி விடும்.

ரங்கம் — ஒரு சின்ன வெண்கல உருளியில் சர்க்கரைப் பொங்கலும், எண்ணிப் பத்து வடைகளையும் செய்து வைத்துவிட்டு, கூடத்தில், சின்னதாய் ஒரு மூலையில் சாஸ்திரத்துக்கு எடுத்து வைக்கப்பட்டிருக்கும் நாலைந்து பொம்மைகளின் எதிரில் அமர்ந்து, தனக்குள் அமிழ்ந்து போவாள்.

பகவான் சோற்றுக் கவலையை வைக்கவில்லை. எந்தப் பிள்ளை பணம் அனுப்புகிறானோ — இல்லையோ — சேஷாத்திரிக்குப் போதுமான சொத்து இருக்கிறது...

பூஜைக்குப் போவதோ, சண்டி ஹோமத்துக்குப் போவதோ — வயிற்றுப் பிழைப்புக்காக இல்லை.

பல இடங்களில் நயா பைசா வாங்காமல் பூஜை செய்வார்., கேட்டால், 'என் அம்பாளை நான் துதிக்க — நீ எதற்குக் காசு தர வேண்டும்?' என்பார்.

அப்படியும் பொன்னுடைகளும், பழமும், கரன்சியும் வந்து குவியத்தான் செய்தன.

தட்டுத் தட்டாய்ப் பழங்களை எடுத்து, ரங்கம் அக்கம் பக்கத்து வீட்டுக் குழந்தைகளுக்கு விநியோகம் செய்வாள். ரோஜா இதழ்களை முதுகு வலி பாராது கோத்து — தெருவிலுள்ள சிறுசுகளின் தலையில் சூட்டி விடுவாள்.

மனசு மட்டும் கிடந்து அடித்துக் கொள்ளும்.

'என் குழந்தைகள்... பேரக்குழந்தைகள்.,.. ஒரு தரமாவது இது மாதிரி பண்டிகைகளின் போது சேர்ந்து இருக்காதோ...' என்று.

இரண்டு வருஷங்களுக்கு ஒருமுறை — அமெரிக்கப் பிள்ளைகளும், பெண்களும், தங்கள் குழந்தைகளுடன் இரண்டு மாத விடுமுறையில் வருவார்கள்...

பிள்ளைகளுக்கு — பெண்டாட்டி மனம் கோணாமல் மாமியார் வீடுகளில் அதிக நாட்களைச் செலவழிக்கத் தோன்றும்...

பெண்களுக்கோ — மெட்ராசில் புக்ககம். கோயம்புத்தூரில் நாத்தனார் வீடு... கும்பகோணத்தில் சின்ன மாமியார் வீடு...

"எங்களுக்குன்னு ஒரு ஆசை வைச்சுக்க முடியறதாம்மா. அண்ணாக்களை, மன்னிகள் அழகா, தங்களோட கைப்பிடிக்குள்ள வச்சிருக்கா. நம்ம வீட்டு சரக்குகளும் அடங்கற சரக்குகள்னு வச்சுக்கோ. உன் மாப்பிள்ளை அப்படியில்லே. புறப்படறச்சேயே புரோகிராம் போட்டுண்டுதான் புறப்படுவார். அதுவும் அம்மா அப்பாவைப் பார்த்துட்டா தலைகால் புரியாது மனுஷருக்கு. சகலமும் மறந்து போயிடும். போன தரம் வந்தப்பவே எங்க மாமியார் பழனின்னும், திருப்பதியின்னும் எங்களை இழுத்துண்டு க்ஷேத்ராடனமே பண்ணிட்டு வந்துட்டார்..."

"இருக்கட்டுமே! சுவாமி கோயில்களுக்கு அவசியம் போகணும்தான். அதே சமயம், இங்கே ரெண்டு கிழப் பிராமணன்கள் இருக்

குங்கறதையும் கொஞ்சம் நினைச்சுப் பார்க்கலாமோல்லியோ? உங்க அப்பாவுக்காவது அம்பாள் இருக்கா. எனக்கு யாருடி இருக்கா? ஆறைப் பெத்துட்டு ஏன்னு கேட்க நாதியில்லாமக் கிடக்கேண்டி. எப்பவும் வேண்டாம். ஒரு நவராத்திரி சமயத்திலயாவது குழந்தைகளை அனுப்பி வைக்கக் கூடாதா? நம்ம பழக்க வழக்கமெல்லாம் எப்பத்தான் தெரியறது? பேண்ட்டையும் ஷர்ட்டையும் போட்டுண்டு அலைஞ்சிண்டிருந்தா — நாளைக்குக் கல்யாண சமயத்துலயாவது நாலு கீர்த்தனம்; ரெண்டு சுலோகம் இதெல்லாம் தெரிஞ்சிருக்க வேண்டாமா?''

''எதுக்கு? உன் மாப்பிள்ளை, அமெரிக்காவிலேயே தன் பொண்ணுக்கு மாப்பிள்ளை பார்க்கிறார். ஏன், இந்த சரசு — இங்கே அடித்தளத்துல, மெட்ராஸ்லேதானே இருக்கா? பண்டிகை சமயங்கள்லே அவளைக் கூப்பிட்டு வச்சுக்கறது...''

''அங்கே, அவ புக்ககத்திலே கொலு அமர்க்களப்படும். அதை கவனிப்பாளா... இங்கே வருவாளா...?''

''அப்ப, உன் நவராத்திரி ஆசையெல்லாத்தையும் மூட்டை கட்டி வை. இல்லே, சம்பந்தி பிருவெல்லாத்தையும் விடு. இத்தனை வயசுக்கு மேலே எங்கே இருந்தா என்ன? திருவானைக்காவல்லே உனக்கு என்ன சாஸனமா எழுதி வச்சிருக்கு? இந்தத் தழைஞ்ச விட்டிலே இருந்துண்டு எதுக்காக புலம்பிச் சாகறே...? உம்? மூட்டை முடிச்சைக் கட்டிண்டு பண்டிகை சமயத்துல சரசுவோட போய் இருந்துட்டு வா...''

அதையும் செய்து பார்த்துவிட்டாளே ரங்கம்... சேஷாத்திரி, மனைவியை அதட்டி ஒரு வார்த்தை சொல்ல மாட்டார்.

''நவராத்திரிக்குச் சரசுவோடப் போய் இருந்துட்டு வரலாம்னு இருக்கேன்...''

இப்படி ரங்கம் சொன்னபோது புன்னகைத்தார்.

''உனக்கு அங்கேயெல்லாம் சரிப்பட்டு வராது...''

''இங்கேயே இருந்தாப் பைத்தியம் பிடிச்சுடும் போல இருக்கு...''

''அப்புறம் உன் இஷ்டம்...''

''அப்படி விட்டேத்தியா சொன்னா எப்படி? நீங்களும் வாங்களேன்...''

மாங்காய் அல்லது எலுமிச்சை ஊறுகாயில் துண்டுகள் தீர்ந்து பின் மீதமுள்ள காரத்திலும் விழுதிலும் காரட் அல்லது முட்டைகோசை நறுக்கிப் போடவும். நன்றாக ஊறிய பிறகு சாப்பிட்டால் அதன் ருசியே அலாதிதான்!

—பி.பி. சந்திரா.

''ரங்கம்... நவராத்திரிக்கு நீ பொண் வீட்டுக்குப் போறே. எனக்குப் பொண் வீடு, அம்மா வீடு, எல்லாம் இதுதான்... என் குழந்தையை, என் தாயை, நான் எப்படிப் பிரிவேன் சொல்லு...?''

''சரசு உங்க பொண் இல்லையா...?''

''பேஷா... அவளைப் பார்க்க நீ போ... இவளைப் பார்த்துக்க நான் இங்கேயே இருக்கேன்...''

சேஷாத்திரி அம்பாள் படத்தைக் காட்டினார்.

ஆசையும், அஞ்ஞானமும் அடித்துக் கொள்ள — பட்டணத்துக்கு ஓடினாளே தவிர — நாலே நாட்களில் — 'ஏண்டாப்பா வந்தோம்' என்றாகிவிட்டது ரங்கத்துக்கு.

சரசுவுக்கு அம்மா வந்ததில் சந்தோஷம். எப்பொழுதுதான் அவளது செல்வாக்கை, அம்மா பார்ப்பது...?

கொலு என்றால் அது மாதிரி ரங்கம் பார்த்ததே இல்லை... ஒவ்வொரு பொம்மையும் பளபளவென்று...

''அம்மா அந்த ராதாகிருஷ்ணன் பொம்மை மட்டும் ஐந்நூறு ரூபாம்மா. ஆர்டர் கொடுத்துப் பண்ணினது...''

''என்னமது இவ்வளவு லேசா இருக்கு...''

''இப்ப யாரு களிமண் பொம்மை வாங்கறா...? எல்லாம் பேப்பர் மாஷ்தான்...''

ரங்கம் அதிசயத்துடன் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

திருவானைக்காவலில் இரண்டு பெரிய கள்ளிப் பெட்டிகள் நிறையப் பொம்மைகள் இருக்கின்றன.

அதில் பாதிக்கு மேல் ரங்கத்துக்கு அவள் தாயார் சீதனமாய்க் கொடுத்தவை...

ஒவ்வொன்றும் கிளி கொஞ்சும். இந்த மாதிரி வார்னிஷ் இல்லையென்றாலும் — வர்ணம் அழுத்தமாக இருக்கும்.

சிறு வயதிலிருந்தே ரங்கத்துக்குக் கொலு என்றால் பிரேமை அதிகம்.

அதுவும் அவளது பத்தாவது வயசில் அவள் அம்மா இரண்டாவதாய் ஒரு பெண்ணைப் பெற்றாள்... உமா என்று பெயர்...

ஆனால் அந்தப் பெயரே எல்லாருக்கும் மறந்து விட்டது — 'தலையாட்டி' — என்றுதான் கூப்பிடுவார்கள்.

யார் செய்த குற்றத்துக்கு யாரை நொந்து கொள்வது?

பத்து வயசு வரைக்கும் உமா இருந்தாள். மூளை வளர்ச்சி என்னவோ மூன்று வயசுக் குழந்தைக்கு உள்ளதுதான். உடம்பு வளர்ச்சிக்கு, 'தலை சின்னது... இரண்டு காதண்டையும் ஓங்கி அடித்தாற் போல் முகம் குறுகியிருக்கும்... எச்சில் பிரவாகம். மழலைப் பேச்சு...

''மூங்கம்... கொலு வைக்கலாமாழீ...''

''பாத்து பாழூழீ மூங்கம்... அநாத ரக்ஷகி ஸீ... காமாக்ஷீ...

ரங்கத்துக்குக் கல்யாணமான அடுத்த மாதம் ஒரு நவராத்திரி வெள்ளிக்கிழமை — இந்த உமா, வந்த காரியம் முடிந்ததென்று கண்ணை மூடிவிட்டாள்...

ரங்கத்தின் மனசில் இது ஒரு பெரிய பள்ளம்.

அவள் அம்மா, அத்தனை பொம்மைகளையும் தூக்கி இவளிடம் கொடுத்து விட்டாள்.

''இந்தா, இதையெல்லாம் பார்த்தா, அந்தக் கடங்காரியோட ஞாபகம் வர்றது...''

அன்று அம்மா அழுததைப் போல, அப்புறம் எப்பொழுதுமே அழுததில்லை...

உமா இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்திருப்பாள். அந்தச் சம்பவம்—அந்தவிபத்து—மட்டும் நிகழாமல் இருந்திருந்தால்...

ஒவ்வொரு நவராத்திரியின் போதும் — உமாவின் நினைவு, ரங்கத்தைப் பாடாய்ப் படுத்தும்...

அவள் கையால் வளர்த்த குழந்தை..

தமக்கை ஸ்தானத்தை விட, தாய் ஸ்தானத்தில் இருந்து, போர்த்திப் போர்த்திவளர்த்தவளாயிற்றே....

பத்தொன்பது வயதில் ரங்கத்துக்குக் கல்யாணம்... அடுத்து ஒரு மாதம் கூட அந்தக் குழந்தையைப் பாதுகாக்க அதன் பெற்றோருக்குத் துப்பில்லை.

துப்பில்லை என்பதை விட, சாமர்த்தியமில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

சரி. இது அப்புறம்...

சரசுவின் வீட்டுக்கு நவராத்திரிக்கு வந்த ரங்கத்துக்கு ஏன் மனசு விட்டுப் போயிற்று?

நாலு பெண்களையும் ரங்கம் வளர்த்த நேர்த்தி என்ன...?

வாய் கொள்ளாதப் பாட்டு. சுலோகம். கைநிறையக் காரியம்...

ஒவ்வொருத்தியும் ரங்கத்திடம் இருக்கும் வரையில் தொடையில் இடிக்கும் பின்னலும் — தாழம்பூ மேனியுமாய்ப் பாவை விளக்குச் சிலை மாதிரிதான் இருந்தார்கள்.

அமெரிக்கா போன பெண்கள்தான், பின் கழுத்தோடு கூந்தலை வெட்டிக் கொண்டார்கள் என்றால் — மூன்றாமவள் ராகினி, கொத்துமல்லிக்கட்டு மாதிரி ஒரு பிடி கூந்தலை வைத்துக் கொண்டு மீதியை வெட்டி விட்டாள்.

கேட்டால், மைகிரேன் தலைவலியாம்; தலைக்கு ஸ்நானம் செய்ய முடியவில்லையாம்; எண்ணெயே தடவக் கூடாது; சீப்பே படக் கூடாது, என்று டாக்டர் சொல்லி விட்டாராம்...

சரசு... அவளுக்குத் தற்சமயம் நிஜ முடி எவ்வளவு என்றே ரங்கத்துக்குத் தெரியாது...

அது என்னமோ பெரிய கொண்டை...

ரங்கம், நவராத்திரிக்குப் போயிருந்த போது சரசு தினமும் சாயந்திரம் மூன்று மணிக்கே பியூட்டிபார்லருக்குப் போய்விடுவாள். அங்கிருந்து, அழைப்பு விடுத்திருந்த வீடுகளுக்கு விஜயம். திரும்பி வரும்போது பார்த்தால் — சரசுவின் தலை அளவுக்கு ஒரு பெரிய கொண்டை, அதில் ஆங்காங்கு நட்சத்திரம் பதித்தாற்போல முத்துக்கள் மின்னும்.

சரசுவின் மாமியாருக்கு, மருமகளிடம் சொல்ல பயம். சம்பந்தியம்மாளிடம் ரகசியமாய்த்தன் ஆற்றாமையைச் சொல்லிக்கொள்வாள்.

''ஒரு நாளைப் போல இந்தக் கொண்டைக்கே அம்பது ரூபா செலவாறது...''

ரங்கம் வாயடைத்துப் போய் உட்கார்ந்திருந்தாள்.

எத்தனை நவராத்திரிகளுக்கு, ரங்கம் — தன் நாலு பெண்களுக்கும் இடுப்பொடிய உட்கார்ந்து, பூ வைத்துப் பின்னியிருக்கிறாள்?

எல்லாம் பதினைந்து வயது வரையில் தான்... அதற்குப் பின் ஒவ்வொருத்தியும்

> பஞ்சினால் செய்த திரிகளை எண்ணெய் விளக்குகளுக்குப் பயன்படுத்தினால் அது எண்ணெயை அதிகமாக உறிஞ்சிவிடும். சுத்தமான வெள்ளைத் துணித் திரி போடலாம்.
>
> — விசாலாட்சி

சொல்லி வைத்தாற் போல ஒரு சாண் பூவுக்கு மேல் வைத்துக் கொள்ள ஆயிரம் பிகுக்காரம் பண்ணிக் கொள்வார்கள்.

உமா — அப்படியில்லை., பூ என்றால் உயிர். தலைமுடி எலிவால் மாதிரிதான். அதில் நாரை வைத்து நீளப் பின்னலாகப் பண்ணி, பூவை வைத்துவிடுவாள் ரங்கம்.

ஒன்றரைக் கண்களில் சந்தோஷம் சுடர் விடும்...

அவளையும் இழுத்துக் கொண்டு ஒவ்வொரு வீட்டுக் கொலுவுக்கும் ரங்கம் போய் வந்த காலம்...

இன்று சரசு, பெற்ற பெண்ணை மாமியாரிடம் விட்டு விட்டுத்தான் தாம்பூலம் வாங்கத் தெரிந்தவர்கள் வீட்டுக்குப் போகிறாள்.

''கொலுன்னா குழந்தைகளுக்குத்தான். அவளையும் அனுச்சுண்டு போயேன் சரசு.''

ரங்கம் இப்படிச் சொல்லிவிட்டு மகளிடம் சரியாக வாங்கிக் கட்டிக் கொண்டாள்.

''அங்கே வந்தா, ஒரு இடத்துல நிற்காது. ஆளைக் கட்டி இழுக்கும். பசிக்கிறதுங்கும். மூச்சா வர்றதுங்கும். யாராவது பேசினா — குறுக்கே புகுந்து தொண்டையக் காமிக்கும்;

எனக்கு நாக்கைப் பிடுங்கிண்டு சாகலாம் போல இருக்கும்...''

'கமுக் மொமுக்'கென்று, சொர்ண விக்கிரகம் மாதிரி இருக்கும் பெண் குழந்தையையே அழைத்துப் போக இவள் இத்தனை அலட்டிக் கொள்கிறளே...

உமா மாதிரி குழந்தை இருந்தால்...

இப்பொழுது நினைத்தாலும் ரங்கம் சிலிர்த்துக் கொள்கிறாள்.

கடவுளே... அந்த மாதிரி ஒரு பிறவி இனிமேல் பிறக்கவே கூடாது...

ரங்கத்தைத் தவிர — அந்த ஜென்மத்தை யார் நேசித்தார்கள்?

அவளது மனம் — தனது பத்து வயசுக்குப் பின்னோக்கிப் பறந்தது.

அம்மாவுக்கு ஆசை; தனக்கு எப்படியும் ஒரு பிள்ளைக் குழந்தை பிறக்கும் என்று.

பிறந்ததென்னவோ பெண். அதுவும் — நவராத்திரிக்கு முதல் நாள் அமாவாசையன்று.

ரங்கத்தின் பாட்டி 'நறுக்'கென்று சொன்னள்.

''அமாவாசையிலப் பொறந்தவ உத்தமியும் இல்லே. அவளாலே கிடைக்கப் போறது நிம்மதியும் இல்லே...''

அப்பொழுது அம்மா அழுதாள். ரங்கத்துக்கு என்னவோ குழந்தையை ரொம்பவும் பிடித்துத்தான் இருந்தது.

ஒரு வயசு ஆனபோதுதான் குறையே தெரிய வந்தது... கழுத்து கொளகொளவென்று இருந்தது... கண் பார்வை மூக்கு முனையைப் பார்த்தது...

அப்பா தலையிலடித்துக் கொண்டார்...

## 2

**ர**ங்கநாயகியின் பதினலு வயசில் — அவளது கல்யாணமே — குழந்தை உமாவினல் ஒரு கேள்விக்குறியாக நின்றது.

அந்த நாட்களில் — பிள்ளை வீட்டார் என்றல் — பெண் வீட்டாரின் ஏழு தலைமுறையை ஆராய்ந்து பார்ப்பார்கள். (இந்த நாளிலும் அப்படித்தான்; ராகினியைப் பெண் பார்க்க வந்த ஒரு பிள்ளை வீட்டார் — சேஷாத்திரிக்கு காலில் நீர் வைத்து வீங்கியிருந்ததைப் பார்த்துவிட்டு ஊருக்குப் போய் லெட்டர் போட்டு விட்டார்கள். பெண்ணின் அப்பாவுக்கு யானைக்காலாக இருப்பதால் சம்பந்தம் பண்ண இஷ்டமில்லையென்று...)

அப்படியிருக்கையில் உமாவைப் பார்த்த பிறகு, ரங்கத்தைத் தங்கள் மருமகளாக ஆக்கிக் கொள்ள எப்படி முன் வருவார்கள்?

''இது என்ன தேரை தோஷமா?''

''பொறவியே இப்படித்தானு?''

''உங்க குடும்பத்துல இதுக்கு முந்தி யாருக்காவது இப்படி?''

''உம்ம பொண்ணுக்கும் இப்படி ஒண்ணு பொறக்காதுன்னு என்ன நிச்சயம் ஓய்?''

''இதெல்லாம் பிராப்தம். முதல் தாரமா உம்ம பொண்ணுக்கு வரன் தேடிக் கொண்டிருந்தா — அவ ஆயுசுக்கும் இப்படியே நிக்க வேண்டியதுதான். பேசாம, ரெண்டாந் தாரமோ, மூணுந்தாரமோ எவன் கிட்டயாவது பிடிச்சுக் கொடுத்துக் கன்னி கழியப் பாருங்கோ.''

எதிர் வீட்டுச் சாம்பன் மாமா சொல்லும் போது, ரங்கத்துக்கு அழுகை முட்டிக் கொண்டு வரும்.

அவளுக்கு என்னவோ — உமாவின் குறை பெரிசாகவே தெரியவில்லை.

தலையாடினல் அது ஒரு வியாதியா...?

அதுவும் குழந்தையில் தலை, கழுத்தில் நிற்காமலேயே இருந்ததற்கு இப்பொழுது எவ்வளவோ தேவலையே...

மண்டை குறுகலாக இருப்பது ஒரு அதிசயமா? சாம்பன் மாமாவுடைய மண்டை கூடத்தான் — பின் பக்கம் வழித்து விட்டாற் போலத் தட்டையாக இருக்கிறது...

அம்மா சொல்வது போல அவருக்குப் பெருமை... மணி மணியாய் நாலு பிள்ளைகளும், ஒரே பெண்ணும் பெற்ற பெருமை. அதுவும் பெண்ணை, பதின்மூன்று வயசிலேயே, பெரிய மிராசுதார் வீட்டுப் பிள்ளைக்குக் கல்யாணம் செய்து வைத்துவிட்ட பெருமை...

பிள்ளைகளில் மூத்தவன் — ரங்கத்தை ஒத்த வயசு. அப்பொழுது இண்டரோ — என்னவோ படித்துக் கொண்டிருந்தான். விடுமுறை என்றல் பட்டணத்திலிருந்து கிராமத்துக்கு வருவான். அப்பொழுது வீடு அமர்க்களப்படும்.

''எங்க ராஜகோபாலன் வந்திருக்கானேயின்னு சேவை பண்ணினேன்... தலையாட்டிக்குப் பிடிக்குமேன்னு கொண்டு வந்தேன்...''

சாம்பன் மாமாவின் மனைவி, துக்குணூண்டு தட்டை, வாழையிலே போட்டு மூடி, கர்ம சிரத்தையாகக் கொண்டு வந்து வைத்து விட்டுப் போவாள்.

போகையிலேயே ஒரு நட்டாங்கு வேறு...

''என்னவோ ஒரு ஜென்மம்... உடம்பு

'மக்காளச் சோளத்திலுள்ள (பச்சையான) முத்துக்களை உதிர்க்கவும். சிறிது உப்புகலந்ததண்ணீரில் அதைகுக்கருக்குள் வேகவைத்து வெளியேஎடுத்துதண்ணீரை வடிகட்டவும். அதனுடன் பொடி செய்த மிளகைக் கலந்து சுண்டலாகப் பரிமாறலாம்.

— விசாலாட்சி

தான் கோணலே தவிர, உன் பொண்ணுக்கு நாக்கு ரொம்ப நீளம்டி... அன்னிக்கு கொழுக்கட்டை கொடுத்தேன் பாரு... 'வெல்லம் போதாது மாமி' ங்கறது. அசந்து போயிட்டேன். ஹூம்... பகவான் இதுக்கு என்ன வழிவிடப் போறானோ?''

ரங்கம், அம்மாவிடம் கத்துவாள்.

''உமா மகேஸ்வரின்னு பேர் வச்சிருக்கு. அது எப்படி அவ, உன் எதிரிலேயே 'தலை யாட்டி' ன்னு கூப்பிடலாம்? உனக்கு ரோஷம் வரல்லே? அவ கன்னத்துல அறையணும் போல எரிச்சல் வரல்லே?''

அம்மா அதற்குப் பதில் சொல்ல மாட்டாள். ஆனால், காரணமில்லாமல் உமா மீது ஏரிந்து விழுவாள்.

''ஏண்டி, வீட்டுல திங்கறது போறுதா... அண்டை வீடு, எதிர் வீட்டுல எல்லாம் போய் திண்டிக்கு நிக்கிறியா. பண்டாரம்... நீ இருக்கிற லட்சணத்துக்கு நாக்கு ஒரு கேடா... பகவான் என் வயித்தெரிச்சலைக் கொட்டிக்கறதுக்குன்னு உன்னை இப்படிப் படைச்சிருக்கான்டி...''

தாய் சொல்வதில் எந்த அளவுக்கு அந்தக் குழந்தைக்குப் புரியும்?

ஒன்றும் விளங்காது. சாம்பன் வீட்டு மாமி, இலை போட்டு மூடி, உள்ளே கொண்டு வந்து வைத்து விட்டுப் போன தட்டுதான் அவள் மனசில் நிற்கும்...

''ரங்கம்... அது என்னது?''

ரங்கத்தின் தாய், இருந்த இடத்திலிருந்த வாறே கத்துவாள்.

''கட்டையில வைக்க... இத்தனை சொல் றேனே... ஏதாவது புரியறதா பாரேன்!''

ரங்கம், அவளைச் சுமக்க மாட்டாமல் சுமந்து கொண்டு வாசலுக்குப் போய் விடு வாள்.

அங்கே — எதிர் வீட்டில் ராஜகோபாலன் திண்ணையில் காலை ஆட்டிக் கொண்டு உட் கார்ந்திருப்பான்...

''ரங்கம், உன் தங்கைய இங்கே அனுப் பேன்!''

''எதுக்கு?''

''சும்மாத்தான். பொழுது போகல்லே. மெட்ராஸ்ல இத்தனை நேரம், எறக்கைய கட்டிண்டு பறப்பேன்...''

''இங்கேயும் பற... உனக்குப் பொழுது போகலேன்னா — அதுக்கு, என் தங்கைதான் அகப்பட்டாளா?''

அவள் மறுபடியும், உமாவைத் தூக்கிக் கொண்டு உள்ளே போக, ராஜகோபாலன், தன் கையில் பத்திரமாக வைத்திருக்கும் மிட் டாயை, உமாவுக்கு மட்டும் தெரியும்படி காட்டிச் சிரிப்பான்.

பதினாறு வயசில் ரங்கம் — பெரியவளான போது அந்தக் குடும்பமே ஸ்தம்பித்து விட் டது.

அந்த நாட்களில் பெண் — பூப்பெய்து

---

குழந்தைகளுக்கு கொடுக்கும் ஆகார வகைகளில் இனிப்புச் சுவை சேர்க்க, வெல்லத்தைப் பயன்படுத்தலாம். பலகார வகைகளுக்கும் வெல்லத்தைப் பயன்படுத்தினால் குழந்தைகளுக்கு அதிக இரும்புச் சத்து அதிலிருந்து கிடைக்கிறது.

—விசாலாட்சி.

---

முன்பே திருமணம் செய்து வைப்பதுதான் கௌரவம் என்று நினைத்தார்கள்.

வயசுக்கு வந்து விட்டால் — அந்தப் பெண் விலைபோகாத சரக்காகி விடுவாள்.

இதனாலேயே — ரங்கம் புஷ்பவதியானதை வெளியில் மூச்சு விடவில்லை பெற்றவர்கள்.

மாதத்தில் அந்த மூன்று நாட்களும் ஜுரம் என்று போர்த்திப் படுக்க வைத்து விடுவார் கள்.

அப்படியும் சாம்பன் பெண்டாட்டிக்கு மூக்கில் வியர்த்து விட்டது.

''என்னடிம்மா, மாசத்துல மூணு நாள் முறை ஜுரமாக்கும்'' — என்று கேட்டு விட்டுப் போனாள்.

ரங்கத்தின் அப்பா, இதற்குப் பின் ஜாதகக் கட்டை எடுப்பதே — தனக்கு அவமானம் என்பது போல, உடல் கருங்கி, உள்ளம் குன்றி உட்கார்ந்து விட்டார்.

பெற்றவள் அழுது, புலம்பித்தான் மறுபடி யும் வரன் பார்த்தார்.

சேஷாத்திரியின் குடும்பம் — ரங்கத்தைப் பெண் பார்க்கச் சம்மதித்த போது — எங்கே, வீட்டில் பார்த்தால் உமாவின் விஷயம் தெரிந்து விடுமோ என்று அஞ்சி — ரங்கத்தின் தாய் வழிப் பாட்டி இருந்த தஞ்சாவூருக்குப் பெண்ணை அழைத்துக் கொண்டு போனார் கள் பெற்றவர்கள்.

உமாவை, கவனித்துக் கொள்ள அப் பொழுது சாம்பன் பெண்டாட்டி தேவையா யிருந்தது.

''நீ போய்க் கல்யாணத்தை முடிச்சிண்டு வா. நான் இதைப் பார்த்துக்கறேன்.''

ஊருக்கு, தன்னை விட்டுவிட்டு எல்லாரும் கிளம்புகிறார்கள் என்பதைப் புரிந்து கொண்ட உமா, ரங்கத்தின் காலைச் சுற்றிச் சுற்றி வந்து அழுதாள்.

''நானும் வருவேன்...''

''நீ இங்கேயே இருந்தா — உனக்கு தினமும் வெல்ல அவல், கேசரி பண்ணித் தருவேன். நம்ம ராஜகோபாலன் வேற நிறைய மிட்டாய் வாங்கி வச்சிருக்கான்..''

ரங்கத்துக்குத் தங்கையை விட்டுப் பிரிய மனசே வரவில்லை.

''அப்படியாவது எனக்கு இந்தக் கல் யாணம் வேணுமா...? நான் இப்படியே இருக்கேன்...

''போறும்டி. சமர்த்து வழியப் பேசாதே.. திரண்ட பொண்ணை அஞ்சு வருஷமா உட்கார்த்தி வச்சண்டு மானம் போறது... பதினாறு வயசு வரைக்கும் ஆயிரம் பொய்யைச் சொல்லி மறைக்க முடிஞ்சது... பத்தொம்பது வயசுக்கும் என் பொண் வயசுக்கு வரலேன்னு சொன்னா — ஒவ்வொருத்தியும் வெறுமனே சிரிக்க மாட்டா...''

''......''

''பிள்ளையாத்துல எப்ப பெரியவளானான்னு கேட்டா, பதினாறு வயசுலன்னு சொல்லு.''

''ஆமா. அவா என்கிட்ட வந்து இதைத் தான் கேட்கப் போறாளாக்கும்.''

''கேட்பாடி. எல்லாம் கேட்பா. என்கிட்ட, உங்க அப்பாவோட அத்தை கேட்டா... மாச ஜுரம் வந்தாச்சான்னு... அப்ப எனக்கு என்ன வயசு. பத்துதான். பேந்தப் பேந்த முழிச்சேன். இப்ப அப்படியா...? மலையாட்டம் வளர்த்து வச்சண்டு நிக்கறேனே...''

''......''

''கூடப் பொறந்தவா இருக்காளான்னா, ஒரு தங்கை இருக்கு; அதுக்கு உடம்பு சரியில்லே. வயத்தாலே போறதுன்னு, ஊரு லேயே விட்டுட்டு வந்திருக்கோம். அங்கே கவனிச்சுக்க மனுஷா எல்லாரும் இருக்கான்னு சொல்லு!''

ரங்கம், அம்மாவையே பார்த்தாள்.

''ஏம்மா, நல்லாயிருக்கறவளுக்கு உடம்பு சரியில்லேன்னு பொய் சொல்லச் சொல்றே?''

''ஆபத்துக்குப் பாவமில்லே. ஆயிரம் பொய்யைச் சொல்லியாவது ஒரு கலியாணத்தை முடிக்கணும்னு பெரியவா சொல்லியிருக்கா. உன் கல்யாணத்துக்காக நான் லட்சம் பொய் சொல்லக் கூடத் தயாரா இருக்கேண்டி...''

அம்மாவின் ஆதங்கம் அவளுக்கும் புரிந்தது. உமாதான் — அவர்கள் கிளம்பி, தெரு முனை திரும்பும் வரையில் அழுதாள்.

ஊர் ராசியோ — இல்லை. உண்மையிலேயே ரங்கநாயகிக்குக் கல்யாண காலம் கூடி வந்து விட்டதோ — சேஷாத்திரி வீட்டாருக்குப் பெண்ணைப் பிடித்து விட்டது.



ஆனால் —

சேஷாத்திரி குடும்பத்தில் — ரங்கத்தின் குடும்பத்தைப் பற்றித்தான் துருவித் துருவி விசாரித்தார்கள்.

''ரெண்டு பொண்கள்தானா?''

''ஆமா!''

''நடுவுல ஏதாவது அரையில, குறையில...''

''ஊம்ஹூம்... பேசப்படாது. சுத்தம்..''

''உங்க குடும்பத்துக்கே பிள்ளை ராசி கிடையாதோ?''

''சேச்சே! எனக்கு நாலு பேர் கூடப் பொறந்தவர்கள் இருக்காங்க. என் தங்கைக்கு மூணும் பிள்ளை. அவரோடக் கூடப் பொறந்தவா ஒம்பது பேர். பொண்ணே கிடையாது. எங்களுக்கு எல்லாம் பெண் குழந்தைகளே அருமை...''

''இருந்தாலும் ஒரு பிள்ளை பிறந்திருக்கலாம்.''

''அதெல்லாம் ஈசுவரனுகப் பார்த்துக் கொடுக்கறது.''

''இன்னமும் குளிச்சுண்டிருக்கேளா?''

''உம்... இப்பத்தானே நாற்பது ஆறது?''

''நல்லவாளுக்கு நாப்பதுன்னு சொல்லுவா. உங்க ரெண்டாவதுப் பொண் யார் சாயல்? இவளாட்டம இருப்பாளா?''

தொண்டையில் கொட்டைப்பாக்கு சிக்கினாற்போலச் சிறிது நேரம் திணறிய ரங்கத்தின் தாய் — 'பட்'டென்று சொன்னாள்:

''அவ அப்படியே எங்க மாமியார் ஜாடை...''

''அவளுக்கு என்ன வயசாறது?''

''பத்து.''

''ஆச்சு... இன்னும் நாலஞ்சு வருஷத்துல ஜாதகத்தை எடுத்தாத்தான் — இவ வயசுல யாவது வரன் குதிரும்னு சொல்லுங்கோ!''

மறுபடியும் கொட்டைப் பாக்கு உறுத்தல்.

பிறகு பரஸ்பரம் — சம்பந்தியாகப் போகிறவருடைய அப்பா, அப்பாவுக்கு அப்பா — நிலபுலன் — பிதுரார்ஜிதம் — அவர்கள் எத்தனை வயசு வரை வாழ்ந்தார்கள். பெண்ணுக்கு நகை எத்தனை பவுன்; வெள்ளியில் எத்தனை, பித்தளையில் எத்தனை, மூன்று நாட்கள் கல்யாணமா, ஐந்து நாட்கள் கல்யாணமா, ஏற்றி இறக்கல் உண்டா? வைத்துப் பாடல் உண்டா, ஔபாசனம் எங்கே....? ஆகக் கூடி ரங்கத்தின் கல்யாணம் நிச்சயமாகிவிட்டது.

உமாவுக்குக் கொண்டாட்டம்.

தெருவை அடைத்துப் பந்தல். பெண் வீட்டிலேயே அந்த நாளைய சம்பிரதாயப்படி முகூர்த்தம். சாம்பன் வீட்டில்தான் மாப்பிள்ளை விட்டாரை இறக்கியிருந்தது.

ஜானவாஸத்துக்கு முன்பே — சம்பந்தி விட்டாருக்கு உமாவைப் பற்றித் தெரிந்து போய் விட்டது.

சாம்பன் பெண்டாட்டி வேறு, மழுப்பி, மழுப்பி ஏதோ சொல்வது போல — சகலத்துக்கும் கண் மூக்கு வைத்துச் சொல்லி விட்டாள்.



சிறிது நெய்யில் வறுத்த கடலைமாவை தண்ணீரில் கெட்டியாகக் கரைத்து ஊற்றினால் பாயசம் நீர்க்க இல்லாமலும் மணமாகவும் இருக்கும்.

—விசாலாட்சி.

''அதும் பொறவியே அப்படி...''

''என்னமோ கிரகணக் கோளாறுங்கறு... எனக்கென்னமோ அப்படித் தோணலே. ரங்கத்தோட பாட்டி சொல்லுவா... 'அவ அம்மாவுக்கு ஒரு தங்கை இப்படி இருந்த துன்னு...''

''அதுனால என்ன் இப்ப? ஒரு தலைமுறை விட்டு, இன்னொரு தலைமுறையைத்தான் தாக்கும்... ரங்கத்தோட கொள்ளுப்பாட்டி தங்கை இப்படி இருந்தா. இப்ப ரங்கத்துக்குத் தங்கை இப்படி... நாளைக்கு ரங்கத்தோட குழந்தைகள் நன்னாத்தான் இருக்கும்... அவ பேரன் பேத்திகளைப் பத்தி இப்பவே பிடிச்சு கவலைப்பட்டா நடக்குமோ...?''

அங்கே இப்படிப் பேசிவிட்டு — இங்கே ரங்கத்தின் தாயிடமும் வந்து சடபட வெனப் பொரிந்தாள்.

''அது என்னம்மா அந்தச் சம்பந்தியம்மா அப்படி ஒரு குதி குதிக்கறு? பூலோகத்துல களங்கம் ஒச்சமே இல்லாதக் குடும்பமா வேணும்னு எப்படி? குழந்தைக்கு என்ன தேரை தோஷமான்னு கேட்கிறு...? இதை மறைச்சு வச்சுட்டா, மறைச்சு வச்சுட்டான்னு ஒரே அலறல்... அப்படிப் பார்க்கப் போனு இவா மறைக்கலையா...? சம்பந்தி மனுஷருக்கு முதுகுல கறுப்பா கையகலத்துக்குப் பொன்னவெங்கறேன்... பட்டு அங்கவஸ்திரத்தாலே போர்த்திப் போர்த்தி வச்சுண்டுட்டாப்பல ஆச்சா?''

''இவாளாலே போர்த்தி மறைக்க முடியறது. நம்மளாலே நம்ம குழந்தையை மறைக்க முடியலே... மறைக்கற வஸ்துவாடி அது? எனக்கே படபடன்னு ஆத்திரம் பொங்கிப் பொங்கி வர்றதுன்னு — பெத்தவ உனக்கு இன்னும் எப்படி இருக்கும்?

''என்ன இருந்தாலும், நீ ஆரம்பத்திலேயே 'ரெண்டாவது இப்படி'ன்னு ஒரு கோடி காமிச்சிருக்கலாம். இப்ப — நாதஸ்வரக்காரா கோவிலுக்குப் போயாச்சு. சம்பந்தியம்மாவானு — இலையில் வச்ச கேசரியில் எறும்பு மொய்க்கறதைப் பத்திக் கூடக் கவலைப்படாமகத்திண்டிருக்கா. இப்பஎன்ன செய்யப் போறே?''

ரங்கத்தின் தாயாரும், மற்றவர்களும் கூட பிரமை பிடித்து நின்று விட்டார்கள்.

பெற்றவர் 'பொல பொல'வென அழுதே விட்டார்.

உமா இது ஒன்றையுமே கவனிக்காமல், இரண்டு கைகளிலும் ஜாங்கிரியை வைத்துக் கொண்டு ரங்கத்தின் முதுகோடு ஈஷிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

'இப்பொழுது என்ன செய்வது?'

அனைவரும் ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்துக் கொண்டிருக்க —

உமா உட்கார்ந்திருந்த இடத்திலேயே, தன் பட்டுப் பாவாடையையும் ஈரமாக்கிக் கொண்டு, ரங்கத்தின் நிச்சயதார்த்தப் புடைவையையும் நனைக்க —

பெற்றவருக்கு எங்கிருந்துதான் அத்தனை குரோதம் வந்ததோ?

''எங்கேயாவது ஒழிஞ்சு போயேண்டி கடங்காரி...''

இப்படிக் கத்தியவாறே ஒற்றைக் கையால் குழந்தையைத் தூக்கி விசிறி எறிய —

சேஷாத்திரி மட்டும் அந்த நேரத்தில் அங்கே வந்து குழந்தையை இரு கைகளாலும் தாங்கிப் பிடிக்கவில்லை என்றால் — அந்த நிமிஷமே அவள் மண்டை சிதறியிருக்கும்.

''ஜானவாஸத்துக்குப் புறப்படாம இங்கே என்ன சிதறுகாய் போட்டாறது..?''

''அது வந்து மாப்பிள்ளை... இப்ப நீங்க இந்த விட்டுக்குள்ள நுழையக் கூடாது... விரதமாகணும்...''

''தெரியும்... அதான் வாசல்லேயே நிக்கறேன். புறப்படுங்கோ. எங்க அம்மா ஏதாவது சொல்லியிருந்தா அதையெல்லாம் மனசுல வெச்சுக்க வேண்டாம்... அம்பாளோட சிருஷ்டியிலே ஆயிரம் விதமிருக்கும்... எல்லாரும் ஒண்ணு போல இருக்க முடியுமோ... வாராஹியாவும், வைஷ்ணவியாவும், காளியாவும், நான்முகியாவும் அவ ஒருத்திதானே இருக்கா...? அதை நினைக்கணும்...''

ரங்கம் — அந்தக் கணத்திலேயே சேஷாத்திரிக்கு மானஸீகமாய்ப் பாத பூஜை செய்தாள்.

அதற்குப் பின்... ஜானவாஸக் காரிலும், ஊஞ்சலிலும் கூட உமா அத்திம்பேர் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள்.

அந்த நாட்களில் — போட்டோ பிடிக்கும் வழக்கமில்லை. இருந்திருந்தால் — உமாவின் முகத்தை, இப்பொழுதும் ஒரு ஞாபகத்துக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்கிற வருத்தம் ரங்கத்துக்கு நிறைய.

ஆவணியில் கல்யாணம். ரங்கத்தைப் புக்ககத்தில் கொண்டுவிடப் பெற்றோர் கிளம்பிய போது, சேஷாத்திரி ஆசை மட்டும் சொல்லிப் பார்த்தார்.

''உமாவையும் நம்ம கூட அழைச்சுண்டுப் போகலாமே...?''

ரங்கத்துக்கும் ஆசைதான். அம்மாதான் பிடிவாதமாய் மறுத்து விட்டாள்.

'ஏற்கெனவே, உன் மாமியாருக்கு எரிச்சல்.. கல்யாணத்துக்கு முன்னாலேயே



(தொடர்ச்சி 145 ஆம் பக்கம்)

# உங்கள் குழந்தை நன்றாகப் படிக்க...



முரளிக்குத் தன்னுடைய மார்க் லிஸ்டை அப்பாவிடம் காண்பிக்கப் பயம். காரணம் அவன் வாங்கி இருந்த குறைவான மார்க்குகள்தான். முரளியின் அப்பா ஓர் இன்ஜினியர். அம்மா பி. எஸ்ஸி. படித்து விட்டு பேங்கில் ஆபீசராக இருப்பவர்.

"ஊ ராதா... உன் பிள்ளை எத்தனை மார்க் வாங்கியிருக்கான் பார்த்தியா?"

"ஏன் அவனை இப்ப மாத்திரம் என் பிள்ளைன்னு சொல்றீங்க? அவன் ஒங்க பிள்ளையும்தான்."

முரளி வாங்கிய குறைவான மார்க்கினால் அவனைத் தங்களது பிள்ளை என்று சொல்லிக் கொள்ளாதிருக்க வாய்ப்பிருந்தால் நன்றாக இருக்குமே என்று கூடச் சிந்திக்கத் தொடங்குகிறார்கள். சமூகத்தில் ஓர் உயர்ந்த இடத்தை அடைந்துள்ள பெற்றோர்கள் தங்களது குழந்தைகள் பள்ளிக்கூடத்திலோ கல்லூரியிலோ குறைவாக மார்க்குகள் வாங்கும் போது மிகவும் கூனிக் குறுகிப் போய் விடுகிறார்கள்.

தாங்கள் அடைந்த பதவிகளைத் தங்களுடைய பிள்ளைகளும் அடைய முடியாமல் போய் விடுமோ என்று பயப்படத் தொடங்குகிறார்கள்.

அப்படி நடக்காதிருக்க, பெற்றோர் கண்டிப்பாலும் அடியாலும் தங்களுடைய பிள்ளையையோ, பெண்ணையோ திருத்த முயற்சிக்கிறார்கள். தாய், 'நீ இதைப் படித்தால் உனக்கு ஸ்வீட் செய்து தருகிறேன் அல்லது சைக்கிள் வாங்கித் தருகிறேன். நீ இத்தனை மார்க் வாங்கினால் நீ கேட்ட டிரஸ் வாங்கித் தருகிறேன்' என்று பேரம் பேசி லஞ்சம் கொடுக்க முயற்சிக்கிறாள்.

அழுதாலும் புரண்டாலும் அவள்தான் பிரசவிக்க வேண்டும் என்று தாயைப் பற்றிக் குறிப்பிடுவது போல, யார் என்ன சொல்லிக் கொடுத்தாலும், தண்டித்தாலும், லஞ்சம் கொடுத்தாலும், பரீட்சை எழுதி மார்க் வாங்க வேண்டியது குழந்தைகளே. உங்கள் குழந்தைகள் நன்றாகப் படிக்கப் பின் வரும் யோசனைகளைப் பின்பற்றினால் பலன் கிடைக்கும். இம்முறைகள் ஆசிரியர் தொழிலில் அனுபவம் உள்ள பலர் கடைப்பிடித்த வழிகள்.

## உங்கள் குழந்தைக்கு நம்பிக்கையைக் கொடுங்கள் :

''நீ முட்டாள். புத்தி இல்லாதவன். நீ ஒரு மரமண்டை. உனக்குச் சொல்லிக் கொடுப்பதைக் காட்டிலும் ஒரு சுவருக்குச் சொல்லிக் கொடுக்கலாம்'' என்றெல்லாம் திட்டுவதை அடியோடு தவிர்த்து விட்டு ''உன்னால் முடியும், நிச்சயமாக நல்ல மார்க் வாங்க முடியும். உனக்குத் திறமை இருக்கிறது. அறிவு இருக்கிறது. நீ மக்கு அல்ல. இன்னும் கொஞ்சம் கவனமாகப் படித்தால் நீ நிறைய மார்க்குகள் வாங்குவாய்'' என்று குறைவாக மார்க் வாங்கும் குழந்தைக்கு நம்பிக்கையை ஏற்படுத்தினால் அந்தக் குழந்தை அதிக உற்சாகத்துடன் படிக்கத் தொடங்கும், பலன் கிடைக்கும். எதிலும் முயற்சி செய்ய அதை அடைய வேண்டும் என்ற ஆசை முதலில் வேண்டும். அடுத்ததாக அதை அடைய முடியும் என்ற நம்பிக்கையும் வேண்டும். ஆசை மாத்திரம் இருந்து அதை அடைய முடியும் என்ற நம்பிக்கை இல்லாவிட்டால் முயற்சியே செய்ய மாட்டார்கள். படிப்பில் மாத்திரம் அல்ல, வாழ்க்கையில் ஈடுபடும் ஒவ்வொரு முயற்சிக்கும் இந்த அடிப்படைத் தத்துவமே முதல் கட்டமாக அமைகிறது.

ஆனால் பெரும்பாலான பெற்றோர்கள் செய்வது என்னவென்றால் குறைவாக மார்க் வாங்கும் தங்கள் குழந்தைக்குத் தன்னைப் பற்றிய தோல்வி மனப்பான்மையையே உருவாக்கி அதற்குத் தினமும் உரம் போட்டு வளர்க்கிறார்கள். ஒரு குழந்தைக்குக் கூட 'உயர்வான அபிப்பிராயம், தாழ்வான அபிப்பிராயம்' என்றெல்லாம் உண்டா?' என்று பல பெற்றோர்கள் ஆச்சரியப்படுவார்கள். மனம் என்று உள்ள ஒவ்வொரு உயிருக்கும் தன்னைப் பற்றிய ஓர் அபிப்பிராயம் உண்டு. இந்த அபிப்பிராயமே ஒருவனை உயர்த்துகிறது அல்லது தாழ்த்துகிறது.

## உங்கள் குழந்தையிடம் பேசுங்கள் :

நீங்கள் அடிக்கடி உங்கள் குழந்தையிடம் பேசுங்கள். இது உங்கள் குழந்தையின் மொழி அறிவையும் உரையாடும் திறனையும் அதிகப்படுத்துகிறது. விஞ்ஞானமாக இருந்தாலும், மருத்துவமாக இருந்தாலும், நிர்வாக இயலாக இருந்தாலும் எந்தத் துறையில் ஈடுபடுவதாக இருந்தாலும் மொழியறிவு அதிகமாக உள்ளவர்கள் — குறிப்பாக ஆங்கிலத்தில் அதிக மொழியறிவு உள்ளவர்கள் — தங்களது கருத்துக்களைத் தெளிவாக மற்றவர்களுக்குத் தெரிவிக்க அவர்களது மொழியறிவு உதவும். ஒரு மனிதனின் வெற்றி அவனுடைய பேசும் திறனையும் எழுத்துத் திறனையும் பெருமளவு பொறுத்திருக்கிறது. நீங்கள் குழந்தையிடம் என்ன பேசுகிறீர்கள் என்பதைவிட உங்கள் குழந்தை என்ன சொல்கிறது என்பது மிக முக்கியம்.

படிக்கும்போது வாய்விட்டுப் படிப்பது படிக்கும் திறனை அதிகப்படுத்துகின்றது. குழந்தைகள் கடிதங்கள் எழுதுவதையும் கடிதங்கள் பெறுவதையும் அதிகம் விரும்புகிறார்கள். இது அவர்களுடைய கற்பனையையும், எழுத்துத் திறனையும் அதிகப்படுத்துகிறது. தனது வயது ஒத்த உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் அவர்களைக் கடிதம் எழுதச் சொல்லி உற்சாகப் படுத்தலாம். பேனா நண்பர்கள் வைத்துக் கொள்ளச் சொல்லி ஆதரவு கொடுப்பதும் அவர்களுடைய எழுத்துத் திறனை வளர்க்க உதவும்.

## உங்கள் குழந்தையின் பள்ளியில் நடப்பதைப் பற்றித் தெரிந்து கொள்ளுங்கள் :

உங்கள் குழந்தையின் பள்ளியில் நடப்பதைப் பற்றித் தெரிந்து கொள்ளச் சரியான ஆள் உங்கள் குழந்தையே. உங்கள் குழந்தை ஏதாவது போட்டியில் கலந்து கொள்வதாக இருந்தால் அதற்காக நீங்களும் கொஞ்ச நேரம் செலவழிக்கத் தயாராக இருங்கள். உற்சாகப்படுத்துங்கள். போட்டி முடிந்ததும் அதைப் பற்றிக் கேளுங்கள். பள்ளிக்கூட நேரமாக இருந்து பெற்றோர்களும் வரலாம் என்றால் முடிந்த அளவு போகத் தவறாதீர்கள். ஒரு குழந்தைக்கு மற்றவர்களின் பாராட்டுக்களைக் காட்டிலும் பெற்றோர்களின் பாராட்டு மிகவும் பெரிது என்பதை உணருங்கள்.

## படிப்பதில் அர்த்தம் இருப்பதை உணர்த்துங்கள் :

''இதை எல்லாம் நான் ஏன் படிக்க வேண்டும்? இதனால் என்ன பிரயோஜனம்?'' என்று குழந்தைகள் சொல்லுவதைப் பலரும் கேட்கலாம். உங்கள் குழந்தை படிக்கும் பாடத்

# இருட்டிலே ஒரு ஒளிச்சுடர்



## ஏழைக் குடும்பத்தில் சம்பாதிக்கும் அங்கத்தினர் விபத்திலே இறந்துவிட்டால், அக்குடும்பத்தினர் நம்பிக்கை இழக்க வேண்டாம்!

சமூகப் பாதுகாப்புத் திட்டத்தின் மூலம் அக்குடும்பத்தினர் 3000 ரூபாய் வரை பெறமுடியும்.

**இந்த இலவச விபத்து இன்ஷ்யூரன்ஸின் விதி, நிபந்தனைகள் கீழ்க்கண்டவாறு:**

- 5000 ரூபாய்க்கும் குறைவாகச் சம்பாதிக்கும் குடும்பங்களுக்கு மட்டுமே இத்திட்டத்தின் பலன் கிடைக்கும்.
- விபத்தில் இறந்தவரின் வயது 18 லிருந்து 55 க்கு இடைப் பட்டிருக்கவேண்டும்.
- விபத்தில் அடங்கியவை: பாம்பு கடித்தல், மூழ்கிவிடுதல், விஷ உணவு, மரத்திலிருந்து விழுதல், வனவிலங்குகளால் கொல்லப்படுதல்.
- பாலிசிதாரர் மற்றெந்த விதியின்கீழ் இழப்பீடு பெற தகுதியுள்ளவராயின், இத்திட்டத்தின் மூலம் பலனடைய மாட்டார்.
- இத்திட்டம், நாட்டின் தேர்ந் தெடுக்கப்பட்ட 194 மாவட்டங்களில் செயல்படுகிறது.

உங்கள் தாலுகா அல்லது பிளாக்கின் க்ளெய்ம்ஸ் கம் செட்டில்மெண்ட் அதிகாரியுடன் அல்லது அருகிலுள்ள யுனைடெட் இந்தியா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெடின் அலுவலகத்துடன் தொடர்பு கொள்ளவும்.

## சமூகப் பாதுகாப்பு திட்டம்



ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கார்பொரேஷன் ஆஃப் இந்தியா



யுனைடெட் இந்தியா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிட்.

interpub/GIC/1/87/TAM

திற்கும் வாழ்க்கையில் அதன் உபயோகத்திற்கும் உள்ள தொடர்பை உங்களால் இயன்ற அளவு விளக்க முயற்சி செய்யுங்கள். குழந்தையிடம் படிக்கும் ஆர்வத்தை ஏற்படுத்த வேண்டும் என்றால் பெற்றோர்கள் முதலில் செய்ய வேண்டியது — அவர்கள் புத்தகங்களைப் படிக்க வேண்டும். எந்தப் புத்தகமாக வேண்டுமானாலும் இருக்கலாம். குழந்தைகள் தங்களது பெற்றோர்களையே முன்மாதிரியாகக் கொள்ள விரும்புகின்றனர். படிப்பதில் அதிக ஆர்வம் காட்டாத குழந்தைகள் அவ்வாறு இருக்கக் காரணம், தாங்கள் 'மாடலாக' ஏற்றுக் கொள்ளத் தங்களது வீட்டில் அவ்வாறு யாரும் இல்லாத காரணமே என்கிறார்கள் மனோதத்துவ ஆராய்ச்சியாளர்கள்.

**குழந்தைக்கு விஷயங்களை எப்படி கண்டுபிடிப்பது என்று கற்றுத் தாருங்கள் :**

எல்லாக் கேள்விகளுக்கும் விடை தெரிந்திருப்பதைவிட, எல்லாக் கேள்விகளுக்கும் விடையை எப்படிக் கண்டுபிடிப்பது? என்று தெரிந்து இருப்பது மிகவும் முக்கியம். மேலை நாடுகளில் பரீட்சை முறைகள் பெரும்பாலும் இம்முறையிலேயே நடக்கின்றன.

முடிந்த அளவு குழந்தைக்குத் தேவையான விடையைத் தானாகவே முயற்சி செய்து கண்டுபிடிக்க உற்சாகமும் பொறுமையும் காட்டுங்கள். எந்தெந்தப் புத்தகத்தில் தேடினால் கிடைக்கும் என்று உதவி செய்யுங்கள். பத்திரிகைகள், ரேடியோ, டீ. வி. நிகழ்ச்சிகள் கூட இதற்கு உதவி செய்யலாம். உங்களுக்கு விடை தெரியாவிட்டால் உங்களுடைய நண்பரிடமாவது கேட்டு விடையைச் சொல்லுங்கள். விடை தெரியா விட்டால் மழுப்பாதீர்கள் அல்லது, ''ஏன் என்னை இதை எல்லாம் கேட்டு நச்சரிக்கிறாய்?'' என்று குழந்தையின் மேல் எரிந்து விழாதீர்கள்.

குழந்தையை லைப்ரரிக்கு அழைத்துச் செல்லும் பழக்கம் ஏற்படுத்தினால் மிக மிக நல்லது. அங்கே சென்று எப்படிப் புத்தகங்களைப் பல பகுதிகளாகச் சேர்த்து வைத்திருக்கிறார்கள், எந்த விஷயம் சம்பந்தப்பட்ட புத்தகம், எந்த இடத்தில் இருக்கும் என்பதை எல்லாம் அவர்களுக்குக் காண்பித்துத் தந்தால் அவர்களது ஆர்வம் அதிகமாக வளரும்.

**வீட்டிலும் கொஞ்சம் பொறுப்பைக் கொடுங்கள் :**

குழந்தைகள்தானே என்று அலட்சியமாக விடாமல் அவர்களுக்கும் வீட்டில் கொஞ்சம் பொறுப்பைக் கொடுங்கள். தினமும் ராத்திரிபடுக்கும்போது, ''அம்மா, கொல்லைக் கதவைச் சாத்தியாச்சா, அடுப்படி ஜன்னல் சாத்தியாச்சா, சுவாமி ரூம் கதவைச் சாத்தியாச்சா?' என்று குழந்தை கேட்டால், ''பெரிய மனுஷன் மாதிரி கேட்கிறான் பாருங்க,'' என்று அவனை நையாண்டி செய்யாதீர்கள். சிறிய சிறிய வேலைகளைச் செய்ய — நேரத்துடன் செய்ய — அவர்களைப் பழக்கப்படுத்துங்கள். இந்தப் பழக்கம் பள்ளிக் கூடத்திற்குச் சென்றாலும் அங்கே தேவைப்படும்போது பொறுப்புக்களை ஏற்றுச் செய்ய ஆர்வத்தையும் துணிவையும் கொடுக்கிறது. வாழ்க்கையில் இந்தக் குணம் மிகவும் உதவியாக இருக்கும். இந்தப் பழக்கம் எந்த வயதிலும் மாறாது.

**படிப்பைத் தவிர மற்றவற்றிலும் கவனம் செலுத்த உற்சாகப்படுத்துங்கள் :**

உங்களது குழந்தை படிப்பில் அவ்வளவு தூரம் பிரகாசிக்கவில்லை என்றால் அவனது குறையைப் போக்க விளையாட்டுக்களிலோ அது சம்பந்தப்பட்ட துறைகளிலோ ஆர்வம் ஏற்பட முயற்சி செய்தால் பலன் கிடைக்கும். ஒரு துறையில் வெற்றி வரும் போது மற்ற துறையிலும் அந்த வெற்றியை அடைய வேண்டும் என்ற ஆர்வத்தைகுழந்தையிடம் அது தூண்டுகிறது. 'ஏற்கெனவே படிப்பில் மோசம். இன்னும் படிக்கும் நேரம் குறைந்து விளையாட்டுக்களிலோ, டிராயிங் பெயிண்டிங், பாட்டு, வீணை கற்றுக் கொள்வதிலோ நேரத்தைச் செலுத்தினால் படிப்பு இன்னும் மோசமாகும் என்று நினைப்பது தவறு. வேலைகள் என்று செல்லும்போது வெறும் படிப்பில் அதிகம் மார்க் வாங்கிய மாணவனைவிட, படிப்பில் சுமாரான மார்க்குகள் வாங்கி மற்ற துறைகளில் பரிசுகள் பெற்ற மாணவனையே பலரும் தேர்ந்தெடுக்க விரும்புகிறார்கள்.

**தங்களது தேவைகளைத் தாங்களே கவனித்துக் கொள்ளப் பழக்குங்கள் :**

குழந்தை வீட்டிற்கு வந்தால் மறுநாள் என்ன ஹோம் ஒர்க் செய்ய வேண்டும் என்று நீங்கள் நினைவுபடுத்தாமல், தாங்களே அதை உணர்ந்து செய்யப் பழக்குங்கள். புத்தகங்களையும் நோட்டுப் புத்தகங்களையும் கண்ட இடத்தில் வைத்துப் படித்து விட்டு, அங்கங்கே போட்டுவிட்டுப் போகாமல் ஒரு குறிப்பிட்ட இடத்தில் திருப்பி வைக்கும் பழக்கத்தை ஏற்படுத்துங்கள். இதனால் காலை நேரத்தில் வீட்டில் இரைச்சலும் டென்ஷனும் மிகவும் குறைகிறது. மறு



ரசம் கொதிக்கும் போது வெண்டைக்காயை நறுக்கிப் போட்டால் ரசம் மணமாக இருக்கும்.

— மஞ்சுளா கிரி



நாள் காலையில் எடுத்துச் செல்ல வேண்டிய ஸ்கூல் பீஸ் முதலியவற்றை முதல் நாளே கொடுத்துவிடுவது நல்லது. மறு நாளைக்குத் தேவையான சாக்ஸ், டிரெஸ் முதலிய வற்றை முதல் நாள் இரவே தேடி வைக்கப் பழக்கப்படுத்துங்கள். இம்முறை நர்சரி படிக்கும் குழந்தையாக இருந்தாலும் சரி, கல்லூரியில் படிக்கும் மாணவியாக இருந்தாலும் சரி, யாருக்கும் பொருந்தும்.

**குழந்தையின் ஆரோக்கியத்தை உணருங்கள்:**

ஆரோக்கியமான மனம் இருக்க ஆரோக்கியமான உடம்பு வேண்டும். நீங்கள் குழந்தைக்குக் கொடுக்கும் ஆகாரம் அவர்களது படிப்பின் ஆர்வத்தைப் பாதிக்கிறது. உதாரணமாக, காலை நேரத்தில் அதிக சர்க்கரை உள்ள ஆகாரத்தைச் சாப்பிட்டுச் செல்லும் குழந்தைகள் பாடத்தில் அதிக கவனம் செலுத்தாமல் இருக்கின்றன என்று சொல்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள். கண்ட கண்ட நேரங்களில் கூல்டிரிங்ஸ் குடிப்பது ஐஸ்க்ரீம் சாப்பிடுவது கவனத்தைக் குறைக்கும். குழந்தையின் பார்வையிலோ, கேட்பதிலோ உள்ள சிறிய கோளாறுகள்கூட குழந்தையின் படிப்பைத் தடை செய்கின்றன. இது போன்ற சந்தேகங்கள் வரும்போது உடனே டாக்டரிடம் காண்பிப்பது நல்லது. பெரும்பாலான குழந்தைகள் வீட்டிலோ அல்லது பள்ளியிலோ உடற்பயிற்சிகள் செய்வதில்லை. பரிசு வாங்குவது முக்கியமல்ல, பயிற்சிகள் செய்வது முக்கியம் என்பதைக் குழந்தைகளிடம் பெற்றோர்கள் உணர்த்த வேண்டும்.

**குழந்தையிடம் அடையக்கூடிய லட்சிய எண்ணங்களை ஏற்படுத்துங்கள்:**

குழந்தையின் படிப்புத் திறனுக்கும் குடும்பத்தின் வசதிக்கும் ஏற்ற லட்சியங்களை குழந்தையிடம் ஏற்படுத்துங்கள். உங்களது லட்சியமே உங்களது குழந்தையின் லட்சியமாகவும் இருக்க வேண்டும் என்று நினைக்காதீர்கள். சில சமயங்களில் குழந்தைக்கும் (மாணவமாணவிகளும்குழந்தைகள்தானே!) பெற்றோர்களுக்கும் இடையில் பிரச்னைகள் ஏற்பட இதுவே காரணமாக இருக்கிறது. வளர்ந்த பிறகு விஞ்ஞானம் படித்து ரிசர்ச் செய்ய விரும்பும் மாணவனை ஐ.ஏ.எஸ். படிக்க வைத்து கலெக்டராக ஆக்க விரும்புவது தவறானது. பிள்ளைகளுக்குத் தங்கள் வசதிக்கும் படிப்புக்கும் அப்பாற்பட்ட ஆசைகள் இருந்தால்கூட ஏளனம் செய்யாதீர்கள். அவர்களது ஆசை எவ்வளவு தூரம் நிறைவேற இயலாதது என்பதை அவர்களே அறிந்து கொள்ள ஏற்பாடு செய்யுங்கள்.

எந்த குணங்கள் ஒரு குழந்தையைப் படிப்பில் வெற்றி அடையச் செய்கிறதோ அந்தக் குணங்களே வளர்ந்து அந்தக் குழந்தையை வாழ்க்கையிலும் வெற்றி அடையச் செய்ய உதவும் என்பதை மறவாதீர்கள்!

— கமலநாதன்

# குக்கர் 'கேஸ்கட்' ரகசியம்

ஒரு பெரிய கடையில் குக்கர் கேஸ்கட் பத்து ரூபாய் கொடுத்து வாங்கினேன். முதல் நாளே குக்கரிலிருந்து தண்ணீர் ஒழுகவில்லை; கொட்டியது. வாங்கிய கடையிலேயே சண்டையிட்டு, வேறு புதிதாக மாற்றிக் கொண்டு வந்தேன். மறுநாளும் அதே கதைதான். அக்கம் பக்கத்தில் கேட்டதில், ஒரு கடைப் பெயரைச் சொல்லி அங்கே வாங்கச் சொன்னார்கள்.

அங்கே சென்ற போதுதான் அதிர்ச்சி தரும் விஷயத்தை அறிந்து கொண்டோம்.

சும்மா 2, 3 ரூபாய் செலவில் "கேஸ்கட்" தயாரித்துக்குறிப்பிட்ட தரமான கம்பெனியின் பெயரைக் கவர் மேல், அவர்களே போட்டு, பத்து ரூபாய்க்கு விற்கிறார்கள். பெரிய கடை, சின்ன கடை என்ற கணக்கில்லை. பலர் இப்படி ஏமாறுகிறார்கள் என்றும் சொன்னார்கள்.

"நாங்கள் 'ஆத்தரைஸ்டு டீலர்' என்று ஒரு பிரேம் போட்ட அட்டையைக் காண்பித்தனர். குறிப்பிட்ட தரமான கம்பெனியின் 'ஆத்தரைஸ்டு டீலர்' என்ற கம்பெனியின் சர்டிபிகேட் அது.

அங்கிருந்து வாங்கி வந்த கேஸ்கட் மிகமிக நன்றாக உள்ளது. ஐந்து வருடமாக ஏமாந்து விட்டோமே என வருத்தமாக இருந்தது. பல ஜனங்களும் இவ்வாறு ஏமாறுகிறார்கள்.

குக்கர் உள்ளவர்கள் கடைக்குச் சென்று 'கேஸ்கட்' வாங்கும்போது 'ஆத்தரைஸ்டு டீலரா?' எனத் தெரிந்து கொண்டு வாங்கலாமே!

— கமலா.

# 20

எட்டு மாத கர்ப்பச் சுமையின் வேதனையும் பொலிவும் முகத்தில் தெரிய கண் மூடி ஒருக்களித்துப் படுத்திருந்த மனைவியை லேசாக தன்புறம் திருப்பிப் பார்த்தான் முரளி.

உடம்பை விறைத்துக் கொண்டு வீம்பாக திரும்ப மறுத்து அழுத்தமாகப் படுத்திருந்தாள் சித்ரா.

''ஏய், என்ன கோபம்? அம்மா ஏதானும் சொன்னாளா?'' மேடிட்ட அவள் வயிற்றைப் பெருமையுடன் தடவியபடி கேட்டான்.

வெடுக்கென்று கையைத் தட்டிவிட்டு திரும்பிப் பார்த்து முறைத்தாள்.

''இன்னிக்கு என்ன கிழமை?'' அதட்டலாகக் கேட்டாள்.

''சண்டேதான்.''

''கார்த்தால எங்க போறதாக சொல்லிட்டு வெளில போனீங்க?''

''ஆபிஸுக்கு.''

''சொன்னீங்க. ஆனாப் போகலே.''

''ஆமாம், போகலே.''

''அப்ப ஏன் பொய் சொன்னீங்க? உமா வீட்டுக்குத்தான் போறேன்னு தைரியமா சொல்லிட்டுப் போறதுதானே?''

''வேணும்னு பொய் சொல்லலே சித்ரா. அது பொய்யின்னும் எனக்குத் தோணலே. விமலா விஷயமா கொஞ்சம் பேச வேண்டியிருந்தது. அதான் போனேன்.''

''அதைத்தான் ஏன் என்கிட்டச் சொல்லலே. சொன்னா நான் என்ன தடுக்கவா போறேன்? போகாதே. போ கா தே என் கணவான்னு ஒப்பாரி வைக்கப் போறேனா? உங்க மனசு குத்தமுள்ள மனசு. அதான் குறுகுறுங்கறது. நெஜத்தைச் சொல்ல உங்களுக்குத் தைரியம் இல்ல. மடில கனம் இல்லாதவருக்குத்தானே பயமும் இருக்காது.''

''சித்ரா என்ன இது?'' கத்தினான் முரளி. ''வாட் டு யூ ஸே. எனக்கு என்ன பயம்? எதுக்கு நான் பயப்படணும்? இல்லே என் மடிலே என்ன கனம் இருக்கு?''

''சும்மா கத்தினா அடங்கிட மாட்டேன் நான். நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்க. உங்களுக்கு அந்த உமா மேலே இப்ப ஒரு கண். கல்யாணத்துக்கு முன்னாலேயே அவ உங்களை விரும்பியிருக்கா. அப்போ ஏதோ ஒரு மோகம் என் மேலே. அவளை நிராகரிச்சீங்க. இப்போ என் மேலே இருந்த மோகம் புஸ்ஸுனு அடங்கிப் போய் வேறே எடத்துல.... வேறே எடத்துலே என்ன? அந்த உமா மேலே கொழுந்துவிட்டு எரியறது உங்களுக்கு. அப்ப கிடைக்காதது இப்பவானும் கிடைக்கறதேன்னு அவளும் உங்களுக்குத் தூபம் போடறா.''

''ஸ்டாப் இட்!'' அடித் தொண்டையிலிருந்து கத்தினான். ஒருநிமிடம் முகம் ஜிவு ஜிவு என்று சிவக்க கண்களில் ரத்தம் பாய ஆங்காரமாய் நின்றவனைப் பார்த்து நடுங்கிவிட்டாள் சித்ரா.

''யாரைப் பத்தி பேசறேன்னு தெரிஞ்சுதான் பேசறயா சித்ரா? என்னைப் பத்திக் கூடத் தப்பாப் பேசு. கவலையில்லே. இந்தப் பொம்பளைங்களுக்கேசந்தேகப்புத்திதான்னு தொடச்சு எறிஞ்சுட்டுப் போயிடுவேன். ஆனா உமாவைப் பத்தி அபாண்டமா பேசறியே, உன் நாக்கிலே நரம்பு இருக்கா இல்லையா? ஒரு நிமிஷம் யோசிச்சுப் பார். உமா இன்னொரு பொண்ணுக்குத் துரோகம் செய்யற பொண்ணா? அதுவும் உனக்குச் செய்வாளா? உன் குடும்பத்துக்கு அவ எவ்வளவு செஞ்சிருக்கான்னு நினைச்சுப் பார்த்தா, நீ இப்படிப் பேச மாட்டே. செய்நன்றி மறக்கறது கொலைக்குச் சமானம்னு தெரியுமா உனக்கு? உன் மனசுல எப்படி இந்த மாதிரி கேவலமான சந்தேகம் வந்தது? இந்த நேரத்துல உன் மனசுல ஏற்படற தீய எண்ணங்கள் உன் வயத்துல இருக்கற கொழந்தையோட பிற்கால வாழ்க்கையைத்தான் பாதிக்கும்கறதாவது தெரியுமா? இந்த நேரத்துல நல்லதைப் படி. நல்லதைப் பாரு. நல்லதைக் கேளு. உனக்குப் பிறக்கிற குழந்தை மகாத்மாவா பிறப்பான். தயவு செஞ்சு அந்த குழந்தைக்காகவாவது இந்தக் கேவலமான எண்ணங்களை உன் மனசுலேர்ந்து தொடச்சு எறிஞ்சுடு சித்ரா'' கோபமாக ஆரம்பித்து கெஞ்சலாக முடித்தான்.

அவன் பேசப் பேச அவன் சொன்னவற்றின் நியாயங்களைவிட அவன் உமாவுக்குப் பரிந்து பேசுகிறானே என்ற வெறுப்புதான் இன்னும் அதிகமாகியது அவளுக்கு. அதே வெறுப்பை அலட்சியமாக மாற்றிக் கொண்டு, பதில் சொல்லாமல் திரும்பிப் படுத்தாள்.

முரளி உண்மையிலேயே வேதனைப்பட்டான். அப்போது அம்மா சொன்னபோது அவன்கூட உமா தன்னை நேசிக்கிறாளோ எனச் சந்தேகப்பட்டான். பிற்பாடு உமா எல்லாம் விவரமாகக் கூறியதும்தான் அவன் உண்மை தெரிந்து அவளிடம் மன்னிப்புக் கேட்டான். இன்றைக்குச் சித்ரா இத்தனைக் கேவலமாகப் பேசியது அவனுக்கு என்னமோ போலிருந்தது.

மனிதர்கள்தான் எப்படி மாறிவிடுகிறார்கள்! அவர்களுடைய ஒவ்வொரு செயலுக்கும் ஒவ்வொரு பேச்சுக்கும் கீழே ஏதோ. சுயநலம் எல்லாரிடமும் மறைந்துதான் இருக்கிறது. தானும் அதற்கு விதிவிலக்கல்ல என்றே அவனுக்குத் தோன்றியது.

அம்மாவுடைய பணத்தாசையை எதிர்த்த

# துன்பம்

வித்யா சுப்ரமணியம்

தன்னுடைய நியாயப் போராட்டத்தின் அடி யில் மறைந்திருந்ததும், காதலித்தவளைக் கைப்பிடிக்க வேண்டும் என்ற சுயநலம் தானே. நேற்றுவரை தெய்வமாக நினைத்த உமா, இன்று இவள் கண்ணுக்குத் துரோகி யாகத் தெரிகிறாள் என்றால், நான் அவளுக்கு மட்டுமே சொந்தம் என்ற நியாயமான சுய நலம்தானே?

புரண்டு புரண்டு படுத்தும் தூக்கம் வர வில்லை அவனுக்கு.

"**யா**ராவும் வீட்டுக்கு வந்திருந்தாங் களா உமா?" மங்களம் கேட்டாள்.

"ஆமாம்மா, முரளி வந்திருந்தார். எப்படிக் கண்டு பிடிச்சே?" என்று கேட் டாள்.

"காப்பி டம்ளர் அலம்பாம இருக்கேன்னு பார்த்தேன். ஆமா, எதுக்கு வந்தான் முரளி?"

"சும்மாதான் வந்தார். சித்ராவும் அவ அம்மாவும் கூட வந்திருந்தா."

"அச்சச்சோ, நான் இல்லாமே போயிட் டேனே!" வருத்தப்பட்டாள்.

'உனக்கு வருத்தமா இருக்கற விஷயம் எனக்குச் சந்தோஷமா இருக்கும்மா. அவ மட்டும் அப்பா கண்ணுலே பட்டிருந்தா தான் உண்மையாவே உன்னே வருத்தப் படுத்தும் விஷயம் நடந்திருக்கும்!'

ராத்திரி படுத்துக் கொள்ளும்போது முரளி விமலாவைப் பற்றிக் கூறினதெல் லாம் நினைத்தவளுக்கு வருத்தமாக இருந்தது. கடவுளே, அவளுக்கேற்ற மாப்பிள்ளையைச் சரியான நேரத்தில் அனுப்பும் சக்தி உனக் குத்தான் இருக்கிறது. அந்த நேரத்தைச் சீக் கிரம் வரச் செய்யேன் ப்ளீஸ்!' நடந்து போன எல்லா நிகழ்ச்சிகளையும் அசை போட்டுக் கொண்டே தூங்கிவிட்டாள்.

# நேர்மையில்..



மறுநாள் விடிகாலை நான்கு மணி இருக்கும். டெலிபோன் அடித்தது. திடுக்கிட்டு எழுந்து வந்து எடுத்தாள்.

ஹரி!

அவன்தான் ஸ்டேட்ஸிலிருந்து பேசுகிறான். ஒரு நிமிடம் திகைப்பு, சந்தோஷம், பரபரப்பு எல்லாம் சேர, "ஹலோ ஹரி எப்படி இருக்கே? கங்கிராஜுலேஷன்ஸ்" என்றாள்.

நன்றி சொன்ன ஹரி, தான் இன்னும் ஒரு வாரத்தில் புறப்பட்டு வருவதாகச் சொன்னபோது அவளுக்குச் சந்தோஷம் பீறிட்டது.

"என்னிக்கு வர? எக்ஸாக்டா சொல்லு ஹரி" என்றாள்.

"பதினாறாம் தேதி மார்னிங் அங்க வந்து சேருவேன்னு நினைக்கிறேன். என்னுடைய டிக்கெட் வெயிட்டிங் லிஸ்ட்ல இருக்கு. உடனே கிடைச்சா, பதினாறாம் தேதி. இல்லேன்னா பத்தொம்பதாம் தேதிதான் வரமுடியும்" என்று ஹரி சொன்னபோது, 'கடவுளே, பதினாறாம் தேதியே அவனுக்கு டிக்கெட் கிடைக்கட்டும்' என்று நினைத்துக் கொண்டாள்.

ஹரியுடன் பேசினதும் மனசு உற்சாகமடைந்தது.

எல்லோரையும் விசாரித்துவிட்டு போனை வைத்தான் ஹரி.

"யாரும்மா ஹரியா பேசினான்? இண்டியா வரானாமா?" மஹாதேவன் கேட்டார்.

"ஆமாம்ப்பா. பதினாறாம் தேதி வரேன்னு சொன்னான்" என்றவள், "நீங்க இன்னும் ஹரியைப் பார்த்ததில்லே இல்லப்பா?"

"ம்ஹூம். நீ செலவழிச்சுப் படிக்க வைச்சு அமெரிக்காவுக்கும் அனுப்பிச்சிருக்க. அதுக்காக நீ ஆயிரக்கணக்கான ரூபாய் ஸ்பென்ட் பண்ணியிருக்க. உன் பேர்ல இருந்த ரூபாயெல்லாம் செலவழிச்சு, இப்போ அது நில் பாலன்ஸ். கணக்குப் பார்த்தா, லட்சத்தைத் தாண்டும். இருந்தும் அப்பா, இவன்தான் ஹரின்னு நீ ஒரு தடவை கூட இண்ட்ரொடியூஸ் பண்ணினதில்லே. யாரிந்த ஹரி, அவன் மேலே உனக்கு எப்படி அந்த அளவுக்குப் பாசம் வந்ததுன்னு எனக்கும் அவனைப் பார்க்க ஆசைதான். சந்தர்ப்பம்தான் வரலே. பரவாயில்லே, அமெரிக்காவிலிருந்து வரட்டும், பிறகு பார்த்துக்கறேன்."

அப்பா கொஞ்சம் குத்தலாகப் பேசியதாகத் தோன்றியது உமாவுக்கு. கண்டிப்பாக இருக்காதா பின்னே? அவள் பேருக்குப் போட்டு வைத்திருந்த பணம் பூராவும் அவனுடைய காலேஜ் படிப்புக்குச் செலவழித்திருக்கிறாள். இப்போதெல்லாம் சம்பளம் வாங்கினால் வீட்டுச் செலவுக்குக்கூட கொடுப்பதில்லை. அப்படியே வாங்கி ஹரியின் மேல்படிப்புக்கு அனுப்பிவிடுகிறாள்.

இனியும் இவரைச் சோதிக்கக் கூடாது. 'அப்பா இவன்தான் ஹரி'ன்னு அவனை இவர் முன்னால் நிறுத்தணும். ஹரி இப்போது எப்படி இருக்கிறானோ? அப்பா சாயல் குறைந்திருக்குமா? இல்லை, இன்னும் அதிகமாகி இருக்குமா? எது எப்படி இருந்தாலும் அவனை அப்பா பார்க்கும்போது, இவன் என் மகன்தான், இவனைப் படைத்தவன் நான்தான் என்று அவரால் இனம் கண்டு கொள்ள முடிந்துவிடுமோ? நினைக்கும்போதே ஓர் இனம் புரியாத பரபரப்பு அவளுக்குள் பரவியது.

(தொடரும்)

---

**கடைகளில் விற்கும் தூத்பேடாவை நாமே வீட்டில் தயாரிக்கலாமே!**

தேவையான பொருட்கள்:

பால் — 1 லிட்டர்,
சர்க்கரை — 2 கப்,
ஏலக்காய் — 4,
நெய் — 4 டீஸ்பூன்,

பாலை அடி கனமான பாத்திரத்தில் ஊற்றி அடுப்பில் வைத்துக் கிளறிக் கொண்டே இருங்கள். பால், கெட்டியாகச் சேறு போல் ஆனவுடன் சர்க்கரையைக் கொட்டி, கைவிடாமல் கிளறுங்கள். பாத்திரத்தில் ஒட்டாமல், பரபரவென்று பூத்து வரும்போது அடுப்பை அணைத்துவிடுங்கள். ஏலக்காய்ப் பொடி, நெய், தேவையானால் எசென்ஸ் இவை சேர்த்து ஒரு தடவை கிளறி அப்படியே வைத்துவிட்டு, நீங்கள் வேறு வேலை கவனிக்கச் செல்லலாம்.

15 நிமிடங்கள் கழித்து வந்து அதனை ஒரு தாம்பாளத்தில் கொட்டி, சேர்த்துப் பிசைய வேண்டும். (அதற்குள் சூடு ஆறியிருக்கும்.) பின்பு அதனை சிறு சிறு உருண்டைகளாக உருட்டி, உள்ளங்கையில் வைத்து நடுவில் லேசாக அமுக்கி விடுங்கள்.

தூத்பேடா ரெடி.

உங்கள் கணவர், எந்தக்கடையில்வாங்கினாய்? என்று கேட்பார். வீட்டில் செய்தது என்றால் மூக்கில் விரல் வைப்பார்.

— மீனா ரமணி

# 40 வயதுக்குப் பிறகே வாழ்க்கையை நீங்கள் முழுமையாக அனுபவிக்கத் தொடங்குகிறீர்கள். அந்த இனிய வாழ்க்கை, நீரிழிவு, உயர் இரத்த அழுத்தம், இருதய நோய் மற்றும் இதர நோய்களால் பாதிக்கப்படலாமா?

குடும்ப மேம்பாட்டுக்காக நீங்கள் முழு ஆற்றலையும் கடின உழைப்பையும் உரமாக்குகிறீர்கள். உங்கள் இலட்சியம் நிறைவேறும்போது நீங்கள் ஏறத்தாழ நாற்பது வயதை எட்டிப் பிடித்து விடுகிறீர்கள். சரி, உழைத்து உருவாக்கிய வாழ்க்கையை நீங்கள் முழுமையாக அனுபவிக்க வேண்டாமா?

நிச்சயமாக அனுபவிக்க வேண்டும். ஆனால், துரதிஷ்டவசமாக அந்த வயதில் தான் நீங்கள், நீரிழிவு, உயர் இரத்த அழுத்தம், இருதய நோய் மற்றும் பல நோய் நொடிகளுக்கு ஆளாகி, வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க முடியாமல் போய்விடுகிறது.

இந்த நோய்களுக்கு ஆளானால் என்ன செய்கிறீர்கள்? ஆங்கில மருத்துவரைக் கலந்து ஆலோசித்து தொடர்ந்து அல்லோபதி மருந்துகளை உட்கொண்டு, நிவாரணமும் பெறுகின்றீர்கள். ஆனாலும், தொடர்ந்து ஆங்கில மருந்துகளை உட்கொள்ளும்போது கூடவே சில பின் விளைவுகளும் ஏற்பட்டு உங்கள் உடல் சோர்ந்து போகலாம்.

இந்த பின் விளைவுகளில் இருந்து உங்களை விடுவிப்பதோடு, நோய் எதிர்ப்பு சக்தியாகவும் செயல்பட்டு உடம்பை வாழ்நாள் முழுதும் திடகாத்திரமாக வைத்துக் கொள்ளக்கூடிய ஊட்டச்சத்து மிக்க 'டானிக்' இப்போது உங்களுக்கு தேவை. அதுவே கிரௌன் காயகல்பம்,

கிரௌன் காயகல்பம் ஒரு டாக்டரின் நீண்டகால ஆராய்ச்சியின் விளைவால் உருவாக்கப்பட்டது.

## "கூடாது! நிச்சயமாகக் கூடாது" கிரௌன் காயகல்பம்




கிரௌன் காயகல்பத்தை தேர்ந்து எடுங்கள். காலமெல்லாம் ஆரோக்கியத்துடன் செயல்படுங்கள்.

இயற்கை தரும் மூலிகைகளிலிருந்து கற்ப மூலிகைகளைத் தேர்ந்தெடுத்து அதனுடன் தங்கம், வெள்ளி, இரும்பு முதலிய நவலோக பஸ்பங்களை தேவையான அளவில் கலந்து பிரத்யேக முறையில் வீரியப்படுத்தப்பட்டு கிரௌன் காயகல்பம் உருவாக்கப்படுவதால், இதர தயாரிப்புகளைக் காட்டிலும் அதிக திறனுடன் கிரௌன் காயகல்பம் செயல்படுகிறது. மேலும், நோய் எதிர்ப்பு சக்தியாக செயல்படும் பல அரிய மூலிகைகள் கிரௌன் காயகல்பத்தில் சேர்க்கப்படுவதால், சிறுவயதிலிருந்தே தினசரி 'டானிக்' ஆக கிரௌன் காயகல்பத்தை உட்கொண்டு வருவது நல்லது. சுருங்கக் கூறின், குடும்பத்தில் ஆண், பெண், குழந்தைகள்...எல்லா வயதினருக்கும் ஏற்றதொரு சிறந்த ஊட்டச் சத்துமிக்க 'டானிக்' கிரௌன் காயகல்பம்.

செயற்கை ஹார்மோன்கள், போதைப் பொருட்கள் மற்றும் மிருகக் கொழுப்புகள் சிறிதளவும் சேர்க்கப்படாமல் சுத்தமான முறையில் தயாரிக்கப்படும் ஒரே மூலிகை 'டானிக்' கிரௌன் காயகல்பம், பத்தியம் எதுவும் இல்லை!



**கிரௌன் காயகல்பம்**

தயாரிப்பாளர்கள்:

**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்**

55, ஹாரிஸ் சாலை, சென்னை-2.
Ph: 561974/562256

எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கும்.




ஏனோ தெரியவில்லை இன்று காலையிலிருந்தே என் தோழி சந்தியாவைப் பார்க்க வேண்டும்போல ஒரு உந்துதல் எனக்கு ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. காலை வேலைகளை முடித்துக் கணவரும் ஆபீஸ் புறப்பட்டுச் சென்று, நான் சாப்பிட உட்காருகிற இந்த நேரம்வரை சந்தியாவே என் நினைவில் வியாபித்துக் கிடந்தாள்.

நேரம் ஆக ஆக அவளைப் பற்றின கவலையில் என்னுள் ஒரு பரபரப்பு ஏற்படவும், இனம் புரியாத ஒரு பீதியில் மனம் கலவரப்பட, இதோ இப்போது இந்தத் தருணத்தில் ஓடிச் சென்று சந்தியாவை முழுசாய், உருவமாய், சௌக்கியமாய் காண மனம் துடித்தது. இனி ஒரு விநாடிகூடத் தாமதிக்காமல் உடனே புறப்பட்டுச் சென்று சந்தியாவைப் பார்க்கச் சொல்லி உள்மனம் எச்சரிப்பதை புறக்கணிக்காது, சாப்பிடக் கூடப் பிடிக்காமல் மாற்றுப் புடைவையை அணிந்து கொண்டு, கைப்பையில் நிறைய ரூபாயையும் திணித்துக் கொண்டு ஒரு ஆட்டோவைப் பிடித்து, அவள் வீடு நோக்கி விரைந்தேன். திடீரென்று இன்றைக்கென்று இப்படியொரு வேண்டாத எண்ணம், ஒரு உணர்வு ஏற்படுகிறானேன் என்று வழியெல்லாம் குழம்பியவாறு சென்றாலும், அதற்குக் காரணமாய் அவளுடைய புக்ககத்தினர் தான் இருப்பார்கள் என்ற எண்ணம் தோன்றியது.

சந்தியாவைக் குறித்த என் கவலையும், கற்பனையும் அர்த்தமற்றதோ என்று எண்ணும்படி, அவள் வீட்டை அடைந்தபோது வாசற் கதவில் பூட்டு தொங்கிக் கொண்டிருந்தது. பக்கத்து வீட்டுக்காரியை விசாரித்ததில் அவள் தனக்கு எதுவும் தெரியாது எனக் கைவிரித்துவிட்டாள். ஆனாலும் நான் என் உள்ளுணர்வு தந்த எச்சரிக்கையை அலட்சியமாக ஒதுக்கிவிடாமல் வாசல் வராண்டாவின் மூடியிருந்த ஜன்னல் கதவு வழியாக உள்ளே கூர்ந்து கவனித்தேன். லேசாக ஏதோ சப்தம் கேட்கவும் 'திக்'கெனத் தூக்கி வாரிப் போட, அவசர அவசரமாக வீட்டைச் சுற்றிக் கொண்டு புழக்கடைப் பக்கம் வந்து ஜாஃப்ரி கதவைத் தட்டக் கையை ஓங்குகையில் அது உள்ளிருந்து தாழிடப் படாததால் திறந்து கொண்டது. 'சடா'ரென்று உள்ளே பாய்ந்தேன். மண்ணெண்ணெய் நெடி நாசியைத் துளைத்துத் திணறவைத்தது. வலதுபுறம் திரும்பி சமையலறைக்குள் ஓடினேன்.

.... தீக்குச்சியைக் கிழித்து, எண்ணெய் மயமாய் இருந்த தன் உடையைப் பற்ற வைத்துக் கொள்ளப் பார்த்த சந்தியாவின் மீது பாய்ந்தேன். கையால் தீயை அடித்து அணைத்து அந்த முயற்சியில், உள்ளங்கை சுட்டுவிட 'சந்தியா....' என்று குரலை உயர்த்தி கத்திவிட்டேன்.

ஒருவிநாடி தாமதித்திருந்தால் இந்நேரம் இங்கு என்ன நிகழ்ந்துவிட்டிருக்கும் என்பதை எண்ணிப் பார்க்கையில் மனம் பதறியது. சந்தியாவின்மீது தாங்க முடியாத கோபம் ஏற்பட்டது.

"நான் ஒருத்தி கல்லு மாதிரி இருக்க என்னை மறந்துவிட்டு நீயாக இப்படியொரு முடிவை ஏன்டித் தேடிக்கிட்டே....?" என்று ஹாலுக்கு இழுத்துக் கொண்டு வந்து கத்தி

னேன்.

'திக்' பிரமை பிடித்தவள்போல நின்று கொண்டிருந்த அவளை உலுக்கினேன். "உன்னைப் போல ஒரு பொறுமைசாலியை, சகிப்புத்தன்மை கொண்டவளை பார்க்கவே முடியாது என்று உன் அம்மா உன்னைப் பற்றிப் பீற்றிக் கொள்வாளே. அந்தப் பெருமையெல்லாம் எங்கே போச்சு?"

சந்தியா ஒரு பயங்கரச் சொப்பனம் கண்டு விழித்தவள் மாதிரி குழம்பிக் குழறித் தடுமாறினாள். நிலைமை புரிந்தபோதோ அடக்கமாட்டாது அழுது தீர்த்தாள்.

"நிம்மி! உனக்குத் தெரியும். எனக்கு வரன் தேட என் பெற்றோர் பட்ட கஷ்டம் எவ்வளவு என்று — வெளி அழகோ, பகட்டான தோற்றமோ, நாகரிகம் தெரிந்த மாதிரி வேஷம் போடக் கூடத் தெரியாத ஒரு கறுப்பி, படிக்காத வேலைக்கும் போகாத பெண்ணுக்கு இந்த லைஃப் பார்ட்னர் கிடைப்பதற்குள் எத்தனைக் காலம் விரயமாயிற்று?

'இந்த வரன் எனக்கு அமையறதுக்கு முன்ன, என்னைப் பெத்தவங்களுக்கும், கூடப் பிறந்தவங்களுக்கும் நான் ஒரு பாரமாய் இடைஞ்சலாய் இருந்ததை அவர்கள் அடிக்கடி சுட்டிக்காட்டிக் கொண்டிருந்த அவலம் எனக்கு மட்டுமே தெரியும். அதனால் தான் ஒரு குருடோ, செவிடோ, முடமோ அல்லது இரண்டாந்தாரமோ எதுவாயிருந்தாலும் ஏற்கச் சித்தமாயிருந்தேன். ஆனால் நல்லவேளையாக அல்லது கெட்ட வேளையோ இந்த வரன் தகைந்து கடனை உடனை வாங்கி அவர்கள் கேட்ட தொகைக்கு அவர்கள் விரும்பியபடி சிறப்பாகத் திருமணத்தை நடத்திக் கொடுத்துவிட்டார் அப்பா.

முதன்முதல பிறந்தகத்தைவிட்டுப் புகுந்த வீடு செல்லும்போது அம்மா கூறிய அறிவுரையை நான் இன்றும் மறக்கவில்லை, நிர்மலா.

"இன்றோடு இந்தக் குடும்பத்துக்கும் உனக்கும் இடையிலிருந்த எல்லாவிதமான சம்பந்தமும் முடிந்துவிட்டதாக நினைத்துக் கொள் சந்தியா. இனி புக்ககம்தான் உன் வீடு. மாமியார்தான் உன்னுடைய தாயார். உன் கணவருடைய சகோதரிகளை, உன்னுடைய சகோதரி போல எண்ணிக் கொள். அதுபோல நினைக்கப் பழக்கிக் கொண்டு விட்டால் அவர்கள் தவறிப் போய் உன்னைச் சுடு சொற்களால் திட்டிவிட்டாலும் குற்றம் குறை கண்டுபிடித்தாலும் அது உன்னை அதிகம் பாதிக்காமல் போகும்.

"உனக்குப் புதிதாக நான் எதுவும் சொல்லித் தரவேண்டியதில்லை. இங்கே பிறந்தகத்தில் நல்ல மகளாய் பெயரெடுத்துவிட்டாய். சமையல் வேலையிலிருந்து, வீட்டுக் காரியங்கள் எல்லாவற்றிலுமே நல்ல பெயர் வாங்கியிருக்கே. இதே மாதிரி நல்ல பெயரை புக்ககத்திலும் நீ எடுக்கணும். அதற்கான பயிற்சியை இங்கே நான் அளித்து அந்தப் பரீட்சையில் நீ வெற்றி பெற்றும் விட்டாய்! உன்னைப் போன்ற பொறுமைசாலியை, சகிப்புத்தன்மை கொண்டவளை பாக்கறது ரொம்ப அபூர்வம். அப்படி, உன் பொறுமைக்கும் ஒரு சோதனை வந்து அந்தப் பரீட்சையில் வெற்றி பெற முடியாமல் போனால்... உன் தங்கைகளுக்குக் கல்யாணம் ஆக வேண்டும் என்பதை நினைச்சுக்கோ. உன் கல்யாணத்திற்காக வாங்கின கடன்களை அடைக்க வேண்டியிருக்கிற எங்களுடைய கஷ்டத்தை நினைவு படுத்திக்கோ. அப்போ அடைக்கலம் தேடி ஆறுதல் தேடி அடிக்கடி இங்கே ஓடி வரணும்னு தோணுது. நான் இப்படிச் சொல்வது உனக்கு வருத்தமாயிருக்கலாம் சந்தியா. ஆனால் நான் உள்ளதைத்தான் சொல்கிறேன். என் நிலைமை அப்படி..." என்று கையைப் பிடிச்சுக்கிட்டு அழுததை என்னால் மறக்க முடியலே"

அவளைத் தேற்றி உடை மாற்றி ஆசுவாசப்படுத்தி, ஹாலில் உட்கார வைத்தேன். அவளுக்கும் எனக்குமாக காப்பி கலந்து கொண்டிருந்தபோது புக்ககத்தில் அவள் பட்ட பாடெல்லாம் நினைவுக்கு வந்தது.

சரியாக ஒன்றரை ஆண்டு காலம்தான் புகுந்த வீட்டில் சந்தோஷமாக வாழ்ந்தாள் சந்தியா. குழந்தை உண்டாகவில்லை என்ற முணுமுணுப்பு எழுந்த அதே சமயத்தில் தான் சந்தியாவின் கணவனுக்கு ஆபீஸில் ஒரு அழகான படித்து வேலையிலிருக்கும் பணக்காரப் பெண்ணின் நட்பு தொடங்கியது. அந்த ரோஜாவுக்கு முன் இந்தச் சாமந்திக்கு மதிப்பு இல்லாது போயிற்று. சிவசங்கரும் அந்தப் பெண்ணை மணந்து கொள்ள விரும்பினான். ஆனால் சந்தியாவிடமிருந்து மீட்சி பெறுவது எப்படி?

சட்ட ரீதியாக முடிவெடுக்கலாம் என்றால்



பல பிரச்னைகள் கிளம்பும் என்பதால், சந்தியாவைப் பலவிதங்களிலும் கொடுமைப் படுத்திப் பிறந்தகம் அனுப்பப் பார்த்தனர் அவளுடையபுக்ககத்தினர். கொடுமைதாங்க முடியாது போகவும் மாமியார் காலில் விழுந்து மன்றாடினுள் சந்தியா.

'தயவு செய்து என்னை வெளியே போகச் சொல்லி வற்புறுத்தாதீர்கள் அம்மா. அவர் யாரை வேண்டுமானுலும் விரும்பிக் கல்யாணம் செய்து கொள்ளட்டும். என்னை இந்த வீட்டு வேலைக்காரியா நினைச்சுக்குங்க. ஒரு மூலையில் ஒதுங்கிக் கொள்ள கொஞ்சம் இடம் கிடைத்தால் போதும். எப்படியோ என் காலத்தை ஓட்டி விடுவேன். மறுபடியும் என் பெற்றோருக்கு நான் ஒரு பிரச்னையாக இருக்க விரும்பலே'' என்று கதறி அழுதாள்.

இதயமே இல்லாத அவள் மாமியாரோ அவளுடைய புலம்பலைப் பொருட்படுத்தவே யில்லை.

''உன்னை வீட்டோடு வெச்சுண்டு என் பிள்ளைக்கு இன்னொரு கல்யாணம் பண்ணி ஞல் ஊர் உலகம்தான் சும்மாயிருக்குமா அல்லது உன் பொல்லாத மாமன்தான் எங் களைச் சும்மா விடுவாளு? 'உங்க மேலே கேஸ் போடறேன் பார், உன் பிள்ளையை ஜெயிலுக்கு அனுப்பறேன் பார்' என்று வீட்டு வாசலில் வந்து கத்திக் கூப்பாடு போட்டு ஊரைக் கூட்ட மாட்டானு? நீ எங்கே போவாயோ, என்ன பண்ணு வாயோ அதைப் பற்றி எங்களுக்கென்ன கவலை? மரியாதையாக ஒரு வாரக் கெடு வுக்குள் இந்த வீட்டை விட்டு வெளியேறி யாகிவிட வேண்டும். உன் மீது கெரஸினை ஊற்றிக் கொளுத்தி நான் ஜெயிலுக்குப் போய், என் பிள்ளைக்கும் மரண தண்டனை



கிடைக்கிற ஆபத்தான காரியத்தில் எல்லாம் நாங்கள் இறங்கமாட்டோம். நீயே உன்னை மாய்த்துக் கொண்டால் அந்தப் பாவத்துக் கும் நாங்கள் காரணமல்ல, தெரிந்து கொள்.''

— சந்தியா தேடிக் கொள்ள வேண்டிய முடிவை மாமியார்க்காரியே கோடி காட்டி விட்டாள். அப்புறம் என்ன? அந்தக் குடும் பமே அருகிலிருந்த ஒரு ஊருக்கு உறவுக்கார ரின் வீட்டு விசேஷத்திற்காகப் போயிருந்த போது இங்கே சந்தியா சமைக்கும்போது ஏற்பட்ட விபத்து மாதிரி ஒரு ஸீனைக் கிரியேட் செய்து, தன்னை மாய்த்துக் கொள் ளப் பார்த்திருக்கிருள்.

'இனி என்னுடைய எதிர்காலம்?''

— சந்தியாவின் கண்களில் தெரிந்த கேள்விக்கு ஏற்ற விடையை நான் அளித் தேன்.

'இனி சந்தியாவுக்கு எதற்கு எதிர்காலம்? அவள்தான் இறந்துவிட்டாளே....'' — புரி யாமல் அவள் என்னைப் பார்த்தாள்.

''உனக்குக் கல்யாணம் ஆன போதே உன் பிறந்தகத்தைப் பொறுத்தவரை நீ இறந்துவிட்டதாகக் கருதப்பட்டுவிட்டாய். இப்போது புகுந்த வீட்டாருக்கும் நீ வேண் டாதவளாகிவிட்டாய். அதனுல் வேறு வழி எதுவும் புலப்படாதவளாய் உன்னையே மாய்த்துக் கொள்கிற ஒரு முடிவைத் தேர்ந் தெடுத்தாய். அதுவும் என்னுடைய தலையீட் டால் நிறைவேறவில்லை, அதனுலென்ன? கட்டிக் கொண்டிருக்கிற இந்தப் புடைவை யோடு வீட்டை விட்டு வெளியேறி விடு.

''அதோடு, இந்தக் குடும்பத்துடன் உனக் கிருந்த சம்பந்தத்தை, பாச பந்தங்களையும் துண்டித்துக் கொண்டு மனத்தால், எண்ணத் தால் மறந்துவிடு. கொஞ்ச காலத்திற்கு இந்த வட்டாரத்தில் தலைகாட்டாமல் இருந்தா யானுல் நீ இறந்தே போய்விட்டதாக உலகம் முடிவு பண்ணிவிடும். சந்தியா இன்றோடு, உன் கஷ்ட காலம் நீங்கி விடிவு பிறந்திருக் குன்னு நினைச்சுக்கோ. நீ இனி சந்தியா அல்ல, உதயா என்பதை நினைவில் வைத் துக் கொள். அதுவும் வெறும் உதயா அல்ல, ஸ்ரீமதி உதயா ராம்குமார்....''

''நிர்மலா!'' — பதறித் துடித்துப் பின் வாங்கிஞள் சந்தியா. அவள் பார்வையில் உஷ்ணம் தெரிந்தது.

நான் அயர்ந்துவிடாமல் தொடர்ந்தேன்:

''நீ வேண்டுமானுல் பத்தினி தர்மத் துக்கு இழுக்கு என்று அவன் நினைவை உன் மனத்திலிருந்தும் அறவே அகற்றி விட்டிருப் பாய். ஆனுல் ராம்குமார் உன்னை மறக்கவே யில்லை. உனக்காக அவன் வீட்டு வாசல், இதய வாசல் எப்போதும் திறந்தேயிருக் கிறது.''

''நிம்மீ! போதும் நிறுத்திக் கொள்!'' என்று கடுமையாகக் கூறிய சந்தியாவின் கரங்கள் லேசாக நடுங்குவது தெரிந்தது.

''ஏன் இதில் என்ன தவறிருக்கிறது

சந்தியா? நீ ஒருத்தருக்கு மகளாக, மனைவியாக இருக்கும்வரைதான் அந்தக் குடும்பம், சாஸ்திரம், சம்பிரதாயம் அல்லது சொளைடி விதித்திருக்கும் நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டாக வேண்டும். உறவால் ஏற்பட்ட இந்த வேலி ஒரு பெண்ணுக்கு சிறை மாதிரி பட்டாலும், ஒரு குறிப்பிட்ட காலம்வரை அதற்குள் அடைந்தும் அடங்கியும் கிடப்பதுதான் அவளுக்குப் பாதுகாப்பு; மதிப்பும் கௌரவமும் ஆகும்.

"இந்த வேலியை விட்டு வெளியே வந்து விட்ட ஒரு வெறும் பெண்ணை சமுதாயம் மதிக்காது. கேவலமாகத்தான் நடத்தும். உன் விஷயத்திலோ பிறந்த வீட்டாராலும் புகுந்த வீட்டாராலும் நீ பலவந்தமாக வெளியே தள்ளப்பட்டிருக்கிறாய். இனிமேலிருந்து நீ யாருக்கும் மகளும் அல்ல, மனைவியுமல்ல. யூ ஆர் ஜஸ்ட் எ உமன்.

"சந்தியா என்ற பெயரைத் தவிர வேறு எந்த சொந்தமோ, சொத்தோ, சுகமோ உனக்குக் கிடையாது. இப்படி எல்லாராலும் துறக்கப்பட்டுவிட்ட ஒரு பெண்ணுக்கு ஒரு அடைக்கலம், மரக்கலம் கிடைத்திருக்கிறது என்றால் அதைப் பற்றிக் கொண்டு கரையேறுவதுதான் அறிவாளித்தனம் ஆகும்.

"இத்தனைக்குப் பிறகும் உன் மனம் ஒரு நிலைப்படாமல் வழிவழியாக வந்த அந்தப் பழம் பெருமைதான் உடன்பாடு என்றால் நான் இன்னும் புரியும்படியாகச் சொல்கிறேன்.

"ஒரு நல்ல பெண்ணுக்குரிய லட்சணம் அனைத்தும் பொருந்தி பண்பாடு வழுவாது வாழ்ந்த சந்தியாவின் மறைவுக்கு, மரணத்துக்குக் காரணம் நீ அல்ல; மாறாக உன் பிறந்தகத்தார், புகுந்த வீட்டார், இந்த சமூகம் — இவர்கள்தான் குற்றவாளிகள். இவர்களில் யாரேனும் ஒருவர் உனக்கு அடைக்கலம் தந்து, உன் ஸ்தானத்துக்குரிய மதிப்பைத் தந்திருந்தால் நீ சிவசங்கரையே கணவனாய் நினைத்துக் கொண்டு காலமெல்லாம் வாழ்ந்திருப்பாய். அப்படி வாழவொட்டாமல் செய்த பாவம், அவர்களையேச் சாரும். இப்போது சந்தியா இறந்துவிட்டதால், உதயா முறை தவறி நடந்தாள் என்ற பேச்சுக்கே இடம் கிடையாது. புரிகிறதா?"

"நிம்மி!" என்று என்னை அணைத்தவாறு விசும்பி விசும்பி அழுதாள், உதயா!

நான் அவளுக்கு ஆறுதல் சொல்லித் தொடர்ந்தேன்.

"அப்போதே ராம்குமாருக்கு உன்னை மணமுடித்து வைத்திருந்தால் இவ்வளவு தூரம் விஷயம் வளர்ந்திருக்குமா அல்லது இப்படியொரு திருப்பம்தான் ஏற்பட்டிருக்குமா? அவன் வேற்று ஜாதிக்காரன் என்பதால் பெற்றோருடைய ஒப்புதல் கிடைக்காது என்று நீ விஷயத்தை வெளிப்படுத்தாமலே இருந்துவிட்டாய். இதில் ஒரு வேடிக்கையைப் பார்த்தாயா உதயா? பெண்கள் சுதந்திரம், சம உரிமை என்பதைப் பற்றி எல்லாம் நாம் வாய் கிழியப் பேசுகிறோம், தண்டோரா போட்டுப் பெரிசுபடுத்துகிறோம். ஆனால் ஆரம்பத்திலேயே பெற்றோர் வீட்டிலேயே நம்முடைய உரிமை பறிக்கப்படுவதைப் பற்றியோ, நம்மைச் சுதந்திரமாகச் செயல்பட விடாமல் விலங்கிடுவதைப் பற்றியோ யாரும் எதுவும் சொல்வதே இல்லை, பார்.

"ஒரு பெண்ணுக்குப் பிடித்த வரனைத் தேர்ந்தெடுப்பதில் தடை.. சில வீடுகளில் அவளுக்குப் பிடித்த தோழியரைத் தேர்ந்தெடுப்பது கூடத் தடுக்கப்படுகிறது. எவ்வளவு விந்தையான உண்மை."

உதயா மௌனமாகத் தன்னுடைய உடைமைகளை எடுத்து வைக்க ஆரம்பித்தாள்.

# தயிர் அவல்



தேங்காய் மூடி — 1.
தயிர் — 3 ஆழாக்கு
அவல் — 2 ஆழாக்கு
உப்பு — சிறிது.
கறிவேப்பிலை. — சிறிது
இஞ்சி — சிறிது.
பச்சை மிளகாய் — 6.
கொத்துமல்லித் தழை — சிறிதளவு.

செய்முறை:

அவலை நன்றாக அலம்பி, வடிகட்டி, 5 நிமிடத்திற்குப் பின் தயிரை அவலுடன் கலந்து, கடுகு, உளுத்தம்பருப்பு, இஞ்சி, துருவிய தேங்காய், பச்சை மிளகாய் இவற்றுடன் கறிவேப்பிலையைத் தாளித்துப் போடவும். கொத்துமல்லித் தழையை நன்றாக நறுக்கிப் போட்டுச் சாப்பிட்டால் மிகவும் ருசியாக இருக்கும்.

— மஞ்சுளா கிரி



வரைபடம் — 1 துணியின் நூலில் தையலின் அமைப்பையும் காண்பிக்கிறது. லே — அவுட் வரைபடத்தில் லஞ்ச் மாட்டிற்கான பாதி வேலைப்பாட்டைக் காணலாம். நடுப்பாகத்தில் காணும் உடைந்த கோடுகள் பாஸ்டிங் தையலோடு சேரவேண்டும். அதில் கொடுக்கப்பட்டிருக்கும் எண்கள் துணியின் நூலையும், கறுமையாயிருக்கும் பாகம் வரைபடம் 1 இன் ஒரு பாகத்தையும் காண்பிக்கிறது.

### டிரிங்க் மாட்

முதலில் சிறு காலியான அம்புக்குறிகளை 12 நூல் கீழாகவும், 9 நூல் பாஸ்டிங் தையலின் வலது பக்கமாகவும் வரைபடம் 1 இல் கொடுத்துள்ளபடி ஆரம்பிக்கவும். இதே திசையை நான்கு பக்கமும் (Four sided Stitch Filling) தையிலில் வைத்துக் கொண்டு, மற்ற மூன்று பாகத்தை முடிக்கவும். கடைசியில், துணியின் மூலைகளை வேலைப்பாட்டின் வெளியே 2.5 செ. மீ. அளவில் வெட்டி, சரி செய்து, திருப்பி, ஹெம் செய்து ஓரங்களை தைக்கவும். இதேபோல் மற்ற மாட்களை முடிக்கவும்.

### லஞ்ச் மாட்

துணியின் ஒரு நீளமான பாகத்தை 0348 நூல் கொண்டு வேலைப்பாட்டை நாலு பக்கமான தையலில் (Four sided Stitch) 57 நூல் கொண்டு க்ராஸ் பாஸ்டிங் தையலின் (Cross Basting Stitch) இடது பக்கத்தை முடிக்கவும். இடது பக்கத்தின் பாதியை வரைபடம் — 1 மற்றும் லே — அவுட் வரைபடம் கொண்டு தையலை ஆரம்பிக்கவும். துணியை திருப்பி மீதமுள்ள வேலைப்பாட்டை இதே போல் முடிக்கவும். வேலைப்பாட்டை முடிக்க, ஒரு வரிசையில் நாலு பக்கமான தையலை (Four sided Stitch) நாலு பக்கமும், 15 நூல் கொண்டு முக்கியமான வேலைப்பாட்டையும் முடிக்கவும். கடைசியில் துணியை வேலைப்பாட்டின் வெளியே 2.5 செ. மீ. அளவில் கத்தரித்து, திருப்பி, ஹெம் செய்து, மூலைகளை முடித்து வைக்கவும். மற்ற மாட்களை இதே போல் செய்யவும்.

### வரைபடம் — 2 (ஸாட்டின் தையல்)

இத்தையலை இடது பக்கத்திலிருந்து வலது பக்கமாக அல்லது வலது பக்கத்திலிருந்து இடது பக்கமாக செய்யலாம். நூலின் அளவு வேலைப்பாட்டின் அளவுக்கேற்றாற்போல் வேறுபடலாம்.

### வரைபடம் — 3 (நாலு பக்கத் தையலும், நிரப்புவதும்) (Four sided Stitch and Filling)

இத்தையலை வலது பக்கத்திலிருந்து இடது பக்கமாக செய்யவும். இது பார்டர் அல்லது நிரப்புவதற்காக செய்யலாம்.

படம் — 1: நூலை அம்புக்குறியிலிருந்து வெளியே எடுக்கவும். ஊசியை 'A' இல் நுழைத்து (3 நூல் மேலே) 'B' இல் வெளியே எடுக்கவும். (3 நூல் கீழேயும், 3 நூல் இடது பக்கமும்)

படம் — 2: ஊசியை அம்புக்குறியில் நுழைத்து, 'C' யில் வெளியே எடுக்கவும். (3 நூல் மேலேயும், 3 நூல் இடது பக்கமும்)

படம் — 3: மறுபடியும் 'A' யில் நுழைத்து 'B' வழியாக வெளியே எடுக்கவும். இதே









போல் தொடர்ந்து கடைசி வரைக்கும் செய்யவும். அல்லது கடைசியில் ஸ்ட்ரெய்ட் தையல் (Straight Stitch) கொண்டு 'B' யிலிருந்து 'C' க்கு ஒரு நாலு பக்கத் தையல் (Four sided Stit ) போடவும்.

படம் — 4: நிரப்புவதற்காக உபயோகித்தால், துணியை வட்டமாகத் திருப்பி மற்ற வரிசைகளை மேலே கூறியது போல் செய்யவும். எல்லாத் தையல்களையும் சரியாக இழுத்து போடவும்.

**பாஸ்டிங் தையல் (Basting Stitch)**

மேல் தையல் அளவுடன் இருக்க ஊசியைக் கொண்டு துணியின் மேல்/மற்றும் அடிப்பாகத்தில் செலுத்தவும். கீழ் தையலும் அளவுடன் இருக்க வேண்டும். ஆனால் அவை மேல் தையலைக் காட்டிலும் சிறிதாக அல்லது பாதியாக இருக்க வேண்டும்.

**க்ராஸ் பாஸ்டிங்க் தையல் (Cross Basting Stitch)**

இரண்டு பாஸ்டிங்க் தையல் ஒன்றோடு ஒன்று ரைட் ஆங்கிலில் க்ராஸ் செய்வது தான் இத்தையல்.

**நேர்த்தையல் (Straight Stitch)**

ஒற்றைக் காலியான தையலைக் குறிக்கும். இதை நேராக அல்லது எவ்விதமாகவும், செய்யலாம். சில சமயத்தில் தையல்கள் வேறுபடும். இத்தையல்கள் நீளமாகவும் இருக்கக் கூடாது. அதே சமயத்தில் தளர்ந்தும் இருக்கக் கூடாது. இத்தையலை மட்டமாக நெசவு செய்த துணியின் (Even weave Fabric) மேலும் போடலாம்.

நன்றி: மதுரா கோட்ஸ்
ஆங்கர் டிசைன் ஸ்டுடியோ

---

'சூப்'புகள் தயாரிக்கையில் அவற்றில் இரண்டு ஸ்பூன் பார்லி வாட்டரைக் கலந்து அருந்தினால் உடல் ஆரோக்கியத்திற்கு மிகவும் நல்லது.

— அகிலா கோபால்

---

உங்கள் உடையில் சூயிங்கம் ஒட்டிக் கொண்டு விட்டதா?

அந்த உடையை ஒரு பிளாஸ்டிக் கவரில் போட்டு ஃப்ரிட்ஜில் வைத்து விடுங்கள். இரண்டு மணி நேரம் கழித்து அந்த உடையிலிருக்கும் சூயிங்கம் சுலபமாக வந்து விடும்.

— மிஸ். மினி



# உங்களால்

நவராத்திரியில்தான் எத்தனை வேலைகள்? ஒன்பது படிகளில் அழகாக பொம்மைகளை அடுக்கிக் கலசம் வைத்து, அலங்காரம் செய்து, வண்ண வண்ணக் கோலமிட்டு, பூஜை செய்து, அருகிலுள்ளவர்களை மாலையில் அழைத்து வெற்றிலை, பாக்கு கொடுத்து...

மாறி வரும் வேகமான இந்தக் காலத்தில் இடப் பிரச்னை, நேரப் பிரச்னை, வேலைக்குப் போகும் பெண்கள் பிரச்னை என்று வரும் போது நவராத்திரி சாத்தியமா?

இதுகுறித்து பல நிலைகளில் உள்ள பெண்கள் உரையாடுகின்றனர்.

திருமதி அலமேலு: குடும்பத் தலைவி (65 வயது)
திருமதி அம்புஜம்: குடும்பத் தலைவி (45 வயது)
திருமதி பானுமதி: பணிபுரிபவர் (38 வயது)
குமாரி ராதா நடராஜன்: கல்லூரி மாணவி (17 வயது)
குமாரி நிவேதிதா: ப்ளஸ்டூ மாணவி (15 வயது)
சுபாஷிணி: பள்ளி மாணவி (10 வயது)

அலமேலு: நவராத்திரி ஒன்பது நாட்களும் அம்பாளை வச்சு பூஜை பண்றது ரொம்ப நல்லது. குழந்தைகள் நல்லா இருக்கணும். உலகத்துக்குச் க்ஷேமம் வரணும்னு இந்த மாதிரி பூஜை, பண்டிகையெல்லாம் விடக் கூடாது.

அம்புஜம்: நவராத்திரியின் போது சுமங்கலிகளுக்கு, கன்னிப் பெண்களுக்கெல்லாம் வெற்றிலை, பாக்கு கொடுக்கறது நல்லது. பாக்கி நாட்கள்ல நாம எங்கே போய்த் தேடி இதெல்லாம் கொடுக்கப் போகிறோம். அதனால் இந்த ஒன்பது நாட்களாவது தர்றது நல்லது.

பானுமதி: நவராத்திரிங்கறதுல எவ்வளவோ விஷயம் இருக்கு. கலசம் வைக்கணும்பா. ஒன்பது படி கட்டணும்பா. இதெல்லாம் எங்களை மாதிரி வேலைக்குப் போறவங்களுக்கு எவ்வளவு தூரம் சாத்தியம்? ஸ்வாமி பக்தி இல்லேங்கலை. அதுக்காக ஒன்பது நாட்கள் லீவு போட முடியுமா? எல்லார் வீட்டிலேயும் பெரியவங்க இருப்பாங்கள்ா, கவனிச்சுக்க. கொலு வச்சிட்டு சுவாமியைப் பட்டினியும் போடக் கூடாது. தினம் ஒரு சுண்டல் பண்ணணும். யாருக்கு நேரம் இருக்கு?

அலமேலு: எப்படியோ அட்ஜஸ்ட் பண்ணிண்டு நாலு பேரையாவது கூப்பிட்டு வெற்றிலை பாக்கு தர்றதைக் குறைக்கக் கூடாது.

பானுமதி: இதுல இன்னொரு கஷ்டம். எல்லார் வீட்டிலேயுமா ஆம்பிளேங்க இதுக்கெல்லாம் அட்ஜஸ்ட் பண்ணிக்கிறாங்க? யாராவது நாலு பேர் வர்ற போதுதான் சாப்பாடு போடும்பாங்க. அதனால காலத்துக்கு ஏத்த மாதிரி ஏதாவது ஒரு குறிப்பிட்ட



அலமேலு



அம்புஜம்



பானுமதி



நாளிலே எல்லாரையும் கூப்பிட்டு வெற்றிலே, பாக்குத் தந்துடலாம்.

அம்புஜம்: நம்ப வீட்டுக் குழந்தைகளும் நாலு வீட்டுக்குப் போய்க் கூப்பிடுன்னு போகவே மாட்டேங்கறுங்க. 'போம்மா, ஒருத்தர் வீட்டுக்குள்ள சொல்லாம கொள்ளாம எப்படி நுழையறது?'ன்னு கேக்கறுங்க.

ராதா: என்னைப் பொறுத்த வரைக்கும் நவராத்திரியை நான் புரிஞ்சுக்கிட்டிருக்கிறது இப்படித்தான். நம்ப 'கைவேலை' களையெல்லாம் 'எக்ஸிபிட்' பண்ணலாம். எல்லார் வீட்டுக்கும் போய்க் கூப்பிடறதாலே, நாலு பேரோட பழகற தைரியம் வரும். 'ப்ளாட்'டுக்குள்ள கதவைச் சாத்திக்கிட்டு கிடக்காம அக்கம்பக்கத்தவரைத் தெரிஞ்சுக்கலாம்.

நிவேதா: இதுல நிறைய நெகடிவ் சைட் இருக்கு. வீட்டுல கொலு வச்சிட்டா தினமும் போய் கூப்பிடும்பாங்க. ஸ்கூல்லேர்ந்து வர லேட்டாயிடும். வந்துட்டு அவசரம் அவசரமாய்ப் போய்க் கூப்பிட்டால், இவ்வளவு லேட்டாக் கூப்பிட்டாம்பாங்க. என்னைக் கூப்பிட்டா, உன்னைக் கூப்பிடலைன்னு கமெண்ட் வேற. நான் நினைக்கறேன், நவராத்திரி லேடீஸ்கிட்ட நிறைய பாலிடிக்ஸை வளர்க்கிறதுன்னு.

சுபா: சில பேர் வீட்டுல டீ. வி. யில நல்ல ப்ரோக்ராம் நடக்கும் போது கூப்பிடப் போயிட்டா, இவ ஏண்டா வந்தாங்கறு மாதிரி, முகம் கொடுத்தே பேச மாட்டாங்க. தவிர, அந்த சமயத்துலதான் பரீட்சை நடக்கும். நிறைய ஹோம்வொர்க் இருக்கும். இதுல கூப்பிடுவோமா! படிப்போமா!

அலமேலு: ஏன் இப்ப டீ. வி. யில எட்டிலிருந்து எட்டரை வரை ஒளியும் ஒலியும்னு அதுக்காக கொஞ்சம் டயம் ஒதுக்கிட்டுத் தானே படிக்கிறீங்க. அதே மாதிரி கொலுவுக்குக் கூப்பிடறதுக்கு ஒரு மணி நேரம் டயம் வச்சிக்கணும்.

அம்புஜம்: நம்ப பெண்கள், மருமகள்களே வேலைக்குப் போற இந்த நேரத்துல ஏதோ நாலு பொம்மைகளை ஷோ கேஸ்ல வச்சிட்டு பூஜை பண்ணி வெற்றிலே, பாக்குக் கொடுத்தாலே ஜாஸ்தி.

பானுமதி: இப்ப நம்ப முக்கால்வாசிப் பேர் இருக்கறது பிளாட்டுல. எங்கே இடம் இருக்கு? ஒரு வருஷம் ஆரம்பிச்சுட்டா நிறுத்தக் கூடாது. பத்து நாட்கள் பத்துவிதச் சுண்டல்கள். அந்த மாச பட்ஜெட் ஒரேயடியா ஏறிடும்.

அலமேலு: அந்தக் காலத்துல ஏதோ ஒரு நம்பிக்கையிலதான் இதெல்லாம் வச்சிருந்தாங்க. வாசல்ல சாணி தெளிச்சுக் கோலம் போடறு மாதிரிதான் இந்த நம்பிக்கைகள் எல்லாம். நாங்கள் எங்கள் காலத்துப் பழக்க வழக்கங்களையெல்லாம் காப்பாத்தி எங்களுக்கு அடுத்த தலைமுறைக்குக் கொடுத்துட்டோம். என்னுடைய வருத்தம், காலப்



* ராதா நடராஜன்



* சுபாஷிணி



* நிவேதிதா

போக்குல கொஞ்சம் கொஞ்சமா இதெல்லாம் விட்டே போயிடப் போறதேன்னுதான்.

அம்புஜம்: ஆனா எங்க வரைக்கும் கூட அம்மா என்ன சொல்வாங்களோ மாமியார் என்ன சொல்வாங்களோன்னு செஞ்சிக்கிட்டுதான் இருக்கோம். இந்தக் காலக் குழந்தைகள் எல்லாத்துக்கும் ஒரு கேள்வி கேக்கறதுகள்.

நிவேதிதா: ஆமாம்! அதுல என்ன தப்பு! இப்ப வீட்டுக்கு வர்றவங்களுக்கு வெற்றிலே, பாக்கு தரணுங்கறீங்க. அதுல பழமோ கண்டலோ வச்சுக் கொடுத்தா சரி. அதுல ஏன் குட்டியா ஒரு கண்ணாடி, சீப்பு இதெல்லாம் தர்றாங்க. அதனாலே யாருக்கு என்ன பிரயோஜனம்? வீட்டுக்குப் போய் அதையெல்லாம் தூக்கிக்கூட எறிஞ்சுடுவாங்க. அதுக்குப் பதிலா ஏதாவது உபயோகமா 'கிஃப்ட்' தந்துடலாமே!

அலமேலு: இதுக்குப் பேரு 'கிஃப்ட்' தர்றதில்லே. சுமங்கலிங்களுக்கு மங்கலச் சின்னமா இதையெல்லாம் தர்றது நல்லது.

பானுமதி: அதுவே சில பேரு எவர்சில்வர் பாத்திரமா வச்சுத் தர்றாங்க. அதுல ஒருத்தரை விட ஒருத்தர் நல்லாத் தர்றாங்களான்னு போட்டி வேற.

அம்புஜம்: இதுவே 15 வருஷங்களுக்கு முன்னால கொலு வச்சிட்டு ஒரு இடத்துல இருக்கறவங்க பத்து நாட்களும் போய்க்கிட்டு வந்துக்கிட்டு சந்தோஷமா இருப்பாங்க. வெறும் நாள்ல ஒருத்தர் வீட்டுக்கு எங்கேயிருந்து போகப் போறோம். இந்த மாதிரி ஏதாவது வச்சாத்தானே போவோம்?

அலமேலு: அதோட இல்லே. ஒரு வீட்ல பெண்களுடைய கைவண்ணம், காரியம் செய்யற அழகு, பாடறது எல்லாத் திறமையும் நவராத்திரியில வெளிப்படும். பார்க்க வர்ற மற்ற பெண்களுக்கும் நாம ஏன் இந்த மாதிரி பண்ணக் கூடாதுன்னு தோணும்.

ராதா: அப்படிப் பார்த்தால் எங்கள் ஹேண்ட் வொர்க்கை எல்லாம் காலேஜ்லேயே எக்ஸிபிஷன் நடத்திடறோமே. கொலுவுலதான் காண்பிக்கணுமாக்கும்!

நிவேதிதா: சில பேர் வீட்ல பாடத்தெரியாதுன்னா விடமாட்டாங்க: பாடு, பாடுன்னு உயிரை வாங்கிடுவாங்க.

ராதா: இதுக்கும் பட்டுப் பாவாடைதான் கட்டிக்கணும்பாங்க. பட்டுல சூடிதார் போட்டுண்டா என்ன? இப்படியெல்லாம் கட்டுப்படுத்தும்போது என்னடா இதெல்லாம் பண்ண வேண்டியிருக்கேன்னு ஒரு அலுப்புதான் இருக்கே தவிர, சந்தோஷமே இல்லே.

அலமேலு: ஒவ்வொரு இடத்துக்குத் தகுந்தாப்பலதான் இருக்கணும். பட்டுத்தானேன்னு சூடிதார் போட்டுண்டு கல்யாணம் பண்ணிக்க முடியுமா?

முன்னல்லாம் வீட்டுல ஆம்பிளைக் குழந்தைகளும் படிகட்டி, குளம் கட்டி ஆசையா பண்ணும். இப்ப எதுவும் கட்ட வர்றதில்லே.

பானுமதி: எல்லாக் குழந்தைகளுக்கும் இப்ப படிப்பும் ஜாஸ்தி. நேரமும் இருக்கறதில்ல.

நிவேதிதா: எங்க ஜெனரேஷனுக்கு இதுல எல்லாம் ஆர்வம் நிறையத்தான் இருக்கு. ஆனா உங்க ஸ்டைல்லே பண்றதில்லே. அவ்வளவுதான். நாங்க வாழ்க்கையைப் பார்க்கிற விதம், வேலைகளைச் செய்யற விதம் வேற மாதிரி இருக்கறதால உங்களால ஏத்துக்க முடியலே. அதான் காரணம்.

தொகுப்பு: **கிரிஜா ராகவன்**

படங்கள்: **சுபா**

---

பெண்களுக்குவரும்"மாதாந்திர விலக்கு" சமயம் கடும் வயிற்று வலி உள்ளவர்களுக்கு இதோ ஒரு கைக்கண்ட மருந்து. இஞ்சியை நன்குசுத்தம்செய்து அலம்பி அரைத்துப் பிழிந்து சாறு எடுக்கலாம். அந்நீரை அடுப்பில் வைத்து சிறிது வெல்லம்(சக்கரை கூடாது)சேர்த்து இலேசாக கொதிக்க விடவேண்டும். பிறகு இறக்கி ஆறியபின் ஒரு எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து அதனுடன் (இஞ்சிசாறுடன்) கலந்து காலையிலும், மாலையிலும் பருக வயிற்று வலி பறந்தே போய்விடும். இந்த இஞ்சிச் சாறு, தலைவலி, அஜீரணம்,வாந்தி,பசியின்மை,அலுப்பு எல்லாவற்றுக்கும் மிகவும் நல்லது. பிரயாண சமயத்தில் விசேஷமாகப் பஸ்ஸில் பிரயாணம் செய்பவர்கள் ஒரு சிறிய பாட்டிலில் கையில் எடுத்துச் செல்லலாம். இதனல் எல்லோரும் பூரணகுணம் பெறலாமே!

—ஜானகிகுளத்து.

**வாசகர் கடிதங்கள்:**



ரயில்வே டிபார்ட்மெண்ட்டில் சேர்ந்து இருபத்தி ஏழு வருடங்கள் ஓடிவிட்டன. இது வரை உயர் அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்தே வேலை செய்து காலம் கழிந்துவிட்டது. இனி இருக்கும் சர்வீஸ் காலத்தையும் இப்படியே ஓட்டிவிடுவோம் என்ற முடிவுடன் என் கணவர் இருந்த நேரம்; அது. "லிமிடெட் டிபார்ட்மெண்டல் டெஸ்ட்" என்ற பரீட்சை வைத்து அதிகாரிகளைத் தேர்வு செய்ய விண்ணப்பம் கோரி அழைப்பு வந்தது. "ஆமாம். இத்தனை நாள் கிடைக்காத பதவி உயர்வு இனிமேல் வந்து என்ன ஆக வேண்டும்?" என்று கேட்டுவிட்டு, பரீட்சைக்குரிய விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து அனுப்பாமல் விட்டுவிட்டார் என் கணவர். இதைப் பேச்சு வாக்கில் என்னிடம் அவர் கூற, நான் அவரைக்கட்டாயப்படுத்தி,விண்ணப்பத்தை அனுப்பி வைத்தேன்.

பரீட்சை நாளும் நெருங்கிக் கொண்டிருந்தது. இவருக்குப் படிப்பது என்பதே வேப்பங்காயாய் கசந்தது. "வயது வேறு ஆகிவிட்டது; மூளையும் வறண்டுவிட்டது. இனிமேலா

# வெற்றிகரமான வாழ்க்கைக்கு

படிப்பு மூளையில் ஏறப் போகிறது?" என்று கூறிவிட்டு எந்த . முயற்சியும் செய்யாது விட்டுவிட்டார்.

ஆனால் என்னால் இந்த நிலைமையை ஜீரணிக்க முடியவில்லை. பரீட்சைக்குத் தேவையான புத்தகங்களிலிருந்து டெக்னிகல் டாப்பிக்குகளை (Topics) படித்து, அவற்றிற்கு குறிப்புகளும் சிறு கட்டுரைகளும் தயாரித்து, ஒரு சிறிய நோட்டைக் கையில் கொடுத்திருந்தேன். தினமும் வேலை முடிந்து இரவு ஏழு மணிக்கு வீடு திரும்பியவரை, இரவு உணவுக்குப் பின் இரண்டு மணி நேரம் படிக்கச் செய்தேன்.

பரீட்சை நாளும் வந்தது. பரீட்சை எழுதி முடித்துவிட்டு வந்து என் கணவர் "எப்படிப் பரீட்சை எழுதியிருக்கிறீர்?" என்பதைச் சொல்லாமல் பேசாதிருந்தார். கேட்டபோதெல்லாம் நம்பிக்கையில்லாத வகையிலேயே பதிலளித்தார்.

'சரி, இனி கேட்டுப் பிரயோசனமில்லை' என்று கருதி நான் இந்த முயற்சி சம்பந்தப்பட்ட எண்ணங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்த நேரத்தில் ஒரு நாள் ஒரு கடிதத்தை என் கையில் கொண்டு வந்து தந்தார். அதில்; இவர் முதல் ரேங்க் வாங்கி மேல்நிலை அதிகாரியாகத் தேர்வு செய்யப்பட்டுள்ள செய்தி இருந்தது.

ஓ.... மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்? பெண்கள் மட்டும், தங்கள் திறமைகளுக்கு வீட்டிலுள்ளவர்கள் ஊக்குவிக்க வேண்டும் என்று நினைப்பது ஒருதலைப்பட்சமானது. மனைவியரும், கணவர்களை ஊக்கப்படுத்த வேண்டும் என்ற கருத்திற்கு எனது இந்த அனுபவம் ஒரு சான்றாகும்.

— பாகீரதி இராமனுதன்

வெற்றிகரமான வாழ்க்கைக்கு நல்லெண்ணங்களே முதல் அஸ்திவாரம். நல்ல எண்ணங்கள் பரிணமிக்க நல்ல குடும்பச் சூழல் அவசியமாகிறது. ஒற்றுமையும், மகிழ்ச்சியும் தாண்டவமாடும் குடும்பத்தில் வாய்ப்புகள் வெற்றி பெறுகின்றன. இத்தகைய குடும்பம் அமைய வேண்டுமெனில் கணவன் மனைவியரிடையே அன்யோன்யம் அவசியம்.

மற்ற எல்லா உறவுகளையும்விட கணவன் மனைவியரிடையே ஒற்றுமை எந்நாளும் நிலவ, இருவருமே ஒருவரையொருவர் நன்கு புரிந்திருத்தல் அவசியமாகும்.

எந்த ஒரு சிறிய காரியமாயினும்—குழந்தை வளர்ப்பு, வீட்டு நிர்வாகம், உறவினருக்கு உதவி, நண்பருக்குப் பண நெருக்கடி — இருவரும் ஒருவர் கருத்துக்கு மற்றவரும் மதிப்பளித்து, மனந்திறந்து பேசி, அதனால் ஏற்படும் நன்மை தீமைகளை பாரபட்சமின்றி ஆராய்ந்து முடிவெடுப்போம். என் உறவினர், உன் உறவினர் என்று கணவனும்

மனைவியும் பிரித்துப் பேசாது நம் உறவினர் என்று, சுயநலம் பாராட்டாமல், தன்னால் முடிந்த உதவிகளைச் செய்வதன் மூலம் வீண் சச்சரவுகளைத் தவிர்க்கலாம்.

முக்கியமாக காரியங்கள் வெற்றி பெற உண்மையான உழைப்பு அவசியமாகும். வெற்றிகரமான வாழ்க்கை அமைய இதுவே ஆணி வேர். கடுமையான உழைப்பினால் சாதிக்க முடியாத செயலே உலகில் இல்லை எனலாம். கடும் உழைப்பினால் கிடைக்கும் வெற்றிக்கு ஈடு இணையான ஆனந்தம்



வேறெதுவுமில்லை. இதை 'குடும்பத்திற்காகத் தியாகம், கடமை' என்று சொல்லிக் கொண்டிராமல் இதுவே நாம் பிறந்ததன் பலன் என்று நினையுங்கள். வாழ்வு மலராகும்.

— புஷ்பா துரைசாமி

உண்மையில் பார்க்கப் போனால், குடும்ப உறவுகளைப் பொறுத்தவரை வாழ்க்கையில் நாம் அடையும் வெற்றி நாம் செய்யும் செயலில் இல்லை, பேசும் பேச்சில்தான் இருக்கிறது என்பது புரிய வரும்! மற்றவர்களுடைய வாழ்க்கையைக் கவனிக்கும் பொழுதுதான் இந்த உண்மை நமக்குப் புரிய வரும்.

உதாரணமாக, எனக்கு மிகவும் வேண்டிய தோழிகள் இருவர் இருக்கின்றனர். இருவருமே திருமணமானவர்கள். ஒருத்தி நேர்மை, நியாயம், கடமை, கட்டுப்பாடு தவறாதவள். ஒளிவு மறைவின்றி எதையும் நேரிடையே கேட்கும் சுபாவம். மற்றொருத்தி காரியத்தில் சற்று முன்பின் இருந்தாலும் தன் பேச்சினால் கணவனைச் சரிக்கட்டிக் கொண்டு போவதில் வல்லவள்.

முதலாமவள் வீட்டில் அவளது கணவன் டேபிளில் அமர்ந்தபடி, 'நாழியாயிற்று. இன்றும் ஆபீஸுக்கு லேட் வழக்கம் போல். சீசே! எப்போ பார்த்தாலும் இதே தொந்தரவுதான் இந்த வீட்டில்' என்று இரைவான். ஹாலில் உலகமே கொள்ளை போனாலும் அவன் மனைவி வெளியே வர மாட்டாள். 'ஆகிக் கொண்டிருக்கிறது, ஆகிவிட்டது. கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள். உம்... ஒரு வார்த்தை வெளியே வராது! ஆனால் காரியமே கண்ணாய் ஐந்தாறு தோசைகளை மொத்தமாக வார்த்து வெளியே கொணர்ந்து வைப்பாள். கணவரை ஒரு வேலை ஏவவும் மாட்டாள். காப்பி, குடிக்கத் தண்ணீர் எல்லாம் அழகாக டேபிளுக்கே கொண்டு வந்து வைப்பாள். இருந்தும் என்ன பயன்?

இவள் வெளியே வருவதற்குள், 'சீ இந்தச் சனியன் பிடித்த வீட்டில் ஒரு நாளாவது ஒழுங்காகச் சாப்பிட்டுவிட்டு வெளியே கிளம்ப முடியாது. எனக்குத் தோசையும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். நீயே தின்றுக் கொள்' என்று கத்திவிட்டுப் படார் என்று கதவைச் சாத்திவிட்டுப் போயிருப்பான் கணவன்! இதில் ஆரம்பித்த கோபம் எத்தனை வாரங்கள் தொடருமோ தெரியாது!

ஆகக் காரியத்தைச் செவ்வனே முடிக்கும் திறமை மட்டும் இருந்தால் போதாது. சாமர்த்தியமான பேச்சில்தான் வெற்றியின் ரகசியம் அடங்கியிருக்கிறது. இதே சூழ்நிலையில் பின்னவள் வீட்டில் நடப்பது என்ன என்பதையும் கொஞ்சம் பாருங்கள்!

''தோசை வார்த்தாயிற்றா இல்லையா? பேசாமல் காலிங் பெல் ஒண்ணை டேபிளில் ஃபிக்ஸ் பண்ணிவிடு. அழுத்திக் கொண்டேயிருக்கிறேன். சீ, கத்திக் கத்தி வாயெல்லாம் வலிக்கிறது.''

''இதோ ஒரு நிமிஷம், இதோ வந்துட்டேங்க. நீங்க ஒண்ணு, ரெண்டு பத்து என்ற





பார்த்திருக்கிறேன். அவர்கள் சமையல் கால் காசிற்கு வாயில் வைக்க வழங்காது. ஆனால் கணவன் இலையில் அமர்ந்த உடனேயே, அவனிடமிருந்து வார்த்தை வருவதற்கு முன்பே இவர்கள் 'இன்னைக்கி கத்திரிக்காய்க் கறி இப்படிப் பண்ணியிருக்கேன். சேப்பங் கிழங்கு ரோஸ்ட். சும்மா மொறு மொறு வென்று வறுத்திருக்கிறேன். எதிர்வீட்டிலே கூட நல்லாயிருக்குன்னு சொன்னா. இருந்தா லும் நீங்க சொன்னாத்தானே எனக்குச் சந் தோஷம்' என்றெல்லாம் பேசி அவன் வாயி லிருந்து 'பேஷ்' என்ற வார்த்தையை வாங்கிக் கட்டிக் கொண்டுதான் நகருவார்கள்!

ஆனால் இப்படியெல்லாம் குழைய எல்லாப் பெண்களுக்கும் தெரிவதில்லை. தெரிந்தாலும் மனது இடம் கொடுப்பதில்லை. இப்படிச் சில பெண்கள் நினைப்பதைத் தவறு என்று சொல்ல மாட்டேன். ஆனால் உண்மை கள் எல்லாம் வெற்றிக்கு வழி வகுப்பதில்லை. கணவனுக்குச் சொல்லும் கதைதான் மாமி யார், மற்ற உறவுகளுக்கும். இனிமையாகப் (கஷ்டப்பட்டாவது) பேசக் கற்றுக் கொள் ளுங்கள், வெற்றி உங்கள் பக்கம்தான்!

— லலிதா சுந்தரராமன்

துக்குள்ளே பத்து தோசை வார்த்து விடுகி றேன் பாருங்கள்!'' என்று கொஞ்சம் இந்தப் பக்கம் வந்து தோசையை எடுத்துக் கொண்டு போங்கள். அப்படியே கொஞ்சம் குடிக்கத் தண்ணீரும் கொண்டு வைத்துக் கொள்ளுங் கள். ஒரு செகண்ட், தட்டைக் கொண்டு போட்டுக் கொள்ளுங்கள். இதோ, தோசை ரெடி...!'' இவ்வளவு பேச்சு முடிவதற்குள் கணவருக்குத் தான் எதற்கு டேபிளில் உட் கார்ந்தோம் என்றே மறந்துவிடும். கோபத் தின் சூட்டில் அமர்ந்த அவன், பிரசன்ன முகத்தோடு உள்ளேயிருந்து மனைவி ஏதோ தொடர்ந்து பேசிக் கொண்டு இருப்பதைக் 'கதை' கேட்பதுபோல் சுவாரசியமாகக் கேட்டுக் கொண்டிருப்பான்! சில பெண்கள் பேச்சைத் திசை திருப்பிவிட்டு, ஊரார் வம்பையெல்லாம் கணவனிடம் அலசிக் கொண்டிருப்பார்கள். ஆண்களுக்கு மட்டும் என்ன வம்பு கசக்கிறதா? அந்த வம்பைக் கேட்டுக் கொண்டே சாப்பிடும் கணவன் தொட்டுக் கொள்ளக் கூட எதையும் கேட்க மாட்டான்!

''சீ! என்ன கண்றாவிச் சமையல் இது?' என்று சொல்லும் கணவனிடம் ''என்னால் இவ்வளவுதான் செய்ய முடியும். வேண்டு மானால் ஒரு சமையற்காரியை அமர்த்திக் கொள்ளுங்கள்.'' இப்படிச் சொல்லிப் பாருங்கள், உங்கள் கணவரிடம் ஒருமுறை! அப்படியா சேதி என்று அடுத்த முறை பாக்யராஜ் ஸ்டைலில் (சினிமா!) சமைய லுக்கு ஒரு சின்ன வீட்டையே வேண்டுமானா லும் ஏற்படுத்திக் கொண்டு விடுவார்!

சாமர்த்தியமான பெண்கள் பலரை நான்

ஆணாயிருந்தாலும் சரி, பெண்ணாயிருந் தாலும் சரி, மற்றவரின் தனித்தன்மையை மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் என் கிறார் கிரிஜா ராகவன். எனது வாழ்க்கை யில் அனுபவபூர்வமாக இக்கொள்கை அமு லாக்கப்பட்ட விதம் ரசமானது.

நாளிதழ்கள், வார, மாத இதழ்கள் ஆகிய வற்றைப் படித்து முடித்தவுடன் ஆசிரியருக் குக் கடிதம் எழுதும் பழக்கம் எனக்கு உண்டு. இதில் என் மனைவி கலோசனாவுக்கு ஈடுபாடு இல்லை. தன் கணவர் பெயர் பத்திரிகையில் வருகிறது, பார்த்துப் படித்து மகிழ்ச்சியும் பெருமையும் அடைய வேண்டாமா என அடிக்கடி கூறிப் பார்த்தேன். 'போஸ்டபீ சில் கார்டு கவர் வாங்கியே குடும்பம் அழியப் போகிறது' எனக் கடிந்து கொள்வாள் என் மனைவி.

இம்மனப் போக்கை மாற்ற நான் கடைப் பிடித்த உபாயம் என்ன தெரியுமா? ஒரு பிரபலமான பத்திரிகைக்கு என் மனைவி பெயரால் அவளுக்குத் தெரியாமல் ஒரு துணுக்கு எழுதி அனுப்பினேன். அது பிரசுர மாகி என் மனைவி பெயருக்கு அந்தப் புத்த கம் கிடைத்தபோது அவள் அடைந்த பூரிப்பு, இதற்கென சன்மானமாக ரூ 5/— அவள் பெயருக்கு மணி ஆர்டர் கிடைத்தபோது இரட்டிப்பாயிற்று.

அதற்கப்புறம் நான் தப்பித் தவறிச் சும்மா இருந்துவிட்டாலும்கூட 'ஏங்க, இந்த வாரம் இன்ன தொடர்கதை முடிந்துவிட்டதே. விமர் சனம் எழுதி அனுப்பவில்லையா என கேட்க ஆரம்பித்துவிட்டாள்!

— அ. சம்பத்

# ரெக்கரிங் டெபாசிட் திட்டம்*

| | காலம் (மாதங்கள்) | மாதாந்திரத் தவணை | முதிர்வடையும் போது திருப்பி அளிக்கப்படும் தொகை |
|---|---|---|---|
| குறைந்த பட்சத் தொகை ரூ. 100/- | 12 | ரூ. 100/- | ரூ. 1,281/- |
| அதற்கு மேற்பட்ட தொகைகள் ரூ. 50-ன் | 24 | ரூ. 100/- | ரூ. 2754/- |
| மடங்குகளில் | 36 | ரூ. 100/- | ரூ. 4,494/- |

* இத்திட்டம் சென்னை நகரத்தில் மட்டும் அமலில் இருக்கும்.

## தனிச்சிறப்புமிக்க மாதாந்திரச்சேமிப்பு திட்டம்

### சிறப்பு அம்சங்கள்

* நீங்கள் குறைந்தபட்சம் ரூ. 100/-ம், அதற்கு மேல் ரூ. 50/-இன் மடங்குகளிலும் டெபாசிட் செய்யலாம்.
* உங்களுக்கு அருகாமையிலுள்ள கனரா வங்கியின் கிளைகளில் ரொக்கமாகவோ, செக் மூலமாகவோ டெபாசிட் தொகையைச் செலுத்தலாம்.
* மைனர்கள் பேரிலும் நீங்கள் டெபாசிட் செய்யலாம்.
* உங்களுடைய தேவைகளை மனத்திற் கொண்டு உருவாக்கப்பட்ட கிரெஸ்ட் ரெக்கரிங் டெபாசிட் திட்டத்தின் கீழ் 1,2,3 ஆண்டுகளுக்கு முறையே 12%, 13% மற்றும் 14% என்ற விகிதங்களில் உங்கள் வட்டிக்கு வட்டியைப் பெறலாம்.
* நிதியாண்டில் நீங்கள் ரூ. 2500/-வரை வட்டித் தொகையை வரி பிடித்தம் இல்லாமல் பெறலாம். அதாவது ரூ. 3000/-வரையிலான 12 மாத கால டெபாசிட்டிற்கு வட்டி கொடுக்கும்போதே வரி பிடித்தம் செய்யப்பட மாட்டாது.
* இந்த ரெக்கரிங் டெபாசிட்டை முதிர்வடையும் போது பிக்சட் டெபாசிட்டாக மாற்றிக் கொள்ளலாம்.

ஊ.க.எ. இந்த விளம்பரத் தேதியிலிருந்து முந்தைய மூன்று வர்த்தக ஆண்டுகளில் கம்பெனியின் இலாபங்கள் வரிக்கு முந்தைய முன்பும், பின்பும் மற்றும் கம்பெனியால் அறிவிக்கப்பட்ட டிவிடெண்டுகள்.

| ஆண்டு முடிவு | இலாபம் வரிக்கு முந்தையும் | இலாபம் வரிக்கு பின்பு | அறிவிக்கப்பட்ட டிவிடெண்டு |
|---|---|---|---|
| 30.9.1984 | 31.50 | 31.50 | 10% (ரூ. 5 இலட்சங்கள்) |
| 30.9.1985 | 37.50 | 37.50 | 15% (ரூ. 7.5 இலட்சங்கள்) |
| 30.9.1986 | 57.61 | 35.31 | 17.5% (ரூ. 17.5 இலட்சங்கள்) |

எ. இந்த விளம்பர தேதியிலிருந்து முந்தைய தணிக்கை செய்யப்பட்ட
* இரு பாலன்ஸ் ஷீட்டுகளில் கண்டுள்ளபடி கம்பெனியின் நிதி நிலைமை பற்றிய சுருக்கமான விவரங்கள்:

(ரூ. இலட்சங்களில்)

| பொறுப்புகள் | 30.9.86 தேதிப்படி | 30.9.85 தேதிப்படி | சொத்துகள் | 30.9.86 தேதிப்படி | 30.9.85 தேதிப்படி |
|---|---|---|---|---|---|
| பங்கு மூலதனம் | 100.00 | 100.00 | நிலையான சொத்துகள் | 459.80 | 348.05 |
| கையிருப்புகளும் உபரியும் | 97.02 | 39.21 | முதலீடுகள் | 25.01 | 4.92 |
| ஈடுபெற்ற கடன்கள் | 233.42 | 237.23 | தற்போது உள்ள சொத்துகள் | 1303.97 | 932.42 |
| ஈடுபெறாத கடன்கள் | 787.81 | 580.45 | கடன்களும் அட்வான்ஸ்களும் | 15.65 | 13.62 |
| நடப்பு பொறுப்புகள் மற்றும் ஒதுக்கீடுகள் | 389.18 | 320.12 | நாறுமிடு செலவினங்கள் | — | — |
| | | | இலாப நஷ்டக் கணக்கு | — | — |
| மொத்தம் | 1808.43 | 1297.01 | மொத்தம் | 1808.43 | 1297.01 |

எதிர்பாராமல் நேரக்கூடிய பொறுப்புகள் — இல்லை

* இந்திய ரிசர்வ் வங்கியின் சட்டவிதிகளின்படி கம்பெனி டெபாசிட்டுகள் மூலம் எழுப்பக் கூடிய தொகை — ரூ. 1970.20 இலட்சங்கள்

செப்டம்பர் 30, 1986 அன்று சட்டவிதிகளின்படி கம்பெனி வசம் இருந்த டெபாசிட்டுகளின் மொத்தத் தொகை — ரூ. 488.33 இலட்சங்கள்

ஒ. முதிர்ந்துபோன கோரப்படாத டெபாசிட்டுகள்: கம்பெனியில் செப்டம்பர் 30, 1986 தேதியில் கோரப்படாத டெபாசிட்டுகளைத் தவிர முதிர்ந்து போன டெபாசிட்டுகள் வேறேதும் இல்லை.

ஓ. கம்பெனி இதனால் அறிவிப்பதாவது:
i. அது இந்திய ரிசர்வ் வங்கியின் சட்டவிதிகளில் கூறப்பட்டுள்ள ஷரத்துக்களை நிறைவேற்றி உள்ளது.
ii. இவ்வாறு கம்பெனி சட்டவிதிகளை நிறைவேற்றியிருப்பதானது, இந்திய ரிசர்வ் வங்கி டெபாசிட்டுகளைத் திருப்பித் தருவதற்கு உத்திரவாதம் அளிப்பதாகக் கருதலாகாது.
iii. கம்பெனி ஏற்றுக் கொண்டுள்ள டெபாசிட்டுகள் ஈடுபெறாதவை. இவை ஏனைய ஈடுபெறாத பொறுப்புகளுடன் சரிசமமாக பாவிக்கப்படும்.

செக்/பாங்க் டிராஃப்ட் "கிரெஸ்ட் டெவலப்மெண்ட் அண்ட் லீசிங் லிமிடெட்—பிக்சட் டெபாசிட் அக்கௌண்ட்" என்ற பெயரில் அக்கௌண்ட் பேயீ மட்டும்" என்று கிராஸ் செய்யப்பட வேண்டும். டெபாசிட் தொகைகள் கம்பெனியின் இயக்க செலவுகளுக்கும் பயன்படுத்திக் கொள்ளப்படும்.

இவ்விளம்பரம் கம்பெனியின் இயக்குனர் குழுவின் ஆணைப்படி அவர்களின் பெயரால் வெளியிடப்படுகிறது. இக்குழு இதனை மார்ச் 23, 1987 அன்று நடந்த கூட்டத்தில் அங்கீகரித்தது.

இயக்குனர்கள் குழு ஆணைப்படி
கிரெஸ்ட் டெவலப்மெண்ட் அண்ட் லீசிங் லிமிடெட்டுக்காக
எம். நாராயணமூர்த்தி
பிரசிடெண்ட் அண்ட் செகரட்டரி

இடம்: சென்னை
தேதி: 23.4.1987

கம்பெனியின் பெரும்பான்மையான இயக்குனர்களால் கையொப்பமிடப்பட்ட இந்த விளம்பர வாசகத்தின் நகல் ஒன்று இந்திய ரிசர்வ் வங்கி, கம்பெனிகள் பதிவாளர், சென்னையில் மார்ச் 23, 1987-இல் தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

*Dear Depositor,*

*Now you can make one single Deposit of Rs. 17,000/- with us without the problem of deduction of tax at source – NO FORM 15A/15H NEED BE FILED.*

*No deduction of tax ON INTEREST IN RECURRING DEPOSITS for Monthly Deposits up to Rs. 3,000/-*

*Yours faithfully*
*KREST*

# நவராத்திரி அவசியமா?



* நிர்மலா

* பாலகிருஷ்ணன் தம்பதிகள்



**விலைவாசிகள் நாளுக்கு நாள் ஏறிக் கொண்டே போகின்றன. கணவன் — மனைவி இருவருமே சம்பாதித்தால்தான் இந்தக் கால கட்டத்தைச் சமாளிக்க முடியும். பொதுவாக நமது நாட்டில் மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்தான் பணவீக்கமான செய்யவும் முடியாமல் அதே சமயம் தவிர்க்கவும் முடியாமல் கஷ்டப் படுகிறார்கள். இப்படிப்பட்ட சூழலில் நவராத்திரி போன்ற பண்டி கைகள் நமக்கு மேலும் செலவைத்தான் வைக்கின்றன. அதிகம் செலவு செய்து இந்த மாதிரி பண்டிகைகளைக் கொண்டாட வேண்டியதுதானா?**

நங்கநல்லூரைச் சேர்ந்த திரு. பாலகிருஷ் ணனை இதுபற்றிக் கேட்டதும் மனத்தில் பல நாட்களாகச் சுமந்து கொண்டிருந்த எண்ணத்தைப் படபடவென்று கொட்டி விட்டார்.

''என்ன சார் நவராத்திரி? வீண் செல வுக்கு இது ஒரு பண்டிகை. தமிழில் ஆடி மாதம் ஆரம்பித்து விட்டாலே ஒவ்வொரு பண்டிகையாக வர ஆரம்பித்துவிடும். இந்தப் பண்டிகை சீசன் தைப்பொங்கல் வரை ஒரு சங்கிலித் தொடர் போல போய்க் கொண்டேயிருக்கும். இதனால் அவஸ்தைப் படுவது ஆண்கள்தான். ஆண்களுக்கு எந்தப் பண்டிகையுமே கிடையாது. தீபாவளிக்கு ஆண்கள் கட்டிக் கொள்ளும் உடையை விடப் பெண்கள் கட்டிக் கொள்ளும் உடைக் குத்தான் விலை அதிகம். செலவே ஒரு குடும் பத்தில் பெண்களால்தான் வருகிறது.

நவராத்திரி ஒன்பது நாட்கள் கொண் டாடப்படும் பண்டிகை. இந்தப் பண்டிகைக் கும் பெண்களுக்குப் புடைவை உண்டு. தினசரி விதவிதமாகப் பண்டங்கள் செய்து கொலுவிற்கு நைவேத்தியம் பண்ணுகிறேன், அம்மனுக்கு நைவேத்தியம் பண்ணுகிறேன் என்று நாம்தானே சாப்பிடுகிறோம்? ஒரு நாள் இரண்டு நாட்கள் விருந்து சாப்பாடு சாப்பிட்டாலே நம் வயிறு கெட்டுப் போய் விடுகிறது. ஒன்பது நாட்கள் என்றால்

அப்பப்பா, கேட்கவே வேண்டாம். நாட்டில் வறுமைக் கோட்டிற்குக் கீழே எத்தனையோ உயிர்கள் தினசரிச் சோற்றுக்குக் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கும் போது இது மாதிரி பண்டிகைகளே தேவையில்லை என்றுதான் தோன்றுகிறது.

நவராத்திரிக்குப் பெண்கள் புடைவை கொடுப்பார்கள். இந்தப் புடைவையை ஏழைகளுக்கு, நமக்கு முன்பின் தெரியாதவர்களுக்குக் கொடுத்தால் நான் சந்தோஷப்படுவேன். ஆனால் இந்தப் பெண்கள் என் மனைவி உள்படப் புடைவையை எடுத்துத் தன் சொந்தக்கார சுமங்கலிப் பெண்களாகப் பார்த்துத்தான் கொடுப்பார்கள். இது போகட்டும், கொலு பார்க்கப் பெண்களை அழைக்கிறோம். கொலு பார்க்க வருகிறவர்கள் இறைவனைப் பற்றியா பேசுகிறார்கள் என்றால் அதுவும் கிடையாது.

"ஏண்டி, கிரிஜா மாமியாருடன் சண்டை போட்டுக்கொண்டு பிறந்தகம் போய்விட்டாளாமே" — இதுபோன்ற ஊர் வம்புப் பேச்சுக்கள்தான் அதிகம்.



தங்கள் வீட்டில் வேலை செய்யும் வேலைக்காரிகளுக்கே கூட உணவு வகைகள், பதார்த்தங்கள் இவைகளைப் பண்டிகை நாட்களில் கூடக் கொடுக்கச் சிலருக்கு மனசு வராது. பண்டிகை கழித்த அடுத்த நாள் மீதியிருந்தால் கொடுப்பார்கள். ஏழைகள் நல்ல உணவு வகைகளை மனசாரச் சாப்பிடும் போதுதான் உண்மையிலே நமக்கு வாழ்த்துக்கள் கிடைக்கும். இவர்கள் ஊசிப் போனதைத்தான் கொடுப்பார்கள்."

பாலகிருஷ்ணன் பேசியதும் அவருடைய மனைவி திருமதி பாலா பாலகிருஷ்ணன் பேச ஆரம்பித்தார். இவர் தன்னுடைய கணவரின் கருத்துக்களில் பலவற்றை ஒப்புக் கொள்ளவில்லை.

"பண்டிகைகள் எல்லாமே வீண் செலவு என்றால் அதை ஏற்றுக் கொள்ள முடியாது. பிரச்னைகள் நிறைந்ததுதான் வாழ்க்கை. வாழ்க்கையில் பிரச்னைகளைச் சந்திக்கும் போதுதான் ஒரு த்ரில்லே இருக்கிறது. பொருளாதாரத் தேவைகளைக் கஷ்டப் பட்டுப் பூர்த்தி செய்வதுதான் என்னைப் பொறுத்த வரையில் வாழ்க்கை என்று எண்ணுகிறேன். நாம் ஏன் சம்பாதிக்கிறோம்? நாமும் நமது குழந்தைகளும் வேண்டியதைச் செலவு செய்து சௌகரியமாக இருக்கத்தானே?

சில பாரம்பரியமான விஷயங்கள் நமது இரத்தத்தோடு ஊறிப் போனவை. சில மத அடிப்படையில் அமைந்தவை. சில குடும்பம் மற்றும் சமூகக் கட்டுப்பாட்டில் எழுந்தவை. எனவே சில செலவுகள் அதிகமாகத் தெரிந்தாலும் தவிர்க்க முடியாதவைதான். அப்படித்தான் இந்தப் பண்டிகைச் செலவுகளையும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ஏழைகளுக்கு உணவு படைப்பதில்லை, ஏழைப் பெண்களுக்கு உடைகளைக் கொடுப்பதில்லை என்ற வாதத்தை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. நிறைய உயர் வருமானக்காரர்கள் ஏழைகளுக்கு உடை, உணவு வகைகளை நவராத்திரி நாட்களில் வழங்கத்தான் செய்கிறார்கள். எங்களைப் போன்ற மத்திய தரப் பெண்கள் இந்தப் பண்டிகையையாவது சாக்காக வைத்துக் கொண்டு சொந்தக்காரர்களுக்கு விருந்து கொடுத்துப் புடைவை கொடுக்கும் போது உறவுக்குள் இருக்கும் பிணைப்பு இன்னும் இறுக வாய்ப்புள்ளது. இந்த அளவுதான் எங்களால் முடியும்.

வருடத்திற்கு ஒருமுறைதான் வரக் கூடியவை பண்டிகைகள். இதில் நமது கலாசாரம், பண்பாடு, விருந்தோம்பல் எல்லாம் இருக்கிறது. அப்படியிருக்க பண்டிகைகளே வேண்டாம், எல்லாச் செலவுகளுக்குமே பெண்கள்தான் காரணம் என்றால் அதை ஒப்புக் கொள்ள முடியவில்லை. ஆண்களை விட பெண்களுக்குச் செலவுகள் அதிகமாக இருக்கலாம். அது குடும்பத்திற்காகச் செலவு செய்வதுதான். ஆனால் ஆண்களை விடச் சிக்கனமாகச் சேமிக்கக் கூடியவர்கள் பெண்கள்தான். தேவைகளை உணர்ந்து கனகச்சிதமாகவும், அவர்களுக்கு நடந்து கொள்ளத் தெரியும்."

திருவல்லிக்கேணியில் மளிகை சாமான்கள் கடை வைத்து நடத்திக் கொண்டிருப்பவர் பி. டி. சுகுமார். இவரது மனைவி மகாலக்ஷ்மி. இந்த இருவரையும் சந்தித்து இது பற்றிக் கேட்டபோது......

"பண்டிகைகள் அவசியம், தேவையானவை. பண்டிகைகள் கொண்டாடுவதால் ஒரு கூட்டு வழிபாட்டிற்கு வீட்டிலும், கோவிலிலும் வசதி ஏற்படுகின்றது. பல தரப்பட்ட எண்ணங்களைக் கொண்ட மக்களைச் சந்திக்கும்போது நமக்கு உற்சாகம் பிறக்கிறது. அவர்களுடைய நாகரீகம், பண்பாடு, பழக்க வழக்கம், இவைகளையெல்லாம் அறிந்து கொள்ள முடிகிறது. கொலு வைத்தால் வீட்டிற்குப் பல பேரை அழைக்கிறோம். பலர் வீட்டுக்கு வந்து போவதால் சுற்றமும் நட்பும் பெருக வாய்ப்புண்டு.

பொம்மை, அலங்காரப் பொருள்கள்

இவைகள் எல்லாம் கைத்தொழிலின் மேன்மையைப் பறைசாற்றுபவை. கைத்தொழில் வளர்வதற்கு இதுபோன்ற பண்டிகைகள் உதவுகின்றன என்பதைமறந்துவிடக்கூடாது. வளருகின்ற தலைமுறையினரிடையே மதமாற்றம் நிகழாமல் இருக்கவும், அவரவர் மதத்தின் பெருமைகளை அறியவும் இது போன்ற பண்டிகைகள் அவசியம்தான். அவரவருக்கு அவரவர் மதப் பண்டிகைகள் முக்கியமானதுதான்!''

செல்வி நிர்மலா தேவி — எத்திராஜ் கல்லூரி மாணவி —

''பண்டிகைகள் கொண்டாட வேண்டியது அவசியம்தான். ஆனால் அவைகளை ஆடம்பரமாகப் பெண்கள் கொண்டாடுவதை நான் வெறுக்கிறேன். முறையான பக்தி இன்று யாரிடமும் இல்லை. கோவில் உட்பட எங்கு வந்தாலும் வெட்டிப் பேச்சைத்தான் பெண்கள் பேசுகிறார்கள். சில சமயங்களில் இந்தப் பேச்சு முற்றிச் சண்டைகளில் கூடப் போய் முடிந்திருக்கிறது. இதனாலே பண்டிகைகளை எல்லாம் சுருக்கிக் கொள்ளலாமோ என்று எனக்குத் தோன்றுகிறது.

பட்டுப்புடவை, புதுப்புது நகைகளில் பெண்களுக்கு மோகம் இருக்கத்தான் செய்யும். அதை இந்தப் பண்டிகைகள் இன்னும் கொஞ்சம் வளர்க்கின்றன.

பண்டிகைகள் கலை வளர்க்கப் பாடுபடுகின்றன என்று சொன்னால் அது பொய்யான வாதம்தான். இன்று பல கோவில் திருவிழாக்களிலும் பக்திப் பாடல்களோ கர்நாடக சங்கீதப் பாடல்களோ கச்சேரியாக நடைபெறுவதில்லை. மாறாக சினிமாப் பாடல்கள்தான் அங்கும் ஒலிக்கிறது. ஒலிபெருக்கி, வண்ண வண்ண விளக்குகள் இவை எல்லாம் எவ்வளவு மின்சாரத்தைச் சாப்பிடுகின்றன தெரியுமா? மழைபொய்த்து அதனால் மின்சாரத் தட்டுப்பாடு உள்ள இந்தக் காலத்தில் அலங்கார மின் விளக்குகள் தேவைதானா? இது ஆடம்பரம்தானே?

பண்டிகைகள் வேண்டாம் என்று சொல்லவில்லை. பண்டிகை என்ற பெயரில் வீண் செலவுகள் செய்வதை நான் விரும்பவில்லை!''

பேட்டி: **கீழாம்பூர் சங்கரசுப்ரமணியன்**

(112 ஆம் பக்கத் தொடர்ச்சி)

பிள்ளை, வேட்டகத்துப் பக்கம் சேர்ந்துட்டான்னு... இப்ப இதை வேற இழுத்துண்டு வந்து, நிமிஷத்துக்கொரு தரம் ஈரப் பாவாடையை மாத்தி, எச்சிலைத் துடைச்சு... வேண்டாம்டி... சாம்பன் பொண்டாட்டி இருக்கா..."

ரங்கம் அம்மாவை உற்றுப் பார்த்தாள்.

அம்மா, எங்கேயோ பார்த்தபடி சொன்னாள்.

"ஆச்சு... உன்னைக் கொண்டு விட்டாச்சுன்னு இருக்கவே இருக்கு... இதோட அல்லாடறது... வேற எதுக்காகப் பிறவி எடுத்திருக்கேன்?"

ஆனால்... ஆனால்...

பெற்றவளை அதிக நாட்கள் திண்டாட விடக் கூடாது என்றுதானோ என்னவோ, அடுத்து வந்த புரட்டாசி வெள்ளி... நவராத்திரிப் பண்டிகையின் போது உமாவின் தலையாட்டல் ஸ்திரமாக நின்றே விட்டது...

எண்ணிப் பதினைந்தே நாட்கள்!

தந்தி வந்து, கணவனுடன் கிராமத்துக்கு ஓடியவளுக்கு — உமாவின் முகத்தைப் பார்க்கக் கூடக் கொடுத்து வைக்கவில்லை.

கடைசி கடைசியாய்... ரங்கத்தின் நினைவில் நின்றதெல்லாம் — குழந்தை, அவள் புடவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டு அழுததுதான்.

"ரங்கம்... என்னை விட்டுட்டுப் போகாதேடீ..."

இப்பொழுது உமா, ரங்கத்தை விட்டுப் போய் விட்டாளே...

"எப்படிம்மா... எப்படிம்மா நின்னுது?"

ரங்கம் தாயின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதாள்.

"நவராத்திரி இரண்டாம் நாள் — எதிர் வீட்டு ராஜகோபாலன், பொம்மை காமிக்கிறேன் வான்னு கூப்பிட்டிருக்காண்டி... இது போயிருக்கு... அங்கே என்ன நடந்ததோ என்னமோ... அவன் என்ன பண்ணினானோ, இது அலறிண்டு வெளியிலே ஓடிவந்து, முற்றத்துல தேய்க்கப் போட்டிருந்த பாயச வெண்கல உருளிய எடுத்து, அவன் தலையில அடிச்சிருக்கு..."

"நம்ம உமாவாம்மா...? அதுக்கு ஏதும்மா அத்தனை பலம்?"

"வந்திருக்கே... வந்திருக்கே... சாம்பன் பொண்டாட்டியானு, உன் பொண்ணுக்கு மூளை கலங்கிடுத்துங்கறு... வேலைக்காரி குப்பம்மாவானு, அந்தப் பையன் ஏதோ குழந்தைகிட்டத் தப்பா நடந்துண்டிருக்கான். நான் தான் பாத்திரம் தேய்ச்சுண்டிருந்தேன்னு சொல்றா. நான் என்னத்தைச் சொல்ல... அன்னிக்குப் படுத்ததுதாண்டி குழந்தை, மூணும் நாளே போயிடுத்தே... மூச்சு பிரியற வரைக்கும் ரங்கம் ரங்கம்னு உன் பேரைத் தாண்டி சொல்லிண்டிருந்தது. எனக்கு — உன்னை மாதிரி கண்ணும் கருத்துமாக் கவனிச்சுக்கற சமர்த்து இல்லேடி... அசடு நான்... பறிகொடுத்துட்டு நிக்கறேன்..."

அம்மா நெஞ்சிலறைந்து கொண்டு அழுதாள்.

சாம்பன் வீடு பூட்டியிருந்தது.

ரங்கம், கணவனின் தோள் மீது முகம் புதைத்துத் தனிமையில் அழுது தீர்த்தாள்.

அதற்குப் பின்... அதற்குப் பின்...

ரங்கத்தின் தாய் அதிக நாட்கள் உயிருடன் இல்லை. சாம்பன் வீட்டையே விற்றுவிட்டுப் பட்டணத்துக்குப் போய் விட்டதாகக் கேள்வி.

ரங்கத்தின் ஒவ்வொரு பிரசவத்தின் போதும், அவள் மாமியார், குழந்தை நல்லபடியாகப் பிறக்க வேண்டுமென்று ஊரிலுள்ள தெய்வத்துக்கெல்லாம் நேர்ந்துகொண்டாள்.

ரங்கமோ — தன் ஒவ்வொரு பெண்ணின் முகத்திலும் உமாவின் சாயலைத் தேடினாள்.

ஒரு தலைமுறை விட்டு அடுத்த தலைமுறையில் உமாவைப் போல ஒரு பிறவி பிறக்குமோ...?

'ஐயோ கடவுளே... அப்படிப் பிறந்தா, என் பொண்களுக்கு அதை வளர்க்கப்

கறிவேப்பிலைதுவையலுக்கு உளுத்தம் பருப்பு தாளிப்பதற்குப் பதில் நிலக் கடலையை வறுத்துப்போட்டால்துவையல் சுவையாகவும் மணமாகவும் இருக்கும்.

—விசாலாட்சி.

பொறுமையே கிடையாதே...

ரங்கத்தின் கவலைக்கு இடமே இல்லாமல் போய் விட்டது...

ரங்கத்தின் ஒவ்வொரு பேரன் பேத்தியும் சொர்ண விக்கிரகம்தான்...

ரங்கம் — தன்னெதிரே சுவரில் மாட்டியிருந்த ஒவ்வொரு பிள்ளை, பெண்களின் குடும்ப போட்டோவையும் பார்த்துக் கொண்டு பழைய நினைவில் அமிழ்ந்து கிடக்க...

வெளிக் கதவு திறந்திட...

"அகிலாண்டேசுவரி...."

'அவர்தான்.'

ரங்கம் பரபரவென எழுந்து போய்க் கதவைத் திறக்க — ஸ்தம்பித்துப் போகிறாள்.

சேஷாத்திரியின் கையைப் பிடித்துக் கொண்டு...

அது யாரது?

உமாவா?

## 3

சேஷாத்திரி மனைவியைப் பார்த்துச் சிரிக்கிறார்.

"என்ன அசந்து போய் நின்னுட்டே....

இந்தத் தடவை நம்ம வீட்டு நவராத்திரிக்கு இவ — சீஃப் கெஸ்ட். பேரு... பேரு என்ன குழந்தை....?''

அவர், தன் கையைப் பிடித்திருந்த சிறுமியைக் குனிந்து பார்த்துக் கேட்கிறார்.

''மாழீ!''

''என்னது?''

''மாஜேழ்வழீ!''

ரங்கம் 'சட்'டெனச் சொல்கிறாள்.

''ராஜேஸ்வரியா...?''

''உம்...''

அந்தப் பெண், வாயில் வழிந்த எச்சிலைக் கூடத் துடைக்காமல் புன்னகையுடன் நிற்கிறாள்.

தலை — ஏதோ ஒரு ரிதத்தில் — தன்னிச்சையில் ஆடிக் கொண்டிருக்கிறது.

நிறம் கூட.... அப்படியே...

சேஷாத்திரியின் பிடியிலிருந்த குழந்தையைத் தூக்கி — இடுப்பில் வைத்துக் கொண்டு உள்ளே வருகிறாள் ரங்கம்.

என்னவோ தனக்கு ஆலை வயசெல்லாம் மறந்து பத்தொன்பது வயசில் நிற்பது போலவும் — தன் இடுப்பில் உமா ஆவாஹனம் பண்ணியிருப்பது போலவும் பிரமை...

மறுபடியும் இந்த உலகத்துல இப்படியொரு சிருஷ்டியா...?

சேஷாத்திரி — அவள் கேட்காமலேயே பதில் சொல்கிறார்:

''நாளையிலேர்ந்து நவராத்திரி ஆரம்பமில்லையா...? திருச்சி பாரத் எலக்ட்ரானிக்ஸ்லே — வழக்கம் போல — நாலஞ்சு வீட்டுல நவராத்திரி பூஜைக்காக என்னைக் கூப்பிட்டுப் பேசிண்டிருந்தா... அப்பத்தான் இந்தக் குழந்தை...''

அவர் விவரித்துச் சொல்கிறார்:

பாரத் ஹெவி எலக்ட்ரானிக்ஸ் நிறுவனத்தில் வேலை பார்க்கும் அதிகாரிகளின் வீட்டுப் பெண்களின் மேற்பார்வையில் — மனவளர்ச்சிக் குன்றிய குழந்தைகளுக்கான காப்பகம் ஒன்று நடைபெறுவதாகவும், அதில் குழந்தைகளின் பெற்றோர் தங்கள் வசதிக்கேற்ப பணத்தைக் கட்டியோ, வசதியில்லாதவர்கள் தங்கள் நிலைமையை எடுத்துச் சொல்லியோ, குழந்தைகளைக் கொண்டு வந்து சேர்க்கிறார்கள்.

குழந்தைகளின் மன வளர்ச்சிக்கு ஏற்றபடி அவர்களுக்கு ஏதாவது ஒரு கைத்தொழில் — ஓரளவுக்குப் படிக்க வசதி, இவைகளை அந்தப் பாதுகாப்பு நிலையம் மனமுவந்து செய்கிறது.

பண்டிகை நாட்களிலும், விடுமுறை நாட்களிலும் பெற்றவர்கள் வந்து, தங்கள் குழந்தைகளை அழைத்துச் சென்று, விடுமுறை முடியும் வரையில் தங்களுடன் வைத்திருந்து விட்டுக் கொண்டு வந்து விடுவது வழக்கம்.

''பெத்தவங்களோடப் பொறுப்பை நாங்க வாங்கிச் சுமக்கறோம். ஆனா அதே சமயத்துல பெத்தவங்களுக்கும் குழந்தைக்கும் நடுவுல இருக்கிற உறவு சங்கிலி அறுந்துடக் கூடாதில்லையா? அதுக்காகவே, லீவுல குழந்தைங்களை அவங்க அப்பா அம்மா வந்து அழைச்சிட்டுப் போய் அவங்களோட வச்சுட்டு இருந்து அனுப்பணும்னு எதிர்பார்க்கிறோம்...

''குழந்தைகள்லே பலவிதம் இருக்கா மாதிரி பெத்தவங்கள்லேயும் பல விதங்கள் இருக்காங்க சார்... எப்ப லீவு விடுவாங்க, குழந்தைய அழைச்சிட்டுப் போகலாம்னு ஒரு ரகம். ஒருநாள், ரெண்டு நாள் லீவுக்காக அழைச்சிட்டுப் போய், கொண்டு விட அலுத்துக்கறவங்க ஒரு ரகம். எங்கேயோ வெளிநாட்டுல இருந்துட்டு — தன் குழந்தைய அடிக்கடி வந்து பார்க்க முடியலையேங்கறது இன்னொரு ரகம்... நல்ல வசதி இருந்தும், பக்கத்துல மெட்ராஸ்லே குடும்பம் இருந்தும் குழந்தையை ஒரு லீவுல கூட அழைச்சுண்டு போய் வச்சுக்க இஷ்டமில்லாத பேரண்ட்ஸும் இருக்காங்க...''

''என்னது?''

சேஷாத்திரி அதிர்ந்து விட்டார்.

'ஊரார் அடித்தால் தாயிடம் அழுவேன்.
தாயே அடித்தால் யாரிடம் போய் அழுவேன்.'

எங்கேயோ எப்போதோ கேட்ட பாட்டு.

''அப்படிக் கூட அரக்க மனம் படைச்சவா இருக்காளா?''

''இருக்காங்களே. இதோ இந்தப் பெண்ணோட அப்பா, தீபாவளிக்கு முன்னாலே ஒரு தடவை வந்து குழந்தையைப் பார்த்துட்டு புதுத் துணி கொடுத்துட்டுப் போவார். மாசா மாசம், குழந்தையோட பராமரிப்புக்கான பணத்தை 'டாண்'னு அனுப்பிடுவார். இவளை அழைச்சுண்டு போய் வச்சுக்க சங்கடப்படறார். குழந்தையானா, மத்த குழந்தைங்க ஊருக்குக் கிளம்பறதைப் பார்த்துட்டு 'நானும் போவேன்'னு ஒரு பையில ரெண்டு துணிமணியைத் திணிச்சுண்டு வாசல்லேயே உட்கார்ந்திருக்கு...''

சேஷாத்திரி அந்தச் சிறுமியைப் பார்த்தார்.

எத்தனை வருஷங்களானால்தான் என்ன... ஜானவாஸத்தின் போது தன் மாமனாரால் தூக்கி எறியப்பட்டக் குழந்தையை அவரால் மறந்து விட முடியுமா?

''இது என்ன இது... அச்சு, அவதாரம் அப்படியே இருக்கு...!''

அவர் வாய்விட்டே சொன்னார்.

''சார், நீங்க அனுமதிச்சா, இந்தக் குழந்-

---

**எலுமிச்சம்பழச்சாதம்செய்வதுபோல ஜாதிநார்த்தங்காய், கிடாரங்காய் ஆகிய வற்றைக் கொண்டும் சாதம் செய்யலாம்.**

**—விஜி.**

மலர் என்பார்,
மதி என்பார்,
மயில் என்பார்.
எப்படி
அழைப்பினும்
கண்ணே,
ஈடில்லை எதுவும்
உனக்கு !

யுவ
ஸென்ஸேஷன்ஸ்
ஸாரிகள் மற்றும் டிரெஸ் மெட்டீரியல்ஸ்

மஃபத்லால்

–நம்பிக்கைக்குப் பெயர் பெற்றது




Location Courtesy: The Taj Mahal Hotel, Bombay.

MF 635 D TAM

தையை நவராத்திரிக்கு, எங்க வீட்டுக்கு அழைச்சுண்டு போய் வச்சுண்டிருந்து கொண்டு விடறேனே... என் ஒய்ஃபுக்கும் ஒரு மாறுதல் கிடைக்கும்."

காப்பக நிர்வாகி ஆச்சரியப்பட்டுப் போனார்.

"சார்... ராஜிக்குப் பத்து வயசாறதே தவிர... பாத்ரூம் வந்தாக் கூட சொல்லத் தெரியாது... மூணு வயசுக் குழந்தைக்கு இருக்கக் கூடிய அறிவு வளர்ச்சிதான் அவளுக்கு... பெத்தவாளுக்கே கவனிச்சுக்க முடியலே... நீங்களும் மாமியும் வயசானவா... எப்படி...?"

சேஷாத்திரி புன்னகைத்தார்.

"இவளைப் பார்த்தாலே—என் ஒய்ஃபுக்குத் தன் வயசு மறந்து போயிடும். இவளை மாதிரி அவளுக்கு ஒரு தங்கை இருந்து... ப்ச். இப்ப எதுக்கு அதெல்லாம்? ஆறு குழந்தைகளைப் பெத்து, ஒரு டஜன் பேரக் குழந்தைகளைப் பெத்தும் அவ ஒரு பிஞ்சுக் குரலுக்காக ஏங்கிண்டிருக்கா. நாங்க பத்திரமாப் பார்த்துப்போம்..."

"நாங்களும் கண்டவங்க இட்ட விடமாட்டோம். நீங்க கேட்கறேள். குழந்தையும் ஏக்கம் பிடிச்சுப் போய் உட்கார்ந்திருக்கு... அழைச்சுண்டு போங்கோ..."

சம்பிரதாயமான கையெழுத்து, உறுதி மொழி அடங்கிய கடிதம் — இவற்றுக்குப் பின், ராஜி, சேஷாத்திரியுடன் திருவானைக் காவலுக்குக் காரில் வந்து இறங்கி விட்டாள்.

**ர**ங்கம், குழந்தையைப் பார்த்துப் பார்த்து மலைத்து நிற்கிறாள்.

"என்ன, உங்களைத்தானே! அம்பாள் என்னத்துக்கு மறுபடியும் இது மாதிரி ஒண்ணை சிருஷ்டி பண்ணி அனுப்பணும்? இது, அவனோடக் கல் நெஞ்சத்துக்கு எடுத்துக் காட்டுதானே?"

"எல்லாப் பிறவிகளுக்கும் ஜனனமெடுத்ததுக்கு ஒரு அர்த்தம் இருக்கு ரங்கம்..."

"எங்க உமா பாவம் எதுக்காகப் பொறந்தது, எதுக்காக அப்படிப் பிராணனை விட்டது...?"

"அவ அப்படிப் பொறந்தது — கல்யாணம் தட்டிப் போய்க் காத்திருந்தாலும் நீ எனக்குப் பெண்டாட்டியா வாய்க்க; அப்புறம் உங்க வீட்டுக்கு எதிர் வீட்டுல இருந்தானே... அவன் பேரென்ன?"

"ராஜகோபாலன்... கடங்காரன்..."

"ஆங்... அந்தக் கடங்காரனுக்கு வெண்கல உருளியாலே சிட்சை கொடுக்க..."

"......"

"அது மாதிரி இவளும் ஏதோ ஒரு காரணத்தோடதான் பூமிக்கு வந்திருப்பா. இதப் பாரு... அகிலாண்டேசுவரி எதையும் சும்மா செய்ய மாட்டா..."

அந்த முறை நவராத்திரி...

ரங்கத்தின் ஆயுசுக்கும் மறக்க முடி

கத்தரிக்காய், சாதம் செய்வது போல கோவைக்காய், பெங்களூர்குடமிளகாய் ஆகியவற்றைக் கொண்டும் சாதம் செய்யலாம்.

—விஷி.

யாதது.

கம்மாவா — அவளுடைய உமா அல்லவா திரும்பி வந்திருக்கிறாள்.

குழந்தையின் முகத்தில் எப்போதும் மலர்ந்த சிரிப்புதான்.

ரங்கம், கள்ளிப் பெட்டியில் அதுநாள் வரையில் சிறைவாசம் அனுபவித்துக் கொண்டிருந்த அத்தனை பொம்மைகளையும் எடுத்து வைக்கிறாள்.

ராஜி, ஒவ்வொரு பொம்மையையும் தொட்டுத்தொட்டுப் பார்த்துப்பூரிக்கிறாள்...

"இழு யாழு?"

"இதுதான் கிருஷ்ணன். இது பார்வதி. இது பரமேஸ்வரன். இது பார்த்தியா குறத்தி... உனக்குக் குறத்தி தெரியுமோ... டமுக்கு டப்பான்னுப் பாடிண்டே வருவாளே..."

"இழு?"

"இது டான்ஸ் பாப்பா... இந்தப் பொம்மையைப் பார்த்தியா... தலையத் தொடு... ஆடும் பாரு... தலையாட்டி பொம்மை..."

உற்சாக மிகுதியில் ரங்கம், பொம்மையின் தலையைச் சுட்டு விரலால் தொட, அது முன்னும் பின்னும் ஆட...

குழந்தை இன்னும் பிரகாசமாய்ச் சிரிக்கிறாள்...

"ஐ! இழு நானு... எங்க... எங்க... சித்தி இல்லே சித்தி.... என்னை தஞ்சையாழ்னீன்னு தான் கூப்பிடுவா..."

'தலையாட்டியா?'

ரங்கத்தின் கண்களில் குபுக்கெனக் கண்ணீர். குழந்தையை வாரி அணைத்து, உச்சி முகருகிறாள்.

அந்த வருஷம் ரங்கத்தின் வீட்டுக் கொலு அமர்க்களப்படுகிறது...

சேஷாத்திரி பூஜைக்குப் போனாலும் ரங்கம் தனிமையில் ஏங்கவில்லை. காலையில் குழந்தையைச் சுமந்து கொண்டு கடைத் தெருவுக்குப் போய் ரப்பர் வளையல், கழுத்துக்குப் பிளாஸ்டிக் மணி மாலைகள், இமிடேஷன் நெற்றிச் சுட்டி, லோலாக்கு, நத்து, குஞ்சலம்...

அழுத்தமான டஃபேட்டா சில்க்கில் துணி எடுத்துப் பாவாடை சட்டை...

மல்லிகையும், கனகாம்பரமுமாய் வாங்கி, குழந்தையின் தலைமுடியில் சவுரியும் வாழை நாரும் வைத்துப் பூப்பின்னல்...

எல்லாமே ரங்கத்தின் இஷ்டம்... பெற்ற பெண்களிடம், பேத்திகளிடம் நிறைவேறாத

## இல்லத்தரசிகளின் இனிய தோழி!





துணி துவைக்கும் வேலையை ஏஞ்சல் செய்து விடுவதால் என் குடும்பத்தை நன்றாக கவனித்துக் கொள்ள முடிகிறது.

- முழுவதும் எவர்சில்வர்
- உறுதி கொண்ட கட்டமைப்பு கொண்டது.
- சோப்பு, தண்ணீர், உங்கள் சிரமம், செலவு மிச்சம்.
- மின் செலவோ குறைவு.

5 வருட இலவச சேவை

**ஏஞ்சல்**
வாஷிங் மெஷின்

2 வருட உத்திரவாதம்

ஏஞ்சல் டொமெஸ்டிக் எக்யுப்மெண்ட்ஸ்
கோயமுத்தூர்-641 025

* மாடன் எலக்ட்ரோ மெஷின்ஸ் கார்ப்பரேஷன், ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், கோவை – 18, போன்: 36401/35608. * மார்ஸ் எண்டர்பிரைசஸ், 24 2, பைக்கிராப்ட்ஸ் சாலை, சென்னை – 5, போன்: 84 3018/84 5716. * முத்து செல்வி கார்ப்பரேஷன், கூடலழகர் பெருமாள் கோவில் வடபுறம், மதுரை – 1, போன்: 224 88/224 81. * ஆண்டனி ஏஜென்ஸீஸ், சென்னை – 87, போன்: 4 20898. * ஸ்டேண்டர்டு எலக்ட்ரானிக்ஸ், ஈரோடு – 1, போன்: 73177 & 79615. * சக்தி எலெக்ட்ரிகல் ஒர்க்ஸ், திருச்சி – 13. * செந்தூர் கார்ப்பரேஷன், திருச்சி – 2, போன்: 29261. * ஸ்வர்ணலக்ஷ்மி ஏஜென்ஸீஸ், தஞ்சாவூர் – 1. * ஜான்ஸ்டன் டிரேடிங் கார்ப்பரேஷன், தூத்துக்குடி – 2, போன்: 22935. * மணிமேகலை எண்டர்பிரைசஸ், நெய்வேலி – 3. * விஷால் மார்க்கெட்டிங் அசோசியேட்ஸ், தர்மபுரி. * எஸ். எஸ். அண்ணாமலை எண்டர்பிரைஸ், சென்னை – 41, போன்: 4 15272. * ஸ்ரீ கோகுலம் அண்ட் கம்பெனி, கோடம்பாக்கம், சென்னை – 24, போன்: 4 26296 & 4 26868. * டி. வி. எலக்ட்ரானிக்ஸ், பெரம்பூர், போன்: 619315. * சக்தி ஹோம் நீட்ஸ், 2, ஆற்காடு சாலை, வளசரவாக்கம், சென்னை – 87. * MAPP எம்ப்ளாயீஸ்கன்ஸ்யூமர்கோவாபரேடிவ்ஸ்டோர்ஸ்லிமிடெட் PDPM காலனி, கல்பாக்கம்.

---

## அவசியத் தேவைகளுக்கு அவசர உதவி பெற...

உங்களுக்கு 'எஸ். எல். என்' உதவுகிறது ரூ. 5000 முதல் ரூ. 50,000 வரை சீட்டு வரிசைகள்





நடுத்தர வர்க்கத்தினர், தொழிலதிபர்கள், வணிகப் பெருமக்கள் இப்படி அனைவரது தேவைகளுக்கும் ஏற்ப குறுகிய/நீண்டகால சீட்டுகள். அவசிய தேவைகளுக்கு — இன்றே 'எஸ். எல். என்' சீட்டு வரிசையில் சேர்ந்து பயனடையுங்கள்!

SAM 500




**ஸ்ரீ லக்ஷ்மி நாராயணா** சிட்பண்ட்ஸ்

9சி, பாரதி நகர், வடக்கு உஸ்மான் சாலை தி. நகர், சென்னை 17 (போன் 441339)

இது ஒரு **எஸ்.எல்.என்** குருப் நிறுவனம்

ஆசை... என்றோ ஏக்கச் சுவட்டைப் பதித்து விட்டுப் போன தங்கையின் நினைவு...

மாலை நேரங்களில் கோவிலுக்கு... அக்கம் பக்கத்திலுள்ள வீடுகளுக்கு, குழந்தையின் கையில் குங்குமச் சிமிழைக் கொடுத்து, தானும் அவளுடன் கம்பீரமாய்...

"இது யாரு?"

"இது... இது... என் தங்கை பொண்ணு..."

"இத்தனை நாட்கள் சொன்னதே இல்லையே...? தங்கை எங்கே இருக்கா?"

"அவ போயிட்டா... இவ இத்தனை நாட்கள் அப்பாவோட பம்பாய்லே இருந்தா. குழந்தைய நவராத்திரிக்கு அனுப்பு... ஆசையா இருக்குன்னு எழுதிண்டே இருந்தேன்... இப்பத்தான் மனசு வந்து அனுப்பியிருக்கார்..."

"பொறவியே இப்படியா...?"

"பொறவிதான் இப்படி. ஆனா ரொம்ப சமர்த்து..."

அதற்குமேல் அங்கே நிற்க மாட்டாள். கிளம்பி விடுவாள்...

ஒன்பது நாட்கள் போனது தெரியவில்லை. ராஜி, அவளுடன் இறுக ஒட்டிக் கொண்டு விட்டாள்.

முதலில் 'மாமீ' என்றவள், இப்பொழுது அம்மா என்கிறாள்.

அன்று விஜயதசமி. உமாவுக்கு — தப்பு, தப்பு—ராஜிக்கு ரங்கம், மீனாட்சி மாதிரி கொண்டை போட்டுப் பூவைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள்.

மனைவியின் ஆசையைப் பார்த்து, சேஷாத்திரிக்குப் பயமாகக் கூட இருக்கிறது.

'என்னது இது...? ஊரார் குழந்தை மேல இத்தனைப் பாசம் வச்சுட்டா...?'

அவர் மெதுவாகச் சொல்கிறார்:

"ஏற்கெனவே அவளுக்குத் தலை பல ஹீனமா இருக்கு... கொண்டையையும், அதையும் இதையும் போட்டு... வலிக்கப் போறதுமா..."

"ஏன் ராஜி, வலிக்கிறதா?"

"ஊம்ஹூம்..."

"அச்சச்சோ, என்னது இது...? பாவாடை எல்லாத்தையும் நனைச்சுண்டுட்டே... சரிதான்... வேறதான் மாத்தணும்..."

ராஜி மலரச் சிரித்தபடி நிற்கிறாள்.

அதேசமயம் —

வாசலில் நிழலாடுகிறது.

"சார்..."

---

வெண்ணை பாக்கட்டை இரவு ஒரு பாத்திரத்தில் தண்ணீர் ஊற்றி அதில் போட்டு விட்டுக் காலையில் பிரித்து எடுத்தால் கையிலோ, இலையிலோ, பேப்பரிலோ சிறிது கூட ஒட்டாமல் வரும்.

—ஆர். ஜெயலெட்சுமி.

---

"யாரு...?"

"சேஷாத்திரி சார் வீடு..."

"இதுதான். உள்ளே வாங்கோ..."

ரங்கம், ராஜியை அப்படியே உள்ளே தூக்கிக் கொண்டு நகர...

வந்தவர், தம் கைப்பையை வைத்துவிட்டு, இரு கைகளையும் குவிக்கிறார்.

"நான்... ராஜியோட அப்பா..."

"அடடே... உட்காருங்கோ..."

"காலம்பறதான் மெட்ராஸ்லேருந்து வந்தேன்... லீவு கிடைச்சது. தீபாவளிக்குக் குழந்தைக்கான டிரஸ்ஸைக் குடுத்துட்டுப் போகலாமேன்னு... அங்கே போனா, குழந்தை லீவுக்காக இங்கே இருக்கிறதாச் சொன்னா..."

"ராஜீ..."

சேஷாத்திரி குரல் கொடுக்க — ராஜி, சாயக் கொண்டையும், நெற்றிச் சுட்டியுமாய் மெள்ள எட்டிப் பார்க்கிறாள்.

இதற்குள் ரங்கம், ஒரு தம்ளரில் பாயசத்தை எடுத்துக் கொண்டு, குழந்தையின் கையையும் பற்றிக் கொண்டு வெளியே வர...

வந்தவர் சேஷாத்திரியிடம் சொல்லிக் கொண்டிருக்கிறார்...

"முப்பத்தஞ்சு வயசுல கல்யாணம் பண்ணிண்டேன் சார். லேட் மாரேஜ். என் ஒய்ஃபுக்கும் எனக்கும் பதினைஞ்சு வயசு வித்தியாசம். பத்து வருஷம் குழந்தையே இல்லே. போகாத கோவில் இல்லே; பண்ணாத பூஜை இல்லே... என்னோட நாப்பத்தஞ்சாவது வயசுல என் பெண்டாட்டியோட முப்பத்தாவது வயசுல இவ பொறந்தா.... பட், துரதிர்ஷ்டசாலி சார் நான். இப்படி ஒரு பொண்ணைப் பெத்துக் குடுத்துட்டு ரெண்டாவது நாளே அவ கண்ணை மூடிட்டா..."

"த்சு... த்சு..."

"எங்கம்மா ரெண்டு வருஷம் குழந்தையப் பார்த்துண்டா. அவ காலமும் முடிஞ்சவுடனே, இவளை வளர்க்கறதுக்காகவே ரெண்டாம் கல்யாணம் பண்ணிண்டேன்... அது, நான் செஞ்ச பெரிய தப்பு... அவளாலே இவளை வளர்க்க முடியலே... தனக்கும் குழந்தை இல்லையேன்னு எரிச்சல். இவ மேலே ஆத்திரத்தைக் காமிக்க ஆரம்பிச்சா. அதான் இங்கே கொண்டு வந்து.."

"புரியறது, புரியறது..."

"எனக்கு வயசு அம்பத்தஞ்சாறது சார். இன்னும் ஒரு வருஷத்துல ரிடையராயிடுவேன். பெரிய கம்பெனியில சீஃப் பெர்ஸனல் ஆபீசரா இருக்கேன். எல்லா நிறைவும் இருக்கு. பெத்த பொண்ணைப் பக்கத்துல வச்சுக்க முடியலே. குழந்தையப் பார்க்கறச்சே எல்லாம் — 'உனக்கு வேணும்டா ராஜகோபாலா'ன்னு தெய்வம் சிரிக்கற மாதிரி இருக்கு..."

அந்தப் பெருத்த மனிதரின் தக்காளிப் பழக் கன்னங்களில் ஈரம் பட...

ரங்கம் ஆணி வைத்து அடித்தாற் போல நிற்கிருள்.

''நீ... நீங்க... கொறடாச்சேரி சாம்பன் பிள்ளை ராஜகோபாலனு?''

அவர் எழுந்து நிற்கிருர்.

''ஆமா... நீங்க?''

''ரங்கம்... ரங்கநாயகி... உமாவோட அக்கா...''

அவர், ராஜியைச் சட்டெனத் தூக்கிக் கொள்கிருர்.

''அப்ப... நான் கிளம்பட்டுமா?''

''பாயசத்தைக் குடிச்சுட்டுக் கிளம்புங்கோ.''

ரங்கம், ராஜியைப் பார்த்தபடி சொல்கிருள்.

''நீ வாடி கண்ணு... இலே போட்டிருக்கு. சாப்பிட்டுட்டுக் கிளம்பலாம்...''

சேஷாத்திரி, குழந்தையை வாங்கி ரங்கத்திடம் தருகிருர்.

''உங்கக் குழந்தையாலே எங்க வீட்டுலேயும் ஒம்பது நாட்கள் பண்டிகை போனது தெரியலே... உங்களுக்கு ஒண்ணும் அப்ஜெக்ஷன் இல்லேன்னு தீபாவளிக்குக் கூட நாங்க இவளே இங்கே வரவழைச்சுக்கறோம்...''

ராஜியின் சாப்பிட்ட வாயைத்துடைத்து, கையில் வெற்றிலேப் பாக்குப் பழத்தைக் கொடுத்து — ரங்கம், ராஜகோபாலனிடம் கொண்டு விட...

சேஷாத்திரியும் சட்டையை மாட்டிக் கொண்டு கிளம்புகிருர்...

''அழைச்சுண்டு வந்தாப்பல, கொண்டு விடவும் நான் வரணுமோல்லியோ... அதானே நியாயம்...?''

ராஜகோபாலன் ரங்கத்திடம் எப்படி விடைபெறுவதுஎன்றேதெரியாமல்தவிக்க— குழந்தை அங்கிருந்து கிளம்ப இஷ்டமில்லாமல் சிணுங்க...

எங்கிருந்தோ கனத்த சாரீரத்தில் மகிஷாசுர மர்த்தனி சுலோகம் ஒலிக்கிறது...

''அயிகிரி நந்தினி நந்தித மேதினி
விஸ்வ விநோதினி நந்திநுதே...''

ராஜகோபாலனைப் பார்த்து சேஷாத்திரி சிரிக்கிருர்.

''சுலோகம் எங்கேயிருந்துன்னு பார்க்கிறேளா...? அம்பாள் பக்கத்துலதான் இருக்கா...''

''......''

''என்ன பார்க்கறேள்? நான் அகிலாண்டேசுவரியைச் சொன்னேன். அமுக்கமா உட்கார்ந்து என்னமா விளையாடறு பாருங்கோ...''

ராஜகோபாலனின் தலைக்குனிய, ரங்கம் மறுபடியும் கொலுவின் எதிரில் வந்து, கண்ணீர் மல்க அமருகிருள்...

'அம்பாளுடைய அவதாரங்களை மாதிரி சிருஷ்டிகளும் காரணமில்லாம ஏற்படறதில்லேன்னு அவர் சொல்றது எவ்வளவு நிஜம்?'

மகிஷனை அழிக்க மகிஷாசுரமர்த்தினி...

ஹிமவானுடை கர்வத்தை அழிக்க ஹைமவதி...

சண்டமுண்டனை அழித்த சாமுண்டியும் அவளே......

கம்பனைக் கொன்ற காளியும் அவளே...

இதோ... இதோ... ராஜகோபாலனைப் போன்றவர்களுக்குப் பாடம் கற்பிக்க உமா மகேஸ்வரியாகவும் ராஜேஸ்வரியாகவும் வந்தவள் அவளே... அவளே...

சிருஷ்டிகள் வீணைவதில்லை!

ரங்கம், தன் பெண்கள், பிள்ளைகள், பேரக் குழந்தைகள் அனைவரையும் மறந்து, உட்கார்ந்திருக்கிருள்.

(முற்றும்)

---

## 40,000 த்தில் இரண்டாவது இடம்!

ஜப்பான் நாட்டில் ''கனகலா அரசின்'' குழந்தைகளுக்கான ''அகில உலக ஓவியப் போட்டி'' இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடந்து வருகிறது.

சென்ற ஆண்டின் கடைசியில் நடைபெற்ற 'ஓவியக் கண்காட்சி'யில் 85 க்கும் மேற்பட்ட நாடுகளிலிருந்து 40,000க்கும் மேற்பட்ட குழந்தைகள் வரைந்த ஓவியங்களில் திருச்சி கைலாசபுரம் ஆர். எஸ். கே. மேல்நிலைப்பள்ளியின் 9 ஆம் வகுப்பு மாணவி கே. ஆர்.



கீதா ''வெள்ளிப் பதக்கத்தை''ப் பெற்றுள்ளார். இவர் பெல் நிறுவனத்தைச் சார்ந்த திரு ராமன்குட்டி அவர்களின் புதல்வியாவார்.

கீதா ஏற்கெனவே சங்கர்ஸ் இண்டர்நேஷனல் ஓவியப் போட்டி இந்திய—ரஷ்யா கலாசாரமையப் போட்டி, அகில இந்திய கேமல் ஓவியப் போட்டி, தமிழக அரசின் வனத்துறை நடத்திய ஓவியப் போட்டி, இன்னும் ஏகப்பட்ட போட்டிகளில் பரிசுகளைக் குவித்தவர். இவருடைய பள்ளி ஓவிய ஆசிரியர் கே. கே. சுப்ரமண்யம்.




நவராத்திரி என்பது ஒன்பது நாட்கள் கொண்டாடப்படும் பண்டிகை. ஒன்பது நாட்களிலும் ஒவ்வோர் அம்மனை மனத்தில் எண்ணிப் பெண்கள் வழிபடுவார்கள். சில பெண்கள் பூஜை செய்வதோடு மற்ற பெண் சுமங்கலிப் பெண்களுக்குப் புடைவை, பூ, பழம் முதலியவை கொடுத்தும் நவராத்திரியைக் கொண்டாடுவார்கள்.

நவராத்திரி ஒவ்வொரு நாளும் அம்மனுக்கு விதவிதமாக அலங்காரங்கள் நடைபெறுவதுண்டு. நவராத்திரி நாட்களில் பெண்களும் தங்களை அழகு செய்து பார்த்துக் கொள்வார்கள். ஒவ்வொரு பெண்ணும் ஓர் அம்பிகையின் வடிவம். இறைவன் இறைவி எல்லோருமே நமது இந்த சூட்சும உடம்பிற்குள் இருக்கிறார்கள்.

நவராத்திரியின் போது ஒவ்வொரு நாளும் என்னென்ன புடைவைகளை அணிந்து கொள்வது? அதற்குரிய காரணம் என்ன? என்பதை இங்கு வேத விற்பன்னர் ஒருவர் கூறுகிறார்:

முதல் நாள் இரண்டு வயதுக் கன்னியாக அம்மனை எண்ணி வழிபட வேண்டும். அவள் பெயர் குமாரிகா. குமாரிகா எனக் கூறி அர்ச்சிப்பதால் துக்கமும் ஏழ்மையும் அகலும்.

முதல் நாள் கட்டிக் கொள்ள வேண்டிய புடைவை பச்சை நிறமாக இருந்தால் நல்லது. பச்சை புதனுக்கு ஏற்ற புடைவை. இந்த வருடம் நவராத்திரி முதல் நாள் புதன் கிழமையில் தொடங்குவதால் பச்சை நிறப் புடைவையைக் கட்டிக் கொள்ளலாம். பச்சை நிறம் செழுமையைக் குறிக்கும். சகல சௌபாக்கியங்களையும் அம்மன் தர வேண்டும் என்று எண்ணி வழிபட பச்சை நிறம் சிறப்பான ஒன்றுதான்.

இரண்டாம் நாள் கட்டிக் கொள்ள வேண்டிய புடைவை மஞ்சள் புடைவையாக இருந்தால் நல்லது. மஞ்சள் வியாழ பகவானுக்கு விசேஷமான ஒன்று. மஞ்சள் நிறம் மங்கலத்தைக் குறிக்கும். பெண்களுக்கு மஞ்சள் சுமங்கலித் தன்மையை அடையாளம் காட்டக் கூடிய ஒன்றாகும்.

இரண்டாம் நாள் அம்மனை மூன்று வயதுக் கன்னியாக எண்ணி வழிபட வேண்டும். இந்தக் கன்னிகை த்ரிமூர்த்தி எனப்படுவாள். இவளைப் பூஜிப்பதால் நீண்ட ஆயுள், தர்மம், தனம், அன்பு, தான்யம் முதலியவைகளைப் பெண்கள் பெறுவார்கள்.

மூன்றாம் நாள் வழிபட வேண்டிய அம்மன் நான்கு வயதுக் கன்னியாக எண்ணி வழிபட வேண்டிய கல்யாணி, கல்வி, வெற்றி, சுகம், முதலியவை இந்த அம்மன் அருளால் நமக்குக் கிடைக்கும்.

மூன்றாம் நாள் வெள்ளிக்கிழமையன்று கட்டிக் கொள்ள வேண்டிய புடைவை நீல நிறமாக இருந்தால் நல்லது. வெள்ளிக்கிழமை பெண்களுக்கு விசேஷமாக வழிபடத் தக்க நாளாகும். நீல நிறம்தான் எல்லா

நிறத்துக்கும் அடிப்படை. அண்ணாந்து பார்த்தால் தெரிகிற வானமும், நிலத்திலிருந்து குனிந்து பார்த்தால் தெரிகிற கடலும் நீலம்தான். எண்ணியே பார்க்க முடியாத வானமும், ஆழம் என்ன என்று தெரியாத கடலும் நீலமாக இருப்பது போல் இறைவியை யாரும் கணக்கிட முடியாது. நீல நிறமாய் இறைவியை எண்ணி வழிபடுவதால் வாழ்க்கையில் ஓர் அர்த்தத்தையும், பிடிப்பையும் நம்மால் அறிந்து கொள்ள முடியும்.

நான்காம் நாள் வழிபட வேண்டிய அம்மனை ஐந்து வயது ரோஹிணியாக எண்ணி வழிபட வேண்டும். எல்லா பாவங்களும் இந்த அம்மனால் விலகும்.

நான்காம் நாள் சனிக்கிழமை ஆனதால் அன்று அணிய வேண்டிய புடைவையின் நிறம் கறுப்பாகவோ அல்லது நீலம் கலந்த கறுப்பாகவோ இருந்தால் நல்லது. சனீஸ்வர பகவானுக்கு ஏற்ற நிறம் கறுப்புதான். நீலம் கலந்த கருப்பை அணிந்து கொள்வதில் தப்பு ஒன்றும் கிடையாது. பெண்கள் வளைகாப்பின் போது கூட நீல நிற கறுப்பைதான் அணிந்து கொள்வார்கள்.

ஐந்தாம் நாள் ஞாயிற்றுக்கிழமை என்பதால் அன்று அணிய வேண்டிய புடைவையின் நிறம் இளம் சிவப்பாக இருந்தால் நல்லது. சிவப்பும் மங்கலத்தைக் குறிக்கும் நிறம்தான். சூரிய பகவானுக்குப் பிடித்தமான நிறம் இளம்சிவப்பு. பெண்கள் தங்கள் கணவர் நீண்ட நாள் வாழ நெற்றியில் இட்டுக் கொள்ளும் குங்குமத்தின் நிறமும் சிவப்புதான். காளிகா அம்மனை ஐந்தாம் நாள் ஆறு வயதுக் குழந்தையாக அம்மனை எண்ணி வழிபட வேண்டும். காளியை வழிபட்டால் பகைவர்கள் மறைந்து போவார்கள்.

ஆறாம் நாள் ஏழு வயதுள்ள சண்டிகாவாக அம்மனை எண்ணிப் பூஜை செய்ய வேண்டும். சண்டிகா பூஜையால் வீட்டில் செல்வம் கொழிக்கும். ஆறாம் நாள் அன்று திங்கட்கிழமை. திங்கள் சந்திரனுக்கு உரிய நாள். சந்திரன் குளிர்ச்சியை தரக் கூடியவர். குளிர்ச்சிக்குக் குளிர்ச்சி சேர்க்க இளம் பச்சை, கிளிப்பச்சை ஆடைகளை அணிவது நல்லது.

ஏழாம் நாள் செவ்வாய்க்கிழமை அம்மனை அரக்குக் கலந்த சிவப்பு அல்லது பவளச் சிவப்பு கலந்த புடைவையைக் கட்டிக் கொண்டு வழிபடுவது நல்லது. இந்தச் சிவப்பு மனத்தூய்மையையும் பற்றற்ற தன்மையையும் கொடுக்கக் கூடியது. 'சாம்பவி' என்று அம்மனை ஏழாம் நாளில் எட்டு வயதுக் கன்னிகையாக நினைத்து வழிபட்டால் சொத்துக்கள் தங்கும்.

எட்டாம் நாள் மறுபடியும் புதன் கிழமையாக வருகிறது. இந்த தினத்தில் அம்மனை துர்க்கையாக ஒன்பது வயதுப் பெண்ணாக எண்ணிப் பூஜை செய்ய வேண்டும். துர்க்கை வழிபாட்டால் துக்கம் அகலும். நல்ல பச்சை நிறப் புடைவையைக் கட்டிக் கொள்ளலாம். பச்சையோடு புடைவையின் பார்டர் அரக்கு சேர்ந்திருப்பதும் நல்லது. அரக்குக் கலர் துர்க்கைக்கு ஏற்றது.

ஒன்பதாம் நாள் சரஸ்வதி பூஜையாகக் கொண்டாடப்படுகின்றது. ஸுபத்ரா என்ற பெயரில் பத்து வயதுக் கன்னிகையாக அம்மனை எண்ணி இன்று வழிபட வேண்டும். சரஸ்வதிக்கு ஏற்ற நிறம் வெள்ளைதான். வெள்ளைத் தாமரையில்தான் அவள் வீற்றிருக்கிறாள். ஆனால் சுமங்கலிப் பெண்கள் வெள்ளை நிறப் புடைவையை அணிய மாட்டார்கள். மனத்தூய்மையோடு ஊதா கலர் புடைவையையோ அல்லது ரோஜா நிறப் புடைவையையோ அணிந்து கொள்ளலாம். கல்விக் கண்ணைத் திறக்கக் கூடியவள் சரஸ்வதிதான்.

மேலே சொன்ன புடைவைகளை தாங்கள் அணிவதோடு மற்ற பெண்களுக்குத் தானமும் செய்யலாம்.

— ஹரிதன்

## எலுமிச்சை அவல்



அவல் — 2 ஆழாக்கு.
உப்பு — சிறிது.
கறிவேப்பிலை, கொத்துமல்லி — சிறிது.
பெருங்காயத்தூள் — சிறிதளவு.
எலுமிச்சம்பழம் — 1.

செய்முறை:

அவலில் சிறிது உப்பு நீர் தெளித்துப் பிசிறி வைத்து வாணலியில் எண்ணெய் போட்டுக் கடுகு, உளுத்தம்பருப்பு, கடலைப் பருப்பு தாளித்து அவலைக் கொட்டிக் கிளறி இறக்கும்போது எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து போட்டு இறக்கவும்.

— மஞ்சுளா கிரி

CHARI

# ஜீவநதிகள்

சியாமளாராவ்

5

நீரஜாவும் வனஜாவும் காலேஜிலிருந்து வந்தாயிற்று. காப்பி, டிபன் சாப்பிட்டுவிட்டு மாடிக்குச் சென்று விட்டனர். ஜலஜாவும் கிரிஜாவும் இன்னும் வரவில்லை. அவர்கள் வர இன்று லேட்டாகும் என்று காலையிலேயே சொல்லி விட்டார்கள். ஏதோ விழாவிற்காகப் பிராக்டீஸ் செய்ய வேண்டுமாம். இனிமேல் ஒரு பதினைந்து நாட்களுக்கு ஐந்து மணிக்கு மேல்தான் வருவோம் எனக் கூறியிருந்தார்கள். காமாட்சியும் வராந்தாவிலிருந்த பிரம்பு நாற்காலியில் அன்றைய 'ஹிண்டு' பேப்பரைப் படித்துக் கொண்டிருந்தாள்.

கதவு திறக்கப்படும் சப்தம் கேட்டு, தலையை நிமிர்த்தினாள். பிரகாஷ்தான் வந்து கொண்டிருந்தான். முகம் மலர அவனை வரவேற்றாள் காமாட்சி.

''வாப்பா பிரகாஷ்...! இன்னிக்கு ஆபீஸ் லீவான்னா? இரு காப்பி, டிபன் கொண்டு வர்றேன்.''

''வேண்டாம் பாட்டி, எல்லாம் ஆச்சு. நான் மத்தியானமே லீவு போட்டுட்டுத்தான் வந்தேன். ம்... பாட்டி... வந்து...''

கண்கள் உட்புறமாய், நாலாபுறமும் சுழல, கைகள் ஒன்றையொன்று பிணைந்தும், பிரிந்தும் ஆட்டம் காட்ட, நாற்காலியில் பதிந்து உட்காராமல், நுனியில் பட்டும் படாமலும் அவன் உட்கார்ந்திருந்த விதத்தில், அவன் ஏதோ சொல்ல முயல்வதும், பிறகு தயங்குவதும் நன்றாகப் புரிந்தது காமாட்சிக்கு.

''ஏதாவது சொல்லணுமா பிரகாஷ்? அம்மா சொல்லிவிட்டாளா? என்னப்பா விஷயம்...?''

''அம்மாகிட்டே சொல்லியாச்சு பாட்டி. இங்கே உங்ககிட்டேதான் சொல்லிப் பர்மிஷன் வாங்கணும்னு...''

சொல்லித் தலையைக் குனிந்த பிரகாஷின் முகத்தைப் பார்க்கப் பார்க்க, கொஞ்சம் கொஞ்சமாய், விவரம் புரிந்து, சிரிப்பு வந்தது. பர்மிஷன் என்று சொன்னவுடனேயே நமக்குப் புரிந்திருக்க வேண்டாமோ...? எனத் தனக்குத் தானே நினைத்துக் கொண்டாள்.

''நீருவைக் கூப்பிடணுமா பிரகாஷ்...''

''அ... இல்லே... ஆமாம்... வந்து பாட்டி... நீருவை என்னோட வெளியிலே அழைச்சுண்டு... நீங்க சம்மதம் தந்தால் தான்...''

குறும்புடன் சிரித்தாள் காமாட்சி.

''பிரகாஷ்! நீ ஆசைப்படறதுல தப்பே இல்லே. நாளைக்கே, கல்யாணமானப்புறமா உங்காத்துக்கே வரப்போற பொண்ணுதான். எங்க பிரபுவாட்டமா நினைச்சுண்டுதான் உங்கிட்டே பேசறேன். அதனாலே நான் வெளிப்படையாப் பேசினா தப்பா நினைச்சுக்க மாட்டியே...?''

''பாட்டி! நிஜம்மா நானும் உங்ககிட்டே ரொம்ப ஃப்ரீயா இருக்கறதாலேதான் வந்தேன் பாட்டி. நீங்க சொல்றாப்பல பிரபு வேறே இல்லே. நான் வேறே இல்லே பாட்டி. சொல்லுங்க.''

''சொல்றதை நாசூக்காச் சொல்லணும்னா, இவங்கிட்டே இங்கிலீஷ்லேயே சொல்லிடுவோம். அப்புறமா அவன் பாடு, இஷ்டம்.

''பிரகாஷ்! நீ இத்தனை ஆசையோட வந்திருக்கே. அழைச்சுண்டு வெளியே போக நானும் சம்மதிக்கறேன். ஆனா, ஒரு விஷயம். இந்த எதிர்பார்ப்பும், த்ரில்லும், நீயும், நீரஜாவும் முதல் முதல்லே தனியாச் சந்திக்கற அன்னி ராத்திரி இருக்குமோ...?''

சடாரென்று பாட்டியை நிமிர்ந்து பார்த்தான் பிரகாஷ்.

''இன்னிக்கு இப்படித் தயங்கி, வெட்கப்பட்டு, ஒரு கிளர்ச்சியோட கேக்கற நீ. இன்னிக்கு வெளியில போயிட்டு வந்தப்புறமாவும் அந்த எதிர்பார்ப்பு இருக்கும்னு நினைக்கிறியா?'' அப்புறமா கல்யாணத்துக்குள்ளே இன்னும் ரெண்டு மூணு தடவை போகணும் போல இருக்கும். போய்ட்டு வந்து சகஜமான பின், கல்யாணத்துல என்ன புதுசாத் தோணும்? சொல்லு. எல்லாம் ஒரு தேவையில்லாத சடங்காத் தான் தோணும். மொதல் மொதல்லே ராத்திரி சந்திக்கிறச்சேயும் எதிர்பார்ப்புகள்

அத்தனையும் மறைஞ்சு ஒரே ஒரு எதிர்நோக்குதல்தான் இருக்கும் இல்லையா பிரகாஷ். என்னடா பாட்டி, இப்படி விரிவா நம்மகிட்டே பேசறாளேன்னு தப்பா நினைச்சுக்காதே.

என்னோட எண்ணம் என்னன்னா, இன்னிக்கு நீ எந்தவித உணர்ச்சியோடயும், துள்ளலோடேயும் இருக்கியோ, இந்த உணர்வு கல்யாணத்தன்னிக்கு வரை இருக்கணும்னு. நீங்க தனியா இப்போ வெளியிலே போகாம இருக்கறதுதான் நல்லதுன்னு தோணறது. வாழ்க்கையை ஒரு ஆணும், பெண்ணும் சேர்ந்து நடத்தணும்னு, அதுக்கு எத்தனை பேர், எத்தனை விதமான முஸ்தீபோட ஆரம்பக் காரியங்கள் செய்ய வேண்டியிருக்கு. அவை அத்தனையையும் நீயும், நீருவும் தனித்தனியாப் பார்த்துப் பார்த்து, எப்போ நம்ப கல்யாண நாள் வரும், எப்போ நாம ரெண்டு பேரும் தனித்தனியாச் சந்திப்போம்? அப்போ நான் பேசறதா, அவர் பேசுவாரான்னு, கற்பனைகள்ள திளைச்சு, பலவிதமா மனசுக்குள்ளேயே அதை நினைச்சு, நினைச்சு, அந்தச் சந்தர்ப்பம் வர்றபோது படபடப்போட, மலைச்சு நின்னு, வெட்கத்தோட நீங்க இணையறேளே, அதுக்கு ஈடு வேறே எதுவும் ஆகாதுப்பா பிரகாஷ். அந்த ரஸவாதமா நிகழற எதிர்பார்ப்பை, சந்தோஷத்தை நீங்க ரெண்டு பேரும் முழுக்க, முழுக்க ரசிக்கணும்கறதுதான் என் ஆசை. அதை இழந்துடக் கூடாதுன்னுதான் இத்தனை சொல்றேன்.

''ஒருவேளை நான் சொல்றதைக் கேட்க உனக்குப் பிடிக்கல்லேன்னா, தாராளமாச் சொல்லிடு. உன்னிஷ்டம் போல நடந்துக்கலாம். நீரு உங்க வீட்டுப் பொண்ணுன்னு தீர்மானமாயிட்டதால, நான் இவ்வளவு பேசினதே அதிகம்னு தோணறது.''

நீண்ட பிரசாரம் போல், ஏற்ற இறக்கத்துடன், உணர்ச்சிபூர்வமாய் பேசியதில் மூச்சு வாங்கியது காமாட்சிக்கு.

பிரகாஷோ......? பிரமித்தே போயிருந்தான். பேச நா எழவில்லை. பாட்டியைப் பற்றி அவன் சிறிதே கேள்விப்பட்டிருந்தாலும், வாழ்க்கையின் தொடக்கம் என்பதை எத்தனை ரசனையுடன் ஆரம்பிக்க வேண்டுமென்று, ஓர் ஆழ்ந்த சிந்தனையுடன், ஆத்மார்த்தமாய், அதே சமயம் எதிராளியின் மனமும் புண்படாமல், அதை ஏற்றுக் கொள்ளும் விதத்தில், சொல்லுகின்ற நயத்தில், உள்ள நியாயத்தில் புளகித்துப் போனான்.

''பாட்டீ...''

தழுதழுத்த குரலுடன் கரம் கூப்பி நின்றான் பிரகாஷ்.

''இரு, பிரகாஷ். காப்பி கலந்துண்டு வர்றேன். குடிச்சுட்டுப் போகலாம். உக்காருப்பா.''

மறுபேச்சில்லாமல் உட்கார்ந்தவனுக்கு, அப்போதுதான் உறைத்தது. அப்பா...டி! பாட்டி பேசியது ஃபண்டாஸ்டிக் இங்கிலீஷ் லேன்னா. எப்படி...?

மழிக்கப்பட்ட தலையை, வெள்ளைப் புடைவையால் மூடியபடி, ஒன்பது கஜம் கொசுவம் வைத்துக் கட்டிய பாந்தமான புடைவையில் இந்த வயதான மூதாட்டி எப்படி இவ்வளவு அழகான ஆங்கிலம் பேசினாள்? கண்டிப்பாய் அவள் காலத்தில் ஆங்கிலப் பள்ளிகள் இருந்திருக்க முடியாது. அப்படி இருந்திருந்தாலும் அனுப்பியிருப்பார்களா என்பதே சந்தேகம். அப்படியிருக்க, வீட்டிலேயேவா இந்தப் பாட்டி படித்திருப்பார்? ஆச்சரியம் நெஞ்சை முட்டி, தொண்டையை அடைத்தது.

''இந்தா, காப்பி எடுத்துக்கோ பிரகாஷ்.''

ஈரம் கண்களில் பளபளக்க, ''பாட்டி, உங்களை நினைச்சு சத்தியமாப் பெருமைப்படறேன் பாட்டி. உங்க வீட்டு மாப்பிள்ளையா வர்றதுக்கு நிஜம்மா சொல்றேன், நான்தான் கொடுத்து வச்சிருக்கேன் பாட்டி.

அதேசமயம், ''பாட்டி...'' என்று கூவிய படியே, இரண்டிரண்டு படிகளாய்க் குதித்து, குதித்து ஓடிவந்த நீரஜா, பிரகாஷ் அங்கிருப்பதைப் பார்த்தவுடன், வெட்கத்துடன் ஒரே ஓட்டமாய் மாடிக்குப் போய்விட்டாள் திரும்ப.

குரல் கேட்டு, கண்களைத் திருப்பி நீரஜாவைப் பார்த்தவன், அவள் தன் பார்வையை சந்தித்ததும், சிவந்த முகத்துடன் உள்ளே ஓடியதும், உடலெல்லாம் ஒரு பரவசத்துடன், இன்னதென்று புரியாத உணர்வுடன் சிலிர்க்க, அப்படியே சமைந்து நின்றான்.

''பிரகாஷ்...''

காமாட்சியின் குரல் கேட்டதும் நினைவிற்கு வந்தவன், சட்டென காப்பி டம்ளரைக் கீழே வைத்துவிட்டு, காமாட்சியின் கைகளைத் தன் இரு கைகளாலும் பற்றி, நெற்றியில் ஒற்றிக் கொண்டான்.

''தேங்க்ஸ் பாட்டி. ரொம்ப அனுபவபூர்வமான வார்த்தைகள். தேங்க்ஸ் எ லாட். வர்றேன் பாட்டி. எனக்கு உங்களை மாதிரி பேசத் தெரியலே. ஆனா உணர்றேன் பாட்டி. வர்றேன்.''

காமாட்சி, நிறைந்த மனத்துடன் புன்னகைத்துக் கொண்டே, காப்பி டம்ளரை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

**ஊரி**லிருந்து அரிசி மூட்டைகளும், பருப்பு மூட்டைகளும், புளி, மிளகாய், தனியா என்று சாமான்கள் வந்த வண்ணமாகவே இருந்தன. வரதனும், ஆனந்தியுமாய், பொங



காலி, வேடியுடன் சேர்ந்து அனைத்தையும் நன்றாய் அடுக்கி வைத்தார்கள். பொங்காலி, வேடி, ஆனந்தி, காமாட்சி அனைவருமாய் கல்லும், நெல்லும் பொறுக்கி அரிசியை சுத்தப்படுத்தினார்கள். குழந்தைகளும் சமயம் வந்தபோதெல்லாம் பாட்டிக்கு ஒத்தாசை யாயிருந்தார்கள். வீடு கல்யாணக் களை கட்டி விட்டது.

இன்னும் பாரதியும், நாகநாதனும் வந்த வுடன்தான் புடைவையெல்லாம் வாங்க வேண்டும். வளையல்களும், செயினும், நெக்லஸும், ஐம்பது வருஷங்களாய் பழக்க மான தட்டானைக் கூப்பிட்டு அவனுக்கு ஓர் இடம் ஒதுக்கி, தினமும் சாப்பாடும் போட்டு வீட்டிலேயே செய்யும்படி கூறியாயிற்று. அவன் வேலையும் இன்னும் இரண்டு நாட்களில் முடிந்துவிடும். பரசுராமன் வந்திருந்தபோது, பேங்க் லாக்கரிலிருந்து வெள்ளிப் பாத்திரங்கள் எடுத்து வரச் சொல்லி, அவருடைய உதவியுடனும் யோசனையுடனும் எதை எதைப் பாலீஷ் போட வேண்டும், எதெதை அழித்துச் செய்ய வேண்டும் என்று பேசி, வெள்ளிப் பாத்திரங்களும் செய்யக் கொடுத்தாயிற்று. ஒரு வாரத்தில் வந்துவிடும். இன்னும் பதினைந்தே நாட்கள்தான் இருந்தன கல்யாணத்திற்கு.

அன்று காலையில்தான் பாரதியும், நாகநாதனும் ஏகப்பட்ட சாமான்களுடன் வந்து இறங்கினார்கள். காமாட்சி, பார்த்துப் பார்த்துச் செய்த வெள்ளிப் பாத்திரங்களையும், நகைகளையும் சந்தோஷத்துடன் பார்த்தாள் பாரதி. அன்றே புடைவைகள் வாங்கவும் நீருவையும் கூட்டிக் கொண்டு போனான். கிரிஜா, தன்னுடைய பாவாடையைத் தான்தான் செலக்ட் செய்வேன் என அடம் பிடித்துப் புறப்பட்டாள்.

இவர்கள் வேலைக்குச் சாப்பிட்டுப் போட்ட தட்டை எடுத்து, எச்சிலைத் துடைக்கும் பணியை ஆனந்தி செய்தாள். பரத்திய சாமான்களை மறுபடியும் அழகாய் அடுக்கி வைத்தாள். தண்ணீர் என்றும், காப்பி என்றும் கேட்டவர்களுக்குச் சளைக்காமல் ஓடியாடித் தந்தாள். காமாட்சிக்குக்



கூடமாட, காய்கறி நறுக்கித் தருவது, தேங்காய்த்துருவுவது, மிக்ஸியில் அரைத்துக் கொடுப்பது என்று சுத்துக் காரியம் அத்தனையும் செய்தாள். பிரபுவிடமும் ஒரு சகோதரனிடம் நடந்து கொள்வது போலவே அண்ணா, அண்ணா என்று அழைத்தபடியே, அவன் கேட்டதைச் செய்தாள். ஆனால் இதெல்லாம் பாரதியின் மனத்தில் லேசான ஒரு நெருடலைத்தான் ஏற்படுத்தியது.

யாருமில்லாத நேரத்தில் காமாட்சியிடம் கூறினாள் பாரதி.

''அம்மா! அந்தப் பொண்ணை ஏம்மா வீட்டுக்குள்ளேயெல்லாம் விடறே. அவ அம்மாவோட நடத்தை ரொம்ப மோசமாமே. அவ வயித்துல பொறந்த இது மட்டும் நேரா இருக்கும்னு தோணறதா? வயசுப் பையன் பிரபு இங்கே இருக்கறச்சே, இந்தப் பொண்ணு டான்ஸ் ஆடற மாதிரி இங்கேயும், அங்கேயுமா நடமாடிண்டு வேலை செய்யறது எனக்கு வயத்தைக் கலக்கறது. நாளைக்கு, மறுநாள் ஏதாவது தப்புத் தண்டா வாயிடுத்துன்னா, அவமானமும் அனுபவிப்பும் நமக்குத்தான். அவாளுக்கெல்லாம் அதெல்லாம் வாடிக்கை.''

படபடவென்று பேசிய பாரதியின் பேச்சைக் கேட்ட காமாட்சிக்குச் சிரிப்புத்தான் வந்தது.

''பாரதி! இவ்வளவு ஊர் சுத்தறே. எத்தனையோ அனுபவங்கள் ஏற்பட்டிருக்கும். ஆனாலும் மனசு விசாலமாயில்லையே பாரதி. அனுபவமே போதாது உனக்கு. அவ்வளவுதான்.''

''என்னம்மா நீ. என்னையே குற்றம் சொல்ற மாதிரி பேசறே.''

''குற்றம் சொல்லல்லே பாரதி. இவ்வளவு வயசாச்சே ஒழிய, இன்னும் உனக்கு நீரஜாவுக்கு இருக்கற விவேகம் கூட இல்லாம இருக்கியேன்னுதான் வருத்தமாயிருக்கு. பிரபு வயசுப் பிள்ளை. தப்புத் தண்டா நடந்துடுத்துன்னா அவமானம்கறியே. அப்போ, உன் பிள்ளை கிட்டேயே உனக்கு நம்பிக்கையில்லையா, ம்... சொல்லு, பாரதி.''

''இல்லேம்மா, அதுக்குச் சொல்லல்லே. இந்தப் பொண்ணு அப்படிப்பட்டவளோட பொண்ணாச்சேன்னுதான் நான் பயப்படறேன்.''

''பாரதி, சும்மா சும்மா அதையே சொல்லாதே. ரொம்பத் தப்பும்மா. ஆனந்தி சேத்துல முளைச்ச செந்தாமரைன்னு எனக்குத் தெரியும். நாம செடிகொடிகளுக்கு உரம், எருன்னு போடறோமே. அது என்னென்னு நெனைச்சே. கண்ட கண்ட நரகல்தான். ஆனா அதுலேருந்து தனக்கு வேண்டிய நல்லதை எடுத்துண்டு, தன்னை அந்த நரகல் பாதிக்காமல், செழிச்சு, வளர்ந்து, பூவோ, காயோ எப்படி அள்ளிக் கொட்டறது? அந்தச் செடி மாதிரிதான் இந்த ஆனந்தியும் பாரதி.

''வாய் புளிச்சுதோ மாங்காப் புளிச்சுதோன்னு வார்த்தைகளைக் கொட்டப்படாது. மத்தவாளோட மனசையும் புரிஞ்சுக்கத் தெரிஞ்சுக்கோ பாரதி. அந்தப் பொண்ணு, அவாம்மாவைப் பத்தித் தெரிஞ்சுண்டதும், எங்கிட்டே ஓடி வந்து சொல்லிண்டு எப்படிக் கதறினான்னு உனக்குத் தெரியுமா? இத்தனை மாசமா வர்றாளே, ஒரு தப்பு, ஒரு இத்தனூண்டு தப்பாவது செஞ்சிருக்காளான்னு உன்னால சொல்ல முடியுமா? எப்படி நீருவும், ஜலஜாவும் பழகறாளோ அப்படித்தான் பிரபுகிட்டே இவளும் பழகறா. கல்மிஷம் இல்லாம, பழகற குழந்தைகள்கிட்டே, தப்பைக் கண்டுபிடிச்சு, நீயே அவா மனசைக் களங்கமா ஆக்கிடாதே பாரதி.

கண்ட சினிமாக்களும், கழிசடை நாவல்களும் படிச்சுப் படிச்சு உன் மூளை மரத்துத்தான் போயிருக்கு. எதையும் நேர்ப் பார்வை, பார்க்கவே தெரியாம, குறுக்கு வழியிலேயே மனசு போறது. மாப்பிள்ளை வரப் போறான். இன்னும் மாட்டுப் பொண்ணு வரணும். இந்த வயசுல மனசைத் தெளிவா வச்சிண்டாத்தான், குடும்பத்தைச் சஞ்சலமில்லாம, நடத்த முடியும். இல்லேன்னா மத்தவாளோட சின்ன தப்பு கூட பெரிசாத் தோணி, உனக்கும் நிம்மதியில்லாம, வீடும் நரகமாயிடும். போ. இனிமே இந்த மாதிரி பேசறதையெல்லாம் விட்டுட்டு, ஆகற காரியத்தைப் பாரு. இன்னும் வே.....ண காரியம் பாக்கியிருக்கு.'' என்று குரலைக் கடுமையாக்கிக் கொண்டு கூறிவிட்டுப் போய்விட்டாள் பாட்டி.

(தொடரும்)

---

அடை மாவை எண்ணெய் ஊற்றி வார்க்கத் தேவையில்லை. குக்கரில் பரப்பி வைக்கும் பாத்திரத்தில் பரவலாக எண்ணெய் தடவி அடை மாவைச் சமமாகப் பரத்தி ஆவியில் ஏழு அல்லது எட்டு நிமிடம் வைத்தால் போதும் வெயிட் வால்வ் வைக்க வேண்டாம். இட்லி மாதிரி வெந்த அடையை டைமண்ட் ஷேப்பில் கட் செய்து வைத்துக் கொள்ளவும். அடுப்பில் வாணலி வைத்துச் சிறிதளவு எண்ணெய் விட்டுக் கடுகு, உளுத்தம்பருப்புப் போட்டு வெடித்ததும் இந்தக் கட்லெட்டுகளையும் போட்டு லேசாகப் புரட்டவும். கறிவேப்பிலை போட்டு இறக்கவும். ஆவியில் வேக வைப்பதால் அஜீரணமாக வழியில்லை. பருப்புகளின் புரதச் சத்தும் வீணாவதில்லை.

— கௌரி

# வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் சம்பகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




*கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்
பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !*

B84.55 Tam

வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்







சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட்.

பிரிட்டானியா

rd as a Newspaper in Sri Lanka

# நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி!

அன்னையர், அறிவர்: கேட்பரிஸ் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் அசல் சீனியின் ஊட்ட நலன்களைக் கொண்டது. போர்ன்விடா குழந்தைகள் மிக விரும்பும் அத் தனிச் சுவையை பாலின் குணத்துடன் அளிக்கிறது.

தினமும் போர்ன்விடா அளிக்கப்படும் குழந்தைகள் வேலையிலும் விளையாட்டிலும் கூர்மையோடிருக்கிறார்கள். அது அவர்களுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையும் அளிக்கிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் நலன் அளிக்கிறது.

அதன் தனிச் சுவையுடன் இணைந்திட்ட இன்றைய வளர்ச்சி.

கேட்பரிஸ்
போர்ன்விடா







TAM